# சங்க இலக்கியம் காட்டும் விளிம்புநிலை மக்களின் வாழ்வியல்

**அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு**


**ஆய்வாளர்**

**இரா.சுகுணா**

**(பதிவு எண் : 647)**

**நெறியாளர்**

**முனைவர் இரா.குமார்**

**தமிழ்த் துறை**

**மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரி**

**சிவகங்கை - 630 561**






**தமிழ்த் துறை**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

(தேசியத் தர நிர்ணயக் குழுவின் மறுதர மதிப்பீட்டில் ''ஏ'' தகுதி பெற்றது)

**காரைக்குடி - 630 003**

**தமிழ்நாடு - இந்தியா**

**மார்ச் - 2016**

முனைவர் **இரா.குமார்,**எம்.ஏ.,எம்.பில்.,பி.டி.பிஎச்.டி.,
இணைப்பேராசிரியர்,
தமிழ் உயராய்வு மையம்,
மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரி,
சிவகங்கை.

நாள்:

# நெறியாளர் சான்றிதழ்

**"சங்க இலக்கியம் காட்டும் விளிம்புநிலை மக்களின் வாழ்வியல்"** என்ற தலைப்பில் திருமதி. இரா.சுகுணா அவர்கள் முனைவர் பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு அழகப்பா பல்கலைக்கழகத்தில் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காக அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியல்பாகச் செய்யப் பெற்றது என்றும், இந்த ஆய்விற்காக வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

**(முனைவர் இரா.குமார்)**
**நெறியாளர்**

**இரா.சுகுணா,**
முழுநேர முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ் உயராய்வு மையம்,
மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரி,
சிவகங்கை.

நாள்:

## ஆய்வாளர் உறுதிமொழி

**“சங்க இலக்கியம் காட்டும் விளிம்புநிலை மக்களின் வாழ்வியல்”** என்ற தலைப்பில் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காக அளிக்கப்பெறும் இவ்வாய்வேடு எனது சொந்த முயற்சியினால் உருவானதென்றும், இவ்வாய்வேடு இதற்கு முன்னர் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

**(இரா.சுகுணா)**
**ஆய்வாளர்**

உறுதிக் கையொப்பம்
பேரா.முனைவர்.**இரா.குமார்,**எம்.ஏ.,எம்.பில்.,பி.டி.பிஎச்.டி.,
இணைப்பேராசிரியர்,
தமிழ் உயராய்வு மையம்,
மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரி,
சிவகங்கை.

# நன்றியுரை

**"சங்க இலக்கியம் காட்டும் விளிம்புநிலை மக்களின் வாழ்வியல்"** என்னும் தலைப்பில் இந்த ஆய்வினை மேற்கொள்ள எனக்கு அனுமதியளித்த அழகப்பா பல்கலைக்கழக **துணைவேந்தர், பதிவாளர்** ஆகிய இருவருக்கும் என் உள்ளம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முனைவர் பட்டம் பயில்வதற்கு வாய்ப்பளித்த மன்னர் துரைசிங்கம் அரசு கலைக் கல்லூரியின் **முதல்வர் (பொறுப்பு) சீ.ஜெகன்னாதன்** அவர்களுக்கு என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது ஆய்வினைச் செம்மையுற முடிப்பதற்கு முழு ஒத்துழைப்பு நல்கிய தமிழ்த்துறைத்தலைவர் **முனைவர் வி.கிளாட்சன்** அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வாளராக என்னை ஏற்று இந்த ஆய்வு செம்மையாக நிகழ்ந்தேற எனக்கு இன்முகத்துடன் நன்னெறிகாட்டிப் பல வகையிலும் உதவிகள் புரிந்த மதிப்பிற்குரிய ஆய்வு நெறியாளர் **முனைவர் இரா.குமார்** அவர்களுக்கு நான் என்றென்றும் நன்றி நவிலக் கடப்பாடுடையேன்.

எம் கல்லூரித் தமிழ் உயராய்வுத்துறையில் பணியாற்றி வரும் இருபால் பேராசிரியர்களுக்கும் என்றென்றும் நன்றிகூறக் கடப்பாடுடையேன். முனைவர் பட்ட ஆய்வாளர்களாகிய **கு.பிரபாகரன், இரா.பிரபாவதி** ஆகியோருக்கும் என் நன்றியினை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

என்னை ஈன்றெடுத்து முனைவர்பட்டம் வரை தரம் உயர்த்திய என் **தந்தை கரு.இராஜேந்திரன், தாய் இரா.பொற்செல்வி** அவர்களுக்கும், என் **சகோதரிகள் இரா.ரேகாசுதன், இரா.உமாசங்கர், சகோதரன் இரா.சரவணன்** அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுப்பணியின் இடையூறுகள் அனைத்தையும் பொறுத்து, என் வாழ்வின் வளர்ச்சிக்கு உறுதுணையாக இருக்கும் **அன்புக்கணவர் திரு.த.மதன்** அவர்களுக்கும், **மாமா, அத்தை, சுப.இராதாகிருஷ்ணன்-தேவி, சுப.தமிழ்ச்செல்வன்-சாந்தி** ஆகியோருக்கும், என் குழந்தைச் செல்வங்களுக்கும் நன்றிகள் பற்பல.

இளங்கலைத் தமிழ் இலக்கியம் பயின்ற காலத்திலிருந்து என் கல்வி வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து என் வாழ்வினைச் செம்மைப்படுத்திய மரியாதைக்குரிய **மாமா திரு.இரா.சுதன்** அவர்களுக்கு என் ஆயுட்கால நன்றியினைச் சமர்ப்பிக்கிறேன்.

ஆய்வின் தொடக்க காலத்தில் எனக்கு உதவிய **அழகப்பா அரசு கலைக் கல்லூரிப் பேராசிரியர்கள்** அனைவருக்கும் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்விற்கான தரவுகளைச் சேகரிக்க உதவிய அழகப்பா அரசு கலைக்கல்லூரி தமிழ்த்துறை நூலகம், மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரி தமிழ்த்துறை நூலகம், அழகப்பா பல்கலைக்கழக நூலகம்,

திருச்சி பாரதிதாசன் பல்கலைக்கழக நூலகம் ஆகிய நூலகங்களின் நூலகர்களுக்கு என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வினைச் செம்மையுறக் கணினியில் அச்சாக்கம் செய்தளித்த **அக்கா சாந்தி பாண்டியன்** அவர்களுக்கும், கட்டமைப்புச் செய்தளித்த பூச்சரம் பிரிண்டர்ஸ்க்கும் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**ஆய்வாளர்**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகநா. | - | அகநானூறு |
| இனியவை | - | இனியவைநாற்பது |
| இன்னா. | - | இன்னாநாற்பது |
| இறை. | - | இறையனார் அகப்பொருள் |
| உ.ஆ. | - | உரையாசிரியர் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கலி. | - | கலித்தொகை |
| குறள். | - | திருக்குறள் |
| குறுந். | - | குறுந்தொகை |
| குறிஞ்சிப். | - | குறிஞ்சிப்பாட்டு |
| கூத்தராற். | - | கூத்தராற்றுப்படை |
| சிறுபாண். | - | சிறுபாணாற்றுப்படை |
| சு.நா. | - | சுவாமிநாதம் |
| தமிழ்நெறி.வி. | - | தமிழ்நெறி விளக்கம் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| தொல்.அகம்.நூ. | - | தொல்காப்பியம் அகத்திணையியல் நூற்பா |
| தொல்.புறம்.நூ. | - | தொல்காப்பியம் புறத்திணையியல் நூற்பா |
| தொல்.களவு.நூ. | - | தொல்காப்பியம் களவியல் நூற்பா |
| தொல்.கற்பு.நூ. | - | தொல்காப்பியம் கற்பியல் நூற்பா |
| தொல்.பொருள். | - | தொல்காப்பியம் பொருளதிகாரம் |
| தொ.வி. | - | தொன்னூல் விளக்கம் |

| | | |
|---|---|---|
| நற். | - | நற்றிணை |
| நம்பியகப். | - | நம்பியகப்பொருள் |
| நூ.ஆ. | - | நூலாசிரியர் |
| நெடுநல். | - | நெடுநல்வாடை |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பட்டினப். | - | பட்டினப்பாலை |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| ப.வி.இ. | - | பதிப்பு விவரம் இல்லை |
| புறநா. | - | புறநானூறு |
| புறப்பொருள். | - | புறப்பொருள் வெண்பாமாலை |
| பெரும்பாண். | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருந. | - | பொருநராற்றுப்படை |
| மதுரைக். | - | மதுரைக்காஞ்சி |
| மு.வீ. | - | முத்துவீரியம் |
| முல்லைப். | - | முல்லைப்பாட்டு |
| மொ.பெ.ஆ. | - | மொழி பெயர்ப்பு ஆசிரியர் |
| வீ.சோ. | - | வீரசோழியம் |

# பொருளடக்கம்

## முன்னுரை

சங்க இலக்கியம் தமிழரின் பெருமையையும், அவர்களின் வாழ்வியலையும் திறம்பட எடுத்துரைக்கின்றது. அவ்விலக்கியங்கள் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே எழுந்தவையாகும். அவற்றை உற்று நோக்குகிற பொழுது அக்காலத்தில் வேட்டையாடும் இனக்குழுச் சமுதாயமும், ஆடு மேய்க்கும் இனக்குழுச் சமுதாயமும் மறைந்து தனிச் சொத்துரிமை உடைய சமுதாயம் தோன்றிய நிலை புலனாகும். இச்சமுதாயத்தில் வாழ்ந்த மக்களிடையே ஏற்றத்தாழ்வுகள் தோன்றியுள்ளன. ஒவ்வொரு நிலத்திலும் பொருளாதாரத்தில் மேம்பட்டு விளங்கிய மக்களால் நெருக்கடிக்கு உள்ளாகி வாழ்ந்த ஒரு பகுதி மக்கள் விளிம்புநிலை மக்கள் எனப் பெயராக்கம் பெறுகின்றனர். அவர்கள் அக்காலச் சமுதாயத்தில், விளிம்பு நிலையில் வாழ்ந்துள்ளனர். அவர்களின் வாழ்வியலை ஆராய்ந்து கூறுவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

### ஆய்வுத் தலைப்பு

**‘சங்க இலக்கியம் காட்டும் விளிம்பு நிலை மக்களின் வாழ்வியல்’’** என்பது இவ்வாய்வின் தலைப்பாகும்.

### ஆய்வு நோக்கம்

தொல்காப்பியர் நிலங்களை நால்வகைப்படுத்துவர். ஆனால் அகப்பொருள் கூறும் இலக்கியங்கள் நிலத்தினை ஐவகைப்படுத்தும். தமிழகத்தில் பாலை நிலம் என்ற ஒன்று இல்லை என்பதைத் தொல்காப்பியர் கருத்தால் உணரமுடியும். மருதம், நெய்தல் பாடல்களில் பாலை நிலத்தைப்

பற்றிய குறிப்புகள் இல. குறிஞ்சி, முல்லைப் பாடல்களில் பாலைநிலக் குறிப்புகள் உள்ளன. ஆகவே இவ்விரு நிலமே வேனிற்காலத்தில் வளம் இழந்து பாலையாக உருமாறி இருக்கக்கூடும். இவ்வைந்து நிலங்களில் வாழ்ந்த மக்களுள் சிலர் பொருளாதார அடிப்படையில் விளிம்புநிலையில் வாழ்ந்திருக்கக்கூடும். அவர்களின் வாழ்வியல் முறைகள் எவ்வாறு இருந்தன, அவர்களுக்கும் அவ்வவ் நிலங்களின் மேன்மை பெற்றிருந்த அதிகார வர்க்கத்தினருக்கும் இடையே இருந்த தொடர்புகள் யாவை? ஒவ்வொரு நிலத்திலும் வாழ்ந்த விளிம்புநிலை மக்களிடையே தொடர்புகள் இருந்தனவா? அக்காலச் சமுதாயத்தில் விளிம்புநிலை மக்களுக்கு ஏதேனும் வன்முறை நிகழ்ந்ததா? விளிம்புநிலை மக்கள் எய்திய இன்னல்கள் எவை? விளிம்புநிலை மக்கள் மேம்பாட்டிற்கு அரசர்கள் வகுத்த வழிமுறைகள் எவை? என்பதை நுண்ணிதின் ஆராய்ந்து விளக்குவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

**ஆய்வு மூலங்கள்**

எட்டுத் தொகையும் பத்துப்பாட்டும் உள்ளடங்கிய தொகுப்பே சங்க இலக்கியமாகும். இதன்கண்ணுள்ள 18 நூல்களும் இவ்வாய்விற்குரிய முதன்மைச் சான்றாதாரங்களாகின்றன. சங்க இலக்கியம் தொடர்பான ஆராய்ச்சிக் கட்டுரைகள், இப்பொருள் குறித்த ஏனைய திறனாய்வுக் கட்டுரைகள், ஆய்வு நூல்கள், அகராதிகள், வாழ்வியற்களஞ்சியங்கள், இதழ்கள், ஆங்கில நூல்கள் ஆகியன இவ்வாய்விற்குரிய துணைமைச் சான்றாதாரங்களாகும்.

**ஆய்வு எல்லை**

சங்க இலக்கியத்தில் அகநூல்கள் எட்டு (நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு, முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை) உள. புறநூல்கள் மூன்று (புறநானூறு, பதிற்றுப்பத்து, மதுரைக்காஞ்சி) உள. அகப்புற நூல்கள் இரண்டு (பரிபாடல், நெடுநல்வாடை) உள. ஆற்றுப்படை நூல்கள் ஐந்து (திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, கூத்தராற்றுப்படை) உள. இப்பதினெட்டு நூல்களும் இவ்வாய்விற்குரிய ஆய்வு எல்லையாக அமைகின்றன.

**முன்னைய ஆய்வுகள்**

சங்க இலக்கியத்தில் பல்வேறுபட்ட ஆய்வுகள் நிகழ்ந்துள்ளன. இவ்வாய்வுகள் எல்லாம் சங்க காலச் சமுதாயத்தை உணர்த்துவதற்கு வாயிலாக அமைகின்றன. வ.சுப.மாணிக்கனாரின் ‘தமிழ்க்காதல்’, க.ப.அறவாணனின் ‘அற்றைநாட்காதலும் வீரமும்’, ந.சுப்பிரமணியனின் ‘சங்க கால வாழ்வியல்’, கா.சுப்பிரமணியனின் ‘சங்ககாலச் சமுதாயம்’, பக்தவத்சல பாரதியின் ‘சங்ககால சமய விழாக்கள்’, மயிலை சீனி.வேங்கடசாமியின் ‘சங்க காலத் தமிழக வரலாற்றில் சில செய்திகள்’, இராமநாதன் செட்டியாரின் ‘சங்ககாலத் தமிழர் வாழ்க்கை’, பெ.மாதையனின் ‘சங்ககால இனக்குழுச் சமுதாயமும் அரசு உருவாக்கமும்’ ஆகியவை சங்ககால மக்களின் வாழ்வியல் தொடர்பானவை ஆகும். இவ்வாய்வுகளிலிருந்து வேறுபடும்

வகையில் சங்க இலக்கியம் காட்டும் விளிம்புநிலை மக்களின் வாழ்வியல் என்ற ஆய்வு நிகழ்த்தப்படுகிறது.

**ஆய்வு அணுகுமுறை**

ஆய்வின் வளர்ச்சிக்கும், சிறப்பிற்கும் உகந்ததாய் அமைவது இவ்வாய்வு மேற்கொள்ளப் பயன்படும் ஆய்வு அணுகுமுறையாகும். இவ்வாய்வில் ஐந்து அணுகுமுறைகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. அவை, பகுப்பாய்வு அணுகுமுறை (Analytical Approach), விளக்கவியல் அணுகுமுறை (Discriptive Approach), வரலாற்றியல் அணுகுமுறை (Historical Approach), சமுதாயவியல் அணுகுமுறை (Socialogical Approach), ஒப்பாய்வு அணுகுமுறை (Comparative Approach) என்பனவாகும்.

**ஆய்வுப் பகுப்பு**

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளன. அவை,

1. சங்ககாலச் சமூக அமைப்பும் விளிம்புநிலை மக்களும்
2. இலக்கணங்களில் விளிம்புநிலை மக்கள்
3. சங்க அக இலக்கியங்களில் விளிம்புநிலை மக்களின் வாழ்வியல்
4. சங்கப் புற இலக்கியங்களில் விளிம்புநிலை மக்களின் வாழ்வியல்
5. ஆற்றுப்படை நூல்களில் விளிம்புநிலை மக்களின் வாழ்வியல்

என்பனவாகும்.

முன்னுரையில் ஆய்வுத் தலைப்பு, ஆய்வு நோக்கம், ஆய்வு மூலங்கள், ஆய்வு எல்லை, முன்னைய ஆய்வுகள், ஆய்வு அணுகுமுறை, ஆய்வுப்பகுப்பு ஆகியன இடம்பெற்றுள்ளன.

**‘சங்க காலச் சமூக அமைப்பும் விளிம்புநிலை மக்களும்’** என்பது முதலாமியலாகும். சங்ககால மக்களின் நிலஅமைப்பு, வாழ்வியல்முறை, சாதி அமைப்பு, நில அடிப்படையில் மக்கள் வாழ்வு, சடங்குகள், பழக்க வழக்கங்கள் விளிம்புநிலை மக்களைப் பற்றிய செய்திகள் இவ்வியலில் விளக்கம் பெறுகின்றன.

**‘இலக்கணங்களில் விளிம்புநிலை மக்கள்’** என்பது இரண்டாமியலாகும். அகப்பொருளை இயம்பும் இலக்கண நூல்களான தொல்காப்பியம், இறையனார் அகப்பொருள், வீரசோழியம், நம்பியகப்பொருள், தமிழ்நெறி விளக்கம், தொன்னூல் விளக்கம், முத்துவீரியம், சுவாமிநாதம் ஆகிய எட்டுநூல்களில் இடம்பெற்றுள்ள விளிம்புநிலை மக்களைக் குறித்த பதிவுகள் இவ்வியலில் ஆராய்ந்து விளக்கப்பட்டுள்ளன. தொல்காப்பியம் தவிர்ந்த பிற இலக்கண நூல்கள் சங்க காலத்திற்கு பிற்பட்ட காலத்தில் தோன்றியவை. இருப்பினும் சங்க காலத்தில் வாழ்ந்த மக்களின் வாழ்வியல் நீட்சி அக்காலத்திற்குப் பின்னர் தோன்றிய இலக்கண நூல்களில் எவ்வாறு பதிவு செய்யப்பட்டுள்ளன என்பதனை இவ்வியல் ஆராய்ந்து விளக்குகிறது.

**‘சங்க அக இலக்கியங்களில் விளிம்புநிலை மக்களின் வாழ்வியல்’** என்பது மூன்றாமியலாகும். சங்க கால மக்கள் தாம் வாழும் நிலத்திற்கேற்ப திணை வாழ்க்கை மேற்கொண்டுள்ளனர். ஐவகை நிலங்களிலும் விளிம்புநிலை

மக்கள் வாழ்ந்துள்ளனர். கூத்தர், கோடியர், வயிரியர், பாணர், பொருநர், ஆடல்மகளிர், பாடினி, குறவன், புனவன், அகவன் மகளிர், துணங்கையர், கட்டுவிச்சி, யானைப்பாகர், தேர்ப்பாகன், ஊர்க்காப்பாளர், காலங்கணிப்போர், பள்ளியறைக்காவலர், புலைத்தி, தச்சன், கொல்லன், உழவர், உழத்தியர், அரிநர், களைஞர், களமர், பருத்திப் பெண்டிர், பரதவர், உமணர், வலைஞர், கள்ளடுமகளிர், எயினர், எயிற்றியர், ஆறலைக்கள்வர், கிணறு தோண்டுபவர், மறவர், காரோடன், கலைக்கூத்தாடுபவர்கள், கொண்டிமகளிர், பரத்தையர் ஆகிய 39 பேர் சங்க அகப்பாடல்களில் விளிம்புநிலை மக்களாகப் பதிவு செய்யப்பட்டுள்ளனர். அவர்கள் குறித்த பதிவுகள் இவ்வியலில் திறம்பட ஆராய்ந்து கூறப்பட்டுள்ளன.

**‘சங்கப் புற இலக்கியங்களில் விளிம்புநிலை மக்களின் வாழ்வியல்’** என்பது நான்காமியலாகும். புறநூல்கள் புறப்பொருள் பற்றிப் பேசப்படுவனவாகும். இவற்றில் மன்னர்களின் வீரம், கொடைச்சிறப்பு, வாழ்க்கை முறை மற்றும் போர்த்திறம் ஆகியவை குறிப்பிடப்படுகின்றன. பத்துப்பாட்டு, எட்டுத்தொகை ஆகிய இரண்டினுள் அமைந்த புறநூல்கள் மூன்றனுள் விளிம்புநிலை மக்கள் பற்றிய பதிவுகள் உள. கூத்தர், வயிரியர், கண்ணுளர், துணங்கையர், பாணர், பொருநர், விறலியர், புனவன், ஊர்க்காப்பாளர், தச்சன், கொல்லன், உழவர், களமர், தொழுவர், அரிநர், அறைநர், பரத்தையர், பூவிலைப்பெண்டிர், நெசவாளர், பருத்திப்பெண்டிர், கலிங்கம் பகர்நர், புலைத்தி, பரத்தியர், யானைப்பாகர், நாழிகைக்கணக்கர், வலைஞர், கொண்டிமகளிர், கிணறு தோண்டுபவர் ஆகிய 28 பேர் அப்புறநூல்களில் விளிம்புநிலை மக்களாக பதிவு செய்யப்பட்டுள்ளனர்.

அவர்களின் வாழ்வியற் பதிவுகள் இவ்வியலில் ஆராய்ந்து புலப்படுத்தப்பட்டுள்ளன.

**'ஆற்றுப்படை நூல்களில் விளிம்புநிலை மக்களின் வாழ்வியல்'** என்பது ஐந்தாமியலாகும். ஆற்றுப்படை நூல்களில் கோடியர், வயிரியர், கண்ணுளர், பாணர், பொருநர், விறலியர், குறவன், யானைப்பாகர், தச்சன், கொல்லர், உழவர், களமர், களைஞர், அரிநர், வலைஞர், நுளைத்தியர், கள்ளடுமகளிர், உமணர், எயிற்றியர், மறவர் ஆகிய 20 பேர் விளிம்புநிலை மக்களாக குறிக்கப் பெற்றுள்ளனர். அவர்கள் குறித்த வாழ்வியற் பதிவுகள் இவ்வியலில் திறம்பட ஆராய்ந்து விளக்கப்பட்டுள்ளன.

ஒவ்வொரு இயலுக்குப் பின்னரும் சான்றெண் விளக்கம் இடம்பெறுகிறது. ஆய்வில் கண்ட முடிவுகள் முடிவுரையில் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன. ஆய்வுக்குப் பயன்பட்ட நூல்கள் துணைநூற்பட்டியலில் இடம்பெற்றுள்ளன. அதனையடுத்து பின்னிணைப்பில் அட்டவணைகள் இடம்பெறுகின்றன.

## இயல்-1

## சங்க காலச் சமூக அமைப்பும் விளிம்புநிலை மக்களும்

### முன்னுரை

"கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளோடு முன்தோன்றிய மூத்தகுடி"[1] என்ற அடிகள் தமிழினத் தொன்மையைப் புலப்படுத்தும். தமிழர்கள் தாங்கள் வாழ்ந்த நிலத்திற்கேற்ப வாழ்க்கைமுறையையும், பண்பாட்டையும் அமைத்துக் கொண்டனர். அவற்றைத் தொல்காப்பியமும், சங்க இலக்கியங்களும் திறம்பட விளக்கியுள்ளன. அவற்றைத் தெளிவுற ஆராய்ந்து உணர்த்துவதே இவ்வியலின் நோக்கமாகும்.

### முல்லைநில மக்கள்

ஆடு, மாடு மேய்த்தலைத் தொழிலாகக் கொண்ட கோவலராகிய இடையர் பாலைக் கொடுத்து பாற்சோற்றைப் பெற்றுச் சென்றனர்.

**"பாலொடு வந்து கூழொடு பெயரும்**
**ஆடுடை இடை மகன்"** (குறுந்.221:3-4)

என்ற அடிகள் உணர்த்தும். இவர்கள் அறம்பிறழா நெஞ்சத்தவர் என்பதை,

**"அறவை நெஞ்சத்து ஆயர்"** (புறநா.340:1)

எனப் புறநானூறு கூறும். இடையர் அறம் புரியும் நெஞ்சை உடையவர். தமிழரின் வாழ்க்கை அறத்தொடு கூடியதாக இருந்தது. முல்லைநில மக்கள் எண்ணம், சொல், செயல் ஆகிய மூன்றும் உள்ளார்ந்த பண்பாகப் பெற்று,

**"மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்**
**ஆகுல நீர பிற"** (குறள்.44)

என்ற வள்ளுவரின் வாக்கிற்கேற்ப எண்ணத்தின் எழுச்சிக்கு நிலைக்கலனாக உள்ள மனம் மாசற்றதாகவும், அதனால் தூய்மை மேலோங்கிய நிலையினைத் தம் வாழ்வில் பெற்றிருந்தனர் என்பதும் தெளிவாகும்.

ஆயர் காலை நேரத்தில் மோர் விற்றுள்ளனர். ஆயர்கள் தங்கள் இல்லங்களில் தங்கிய விருந்தினர்க்கு நண்டினது சிறிய பார்ப்புத் திறனையொத்த தினை அரிசியால் ஆக்கிய சோற்றைப் பாலுடன் கொடுத்துள்ளனர். அதனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

**"ஆம்பி வால் முகையன்ன கூம்புமுகிழ்**

**உறைஅமை நீந்தயிர் கலக்கி, நுரைதெரிந்து,**

**புகர்வாய்க் குழிசி பூஞ்சுமட் டிரீஇ**

**நாள் மோர் மாறும் நல்மாமேனி**

**மடிவாய்க் கோவலர் குடிவயிற் சேப்பின்,**

**இருங்கிளை நண்டின் சிறுபார்ப்பன்ன**

**பசுந்தினை மூரல் பாலொடும் பெருகுவீர்"**

**(பெரும்பாண்.148-154)**

என்ற அடிகளால் சுட்டுவர். ஆயர்களின் வாழ்க்கை முறையினையும் அவர்களின் விருந்தோம்பல் பண்பினையும் இவ்வடிகள் சிறப்பாகக் கூறுகின்றன. இடைமகன் ஆடுமாடுகளை ஓட்டிக்கொண்டு செல்லுகையில் பல மலர்களைச் சூடிக்கொள்வதனை கச்சிப்பேட்டு இளந்தச்சனார்,

**"குறுங்கால் குரவின் குவியிணர் வான்பூ**

**ஆடுடை இடைமகன்"** **(நற்.266:2-3)**

என்ற அடிகளால் சுட்டுவர்.

**குறிஞ்சி நில மக்கள்**

மலைநாட்டில் வாழும் மக்கள் குறவர் எனப்படுவர். இவர்கள் கானவர் என்றும் பெயர் பெறுவர். இவர்கள் பெரும்பாலும் வேட்டுவர்களே. இவர்களில் பெண்பாலர் குறத்தி, கொடிச்சி எனப்பட்டனர். தினையே குறிஞ்சி நிலத்தில் விளையும் முக்கியத் தானியமாகும். குறவர்தம் உழைப்பின் பயனாக முதிர்ந்த தினையைக் காவல் செய்வர். அவர்கள் உயர்ந்த பரணிலே ஏறி யானைகள் மீது கவணுமிழ் கற்களை வீசுவர். அதனைப் பெருங்கௌசிகனார்,

> **"புலந்து புளிறுபோகிய புணஞ்சூழ் குறவர்**
> **உயர் நிலையிதன மேறிக், கையுடையூஉ,**
> **அகல்மலை இறும்பில் துவன்றிய யானைப்**
> **பகனிலை தளிர்குங் கவணுமிழ் கடுங்கல்**
> **இருவெதிர் ஈர்ங்கழை தத்தி, கல்லெனக்**
> **கருவிர லூகம் பார்ப்போ டிரிய**
> **வயிர்செகு மரபின் கூற்றத் தன்ன**
> **உரும், விசை தவிராது, மரம்மறையாக்கழிமின்"**

(கூத்தராற்.209-210)

என்ற பாடலடியால் விளக்குவர். மேலும் மாங்குடிமருதனார்,

> **"மணிப்பூ அவரைக் குரூஉத்தளிர் மேயும்**
> **ஆமா கடியும் கானவர் பூசல்,**
> **சேணோ னகழ்ந்த மழவாய்ப் பயப்பின்**
> **வீழ்முகக் கேழலட்ட பூசல்"** (மதுரைக்.292-295)

என்ற அடிகளால் விளக்குவர். குறவர்கள் எறிந்த கவண்கற்கள் அவர்களால் தோண்டப்பட்ட குழிகளில் வீழ்ந்த பன்றிகளைக் கொல்லும் என்ற கருத்து ஈண்டு விளக்கப்பட்டுள்ளது. குறவர்கள் மலைப்பகுதிகளில் குடிசைகள் அமைத்து வாழ்ந்துள்ளதை,

**"செலும்பல் யாணர்ச் சிறுகுடிப் படினே" (கூத்தராற்.156)**

**"மால்வரை இழிதரும் தூவெள்ளருவி**

**ஏல்முகத் ததும்பும் பண்மணிக்கானற் சிறுகுடி" (குறுந்.95:1-2)**

**"மழை விளையாடுங் குன்று சேர் சிறுகுடி" (குறுந்.108:6)**

**"இயற்கை கமழுமெஞ் சிறுகுடி" (குறுந்.355:6)**

**"காந்தள் அம் சிறுகுடி" (குறுந்.373:7)**

என்ற அடிகள் மெய்ப்படுத்தும்.

**மருதநில மக்கள்**

வளமார்ந்த மருதநில மக்கள் ஏனையோரினும் நாகரீகத்தில் மேம்பட்டவர் ஆவர். நீர்வளம் மிக்க நிலப்பரப்பில் வாழும் இவர்கள் உழவர், உழத்தியர், கடையர், கடைச்சியர் என அழைக்கப்பட்டனர். சங்க காலத்தில் உழவே தலையாயத் தொழிலாக விளங்கிற்று. மன்னரின் வெற்றி உழவரின் கலப்பையையே நம்பியிருந்தது. இதனை வெள்ளைக்குடி நாகனார்,

**"பொருபகை தரூஉங் கொற்றமும், உழுபடை**

**ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே!**

**மாரி பொய்ப்பினும், வாரி குன்றினும்,**

**இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும்**

**காவலர்ப் பழிக்கும் இக் கண்ணகன் ஞாலம்;**

**அது நற்கு அறிந்தனையாயின், நீயும்**

**நொது மலாளர் பொது மொழி கொள்ளாது,**

**பகடு புறந்தருநர் பாரம் ஓம்பிக்**

**குடிபுறம் தருகுவையாயின், நின்**

**அடிபுறத் தருகுவர் அடங்கா தோரே''** **(புறநா.35:25-34)**

என்ற பாடலடியால் விளக்குவர்.

உழவர்கள் வாழ்ந்த இடம் பேரூர் என அழைக்கப்பட்டதைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

**''தொல்பசி யறியாத் துளங்கா விருக்கை**

**மல்லல் பேரூர்''** **(பெரும்பாண்.253-254)**

என்ற அடிகளால் விளக்குவர். உழவர்களின் விதை விதைத்தல், களையெடுத்தல், அறுவடை செய்தல் முதலிய நிகழ்ச்சிகளைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

**''பைஞ்சாய் கொன்ற மண்படு மருப்பின்**

**காரேறு பொருத கண்ணகன் செறுவின்**

**உழாஅ நுண்டொளி நிரவிய வினைஞர்**

**முடிநா றழுத்திய நெடுநீர்ச் செறுவில்''** **(பெரும்பாண்.209-212)**

**''தொடுப்பெறிந் துழுத துளர்படு துடவை**

**அரிபுகு பொழுதின்''** **(பெரும்பாண்.201-202)**

**“நீங்கா யாணர், வாங்குகதிர்க்கழனிக்**

**கடுப்புடைப் பறவைச் சாதி அன்ன**

**பைதற விளைந்த பெருஞ்செந்நெல்லின்**

**தூம்புடைத் திறள் துமித்த வினைஞர்**

**பாம்புறை மருதின் ஓங்குசினை நிழற்**

**பலிபெறு வியன்களம் மலிய ஏற்றி**

**கணம்கொள் சுற்றமொடு கைபுணர்ந்தாடுநீ**

**துணங்கையம் பூதம் துகிலுடுத்தவைபோற்**

**சிலம்பி வானூல் வலந்த மருங்கின்**

**குழுநிலைப் போரின் முழுமுத றொலைச்சிப்**

**புகடூர் பிழிந்த பின்றைத் துகள்தப**

**வையுற் துரும்பும் நீக்கி, பைதறக்**

**குடகாற்றெரிந்த குப்பை”** **(பெரும்பாண்.228-240)**

என்ற அடிகள் மூலம் திறம்படப் புலப்படுத்துகிறார். நிலத்தை உழுதல் அதனைச் சமன் செய்தல், நாற்றுநடுதல், களையெடுத்தல், அறுவடை செய்தல், நெற்கட்டுகளைக் களம் சேர்த்தல், தெய்வங்களுக்குப் பலிகொடுத்தல் போன்ற உழவர்களின் நிகழ்வுகள் ஈண்டு உணர்த்தப்பட்டுள்ளன. சங்க காலத்தில் உழவுத்தொழில் மேம்பட்டிருந்ததை இதனால் உணரமுடியும். இத்தொழில் தான் அரசிற்குப் பெரும் வருவாயை ஈட்டித் தந்துள்ளது. அக்காலத்து மன்னர்கள் உழவுத்தொழிலின் மேன்மைக்கு உதவிகள் பல செய்துள்ளனர். கரிகாலன் உழவுத் தொழிலின் மேன்மைக்காக ஏரிகள் வெட்டியதனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

**“குளந்தொட்டு வளம்பெருக்கி”** **(பட்டினப்.284)**

என்ற அடிகளால் சுட்டுவர். உழவர்கள் நீர் இறைக்கும் தருணத்தில் பாட்டுக்கள் பாடியுள்ளதை மாங்குடிமருதனார்,

**“நீர் தெவ்வம் நிரைத்தொழுவர்**
**பாடு சிலம்பு மிசை”** **(மதுரைக்.89-90)**

என்ற அடிகளால் தெளிவுபடுத்துவர். நீர்நிலைகளில் நீரை ஒழுங்குபடுத்துவதற்காகக் காவலர்கள் இருந்துள்ளதை நொச்சிநியமங்கிழார்,

**“துய்யவிழ் பனிமலர் உதிர வீசித்**
**தொழில் மழை பொழிந்த பானாட் கங்குல்**
**எறிதிரைத் திவலை தூஉம் சிறுகோட்டுப்**
**பெருங்குளம் காவலர் போல**
**அருங்கடி அன்னையும் துயில் மறந்தனனே”** **(அகநா.52:3-7)**

என்ற அடிகளால் உணர்த்துவர். அதனால் நீர்வளம் பாதுகாக்கப்பட்டுள்ளதை உணரமுடிகிறது. உழவர்கள் தங்கள் இல்லத்திற்கு வரும் விருந்தினர்களுக்கு வெண்ணெல் அரிசிச் சோறும், மனைவாழ் கோழி இறைச்சியும் கொடுத்துள்ளனர். அதனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

**“…………………… மடியா**
**வினைஞர் தந்த வெண்ணெல் வல்சி**
**மனைவா டிளகின் வாட்டொடும் பெருகுவீர்”**

**(பெரும்பாண்.254-256)**

என்ற அடிகளால் சுட்டுவர்.

**நெய்தல் நில மக்கள்**

இவர்கள் கடற்கரையோரங்களில் வாழ்கின்றவர்கள். கடலுக்குப் பரவை என்ற பெயரும் உண்டு. எனவே தான் இவர்களைப் பரதவர் என்றனர். மேலும் பரதவர்கள் உப்பு விளைவித்தலையும், மீன்பிடித்தலையும் தொழிலாகக் கொண்டனர். இவர்களின் குடியிருப்புகளைப் பாக்கம் என்றும் பட்டினம் என்றும் அழைத்தனர். இதனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார், மாங்குடி மருதனார் போன்றோர்,

**"விலங்கு பகையல்லது கலங்கு பகையறியா,**
**கொழும் பல்குடிச் செலும் பாக்கத்து" (பட்டினப்.26-27)**

**"கட்கொண்டு குடிப்பாக்கத்து" (மதுரைக்.137)**

என்ற பாடலடிகளால் சுட்டுவர். கடற்கரையோரத்திலிருந்த குடியிருப்புக்களைப் பாக்கமெனவும், சற்றே ஊரிடை உள்ள குடியிருப்புக்களைப் பட்டினம் என்றும் கூறியுள்ளனர். அப்பகுதியில் வாழ்ந்த மக்கள் நுளையர், பரதவர், வலைஞர், நுளைமகள் என்று அழைக்கப்பட்டனர். வளைந்த திமிலைக் கொண்டு கடலில் செல்லும் பரதவர் நெடிய மாடங்களில் விடியற்காலத்தும் அணையாது விளங்கும் விளக்குகளை எண்ணிப் பார்த்துக் கொண்டிருப்பர். இதனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

**"நெடுங்கால் மாடத்து ஒள்ளரி நோக்கி,**

**கொடுந்திமில் பரதவர் குரூஉச்சிடர் எண்ணவும்"**

**(பட்டினப்.111-112)**

என்ற அடிகளால் கூறுவர். கடலில் தாங்கள் பிடித்துவந்த மீன்களை வலைஞர்கள் விலை கூறி விற்றுள்ளதை மாங்குடி மருதனார்,

**“வள்ளை நீக்கி வயமீன் முகந்து**

**கொள்ளை சாற்றிய கொடுமுடி வலைஞர்” (மதுரைக்.255-256)**

என்ற அடிகளால் விளக்குவர். வஞ்சி, வெண்காஞ்சி மரங்களைத் தாழைநார் கொண்டு கட்டி அதன்மேல் தருப்பைப்புல் வேய்ந்து கட்டப்பெற்ற குடிசைகளில் இவர்கள் வாழ்ந்துள்ளனர். அவர்கள் இக்குடிசையின் மேற்புறத்தில் சுரைக்கொடியைப் படரவிட்டிருந்ததைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

**“வேழ நிரைத்து, வெண்கோடு விரைஇ,**

**தாழை முடித்து, தருப்பை வேய்ந்த**

**குறியிறைக் குரம்பை, பறியுடை முன்றில்**

**கொடுங்காற் புன்னைக் கோடுதுமித் தியற்றிய**

**பைங்காய் தூங்கும் பாய்மணற் பந்த**

**இளையரும் முதியரும் கிளையுடன் துவன்றி”**

**(பெரும்பாண்.263-268)**

என்ற அடிகளால் விளக்குவர். இவர்கள் தங்கள் குடிலுக்கு வருபவர்களுக்கு மீன் வறுவல், கள், வெண்ணெல் சோறு கொடுத்து விருந்து பேணியுள்ளதைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

**“கொடுமுடி வலைஞர் குடிவயிற் சேப்பின்**

**அவையா அரிசி அம்களித் துழவை**

**மலர்வாய்ப் பிழாவில் புலர ஆற்றி**

**பாம்புறை புற்றின் குரும்பி ஏய்க்கும்**

**பூம்புற நல்லடை அளைஇதேம்பட**

**எல்லையு மிரவு மிருமுறை கழிப்பி**

**வால்வாய்ச் சாடியின் வழைச்சுஅற விளைந்த,**

**வெந்நீர் அரியல் விரல்அலை நறும்பிழி**

**நண்மீன் சூட்டொடு, தளர்தலும் பெறுகுவள்''**

**(பெரும்பாண்.274-282)**

என்ற அடிகளால் நவிலுவர். நானில மக்கள் உழைத்து உண்ணும் இயல்புடையவராய், பகுத்துண்டு வாழும் பண்பினராய் வாழ்ந்தமையை இதனால் உணரமுடியும்.

**பாலை நிலத்தில் வாழுநர்**

முல்லையும், குறிஞ்சியும் முறைமையிற் திரிந்து, நல்லியல்பு இழந்து நடுங்கு துயருற்றுக் காணப்படுவது பாலை என்ற நிலமாகும். இவ்வாறு படிவம் கொண்ட நிலத்தில் வாழும் மக்களின் தொழில் வேட்டையாடுதலும், வழிப்பறி செய்தலுமாகும். பாலை நிலத்திலும், காட்டுப் பகுதியிலும் வாழும் மக்கள் எயினர், மறவர், வேடர் என்று அழைக்கப்படுவர். குறும்பு என்னும் குடிசைகளில் வசித்து வந்ததால் இவர்கள் குறும்பர் எனவும் அழைக்கப்படுவர் என்ற கருத்து நிலவுகிறது. சங்க காலத்தில் பாலை நிலத்தில் வாழ்ந்த மக்களைக் குறிக்கவே எயின், எயினர் என்ற சொல் தோன்றியிருக்கக்கூடும். இதனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

**''தொடுதோல் அடியர் துடிபடக்குழீஇ**

**கொடுவில் எயினர் கொள்ளைஉண்ட''  (பட்டினப்.265-266)**

என்ற அடிகளால் விளக்குவர். வெம்மையான பாறையின்மேல் ஏறி இவ்வெயினச் சாதியினர் தம் அம்புகளைத் தீட்டியுள்ளதை ஓதலாந்தையார்,

“உலைக்க லன்ன பாறை யேறி

கொடுவில் எயினர் பகழிமாய்க்கும்” (குறுந்.12:2-3)

என்ற அடிகளால் புலப்படுத்துவர். எயினர் வில்லினையும், கூரிய அம்பினையும் பெற்றுச் சிவந்த துவராடையையும் உடுத்திக் கொண்டிருப்பர். அதனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

“சிலைவிற் பகழிச் செந்துவ ராடைக்

கொலைவில் எயினர்” (பெரும்பாண்.106-107)

என்ற அடிகளால் விளக்குவர். இவர்கள் முட்பன்றி ஊனை உணவாக உட்கொள்வார்கள். பாலை நிலத்தில் வாழும் கானவர் மான்களையும், முயல்களையும் வேட்டையாடியுள்ளதைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

“மானடி பொறித்த மயங்கதர் மருங்கின்

வான்மடி பொழுதில் நீர்நசைஇக் குழித்த

அகழ்சூழ் பயம்பின் அகத்து ஒளிது ஒடுங்கி

புகழா வாகைப் பூவினன்ன

வளை மருப்பு ஏனம் வரவு பார்த்திருக்கும்

அரை நாள் வேட்டம் அழுங்கின் பகல்நாள்

பகுவாய் ஞமலியோடு பைம்புதல் எருக்கி

தொகுவாய் வேலித் தொடர்வலை மாட்டி

முள்ளரைத் தாமரைப் புல்லிதழ் புரையும்

நெடுஞ்செவிக் குறுமுயல் போக்குஅற வளைஇ

கடுங்கண் கானவர் கடறுகூட்டுண்ணும்” (பெரும்பாண்.117-127)

என்ற அடிகளால் தெளிவுபடுத்துவர். ஊகம் புல்லினால் வேயப்பட்ட குடில்களில் எயினர்கள் வாழ்ந்துள்ளனர். அம்பறழ் தூணிகள் தூண்களில் தொங்கின; நூல்கள் கட்டப்பட்டு அக்குடில்களில் கிடந்தன. அதனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

**"........................ பருந்துபட**

**வொள்ளாத் தெவ்வர் நடுங்க வோச்சி**

**வைந்துதி மழுங்கிய புலவுவ எஃகம்**

**வடிமணிப் பலகையொடு நிரைஇமுபுநாண்**

**சாபம் சார்த்திய கணை துஞ்சு வியனகர்**

**ஊகம் வேய்ந்த வுயர்நிலை வரைப்பின்**

**வரைத்தேன் புரையும் கவைக்கடைப் புதையொடு**

**கடுந்துடி தூங்கும் கணைக்காற் பந்தர்**

**தொடர்நாய் யாத்த துன்னருங் கடிநகர்**

**வாழ்முள் வேலிச் சூழ்மிளைப் படப்பை**

**கொடுநகர் தழீஇய புதவின் செந்நிலை**

**நெடுதுதி வயக்கழு நிரைத்த வாயில்**

**கொடுவி லெயினக் குறும்பில்"** **(பெரும்பாண்.117-129)**

என்ற அடிகளால் உணர்த்துவர். இவர்கள் தங்கள் இல்லத்திற்கு வரும் விருந்தினர்களுக்குச் சோறும், உடும்பின் பொறியலும் கொடுத்துப் பேணியுள்ளதைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

**"களர்வளர் ஈந்தின் காழ் கண்டன்ன**

**அவல்விளை நெல்லின் செல்வவிழ்ச் சொன்றி,**

ஞமலி தந்த மனவுச்சூ உடும்பின்

வறைகால் யாத்தது வயின்தொறும் பெறுகுவீர்"

(பெரும்பாண்.130-133)

என்ற அடிகளால் புலப்படுத்துவர். தமிழர்கள் நிலத்தின் இயல்பிற்கேற்பத் தங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொண்டதும், சமூகக் குழுக்கள் ஒவ்வோரிடங்களில் நிலைத்து அவ்விடங்களுக்கேற்பத் தொழில்களைச் செய்தனரென்பதும் புலனாகிறது. "தமிழகத்துக் குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்னும் ஐவகைப்பாடு முறையே வேடர், கள்ளர், இடையர், மீனவர், உழவர் வாழிடங்களாயிற்று"[2] என்று பி.டி.சீனிவாச ஐயங்கார் கூறுவர். இவ்வாறு அமைக்கப்பட்ட ஒரு சமுதாய ஏற்பாடு தென்னிந்திய நாகரீக வளர்ச்சியின் வரலாற்றைத் தோற்றுவிப்பதை அறியமுடிகிறது.

**சமூகம் - விளக்கம்**

மனிதன் கூடி வாழும் இயல்பினை உடையவன். அதனால் அவனைச் சமூக விலங்கு என்பர். இக்கூட்டு வாழ்க்கையிலிருந்து தனித்தொதுக்கிவிட்டால் அவனால் முழுமையாக வாழ இயலாது. தனி மனிதனும், தனியொரு குடும்பமும் சமூகமாகாது. கூட்டு வாழ்க்கையின் விளைவாக ஏற்பட்ட சமூக நிறுவனங்களான குடும்பம், சமயம், அரசு, கல்வி ஆகியவை அவன் வாழ்க்கையை மேலும் செம்மைப்படுத்த உதவுகின்றன. பல்வேறு குடும்பங்களின் கூட்டுத் தொகுப்பு அல்லது கூடிவாழும் அமைப்பைச் சமுதாயம் அல்லது சமூகம் என்கிறோம்.

சமூகம், சமுதாயம் என்ற இரண்டு சொற்களுக்கும் அகராதிகளின் விளக்கங்கள் இடம்பெற்றுள்ளன. சமூகத்தை ஆராய்கின்ற அறிவியல்துறை

சமூகவியல் துறையாகும். சமூகத்தின் பல்வேறுபட்ட மக்களின் உறவுகளையும், அவர்களது செயல்களையும், அறிகின்ற இயலே சமூகவியல் துறையாகும். "சமூகவியல் என்ற சொல்லுக்கு மன்னாய நூல் மனித சமுதாயத்தின் வளர்ச்சி, இயல்பு, சட்டங்கள் பற்றிய ஆய்வுத்துறை"[3] என்று ஆங்கிலம்-தமிழ் அகராதி விளக்கம் தருகின்றது.

"சமுதாயம் என்ற சொல் கூட்டம், சங்கம், பொதுவானது மக்களின் திறன், பொருளின் திறன், உடன்படிக்கை"[4] என்று தமிழ் அகராதி விளக்கம் தருகின்றது. "சமுதாய அமைப்பிலும் மனித உறவிலும் மாற்றங்கள் தோன்றி வளர்ந்து பெருகும் காலகட்டத்தில் வாழும் ஆக்க இலக்கியக் கர்த்தாக்களின் உணர்வினைத் தாக்குவது புதிய சூழ்நிலையில் தோன்றும் மனித இன்னல் அல்லது புதிய சூழ்நிலையில் ஏற்படும் நடைமுறையே"[5] என்பார் கா.சிவத்தம்பி.

சமுதாயத்தைச் சொல்லில் வடித்து அளிப்பதே இலக்கியமாகும். "மரபு வழிப்பட்ட பண்பு நலன்கள், உணர்வுகள், உடலமைப்பு ஆகியவை ஒரு சமுதாயத்தை உருவாக்குகின்றன"[6] என்கிறார் சி.இ.மறைமலை. "சமூகம் என்பது உயிர் வாழ்வதற்காகப் போராடும் நம் மக்களினத்தின் தனித்தன்மையுள்ள ஒரு குழுவாகும். தமக்குத்தாமே அமைத்துக் கொண்ட அக்குழுவின் தலைவிதியையே அக்குழுவைச் சார்ந்த ஒவ்வொரு தனி மனிதனும் பெற்றிருக்கிறான். இவ்வமைப்பில் குழந்தையிலிருந்து முதுமை வரையில் மனிதர்கள் மற்றவரைச் சார்ந்தும், மற்றவரின் கூட்டுறவோடும் வாழ வேண்டியவர்களாயுள்ளனர்"[7] என்பர்.

"ஒரு சமூகம் என்பது தனிமனித வாழ்வெல்லைகளை மிகக் கடந்து நிலவும் ஒன்றாகும். சமூகம் என்பது செயற்பாடுடைய ஒரு குழுவாகும். தனி மனிதர் பலராய் சமூகம் உருவாக்கப்பட்டு இருப்பினும், சமூகம் என்ற நிலையிலே அது தொழிற்படுகிறது. சமூக அமைப்பில் தனி மனிதர்களின் நலன்கள் சமூக நலன் கீழாகவே அமைகின்றன"[8] என்பர்.

ராய்ட்டர் என்ற சமூகவியல் சிந்தனையாளர் "வாழ்க்கை என்பது ஒரு பொருள் அல்ல. அது வாழும் இயங்குமுறையாகும். அதனைப் போன்றே சமூகம் என்பது ஒரு பொருள் அல்ல. அது இணைப்பின் இயங்கு முறையாகும்"[9] என்று சமூகத்தைப் பற்றித் தெளிவாக விளக்கம் அளிக்கிறார்.

சமூக விஞ்ஞானத்துறைகள் பலவற்றுள்ளும், இலக்கியத்துடன் மிக நெருங்கிய தொடர்புடையது சமூகவியலாகும். சமூகவியல் மனித ஒழுகலாறு சம்பந்தமானது. தனிமனிதனையும், மனித சமுதாயத்தையும் ஆராய்வதையே சமூகவியல் முக்கியக் குறிக்கோளாகக் கொண்டுள்ளது.

"சமுதாயத்தையும், சமுதாய அமைப்பையும் உள்ளவாறே கொண்டு அதன் இயக்கப்பாட்டைக் கூறுகளாய் விவரிப்பது சமூகவியலாகும்."[10]

"விஞ்ஞானப் பூர்வமாகவும், புறநிலையாகவும், மனிதனையும், சமுதாயத்தையும் அறிவதே சமூகவியலின் சாராம்சம் ஆகும்."[11]

"சமூக நிறுவனங்கள், சமயம், பொருளாதாரம், அரசியல், குடும்பம் முதலியவற்றுடன் நெருங்கிய தொடர்புடையவை. இவை பலவற்றினது இயக்கத்தையும் ஆராய்வதே சமூகவியலின் தலையாய பண்பும் பணியுமாகும்."[12] ஆகவே பல குடும்பங்கள், சமயங்கள், தொழில்கள்

போன்றவை இணைந்து இயங்கிவரும் அமைப்புமுறையைச் சமூகம் என்று அழைக்கின்றனர். பல்வேறு குடும்பங்கள் இணைந்த தொகுப்பில் அன்றாடம் நடைபெறும் செயல்களை, நிகழ்ச்சிகளை, அதன் விளைவுகளைப் பற்றி அறியும் அமைப்பே சமூகமாகும்.

**சங்ககாலச் சமூகம்**

சமூகத்தைப் பற்றிய அறிவியல் சமூகவியல் எனப்படும். சமூகவியல் என்பது சமூக அமைப்புகளையும், சமூக உண்மைகளையும் அறிவியல் அடிப்படையில் ஆராயும் முறை ஆகும். சமூக அமைப்பு என்பது ஓர் இனக்குழு சில வகையான கூட்டுச் செயல்பாடுகளில் ஈடுபட்டு மற்ற அங்கத்தினர்களுடன் பல வகையான வழிகளில் தொடர்பு கொள்வதாகும். சமூக உண்மைகளானவை தனி மனிதனுடைய முறைப்படுத்தப்பட்ட நடத்தை முறைகளாகும். இத்தகைய முறைகள் சமூக அமைப்புகளின் மூலமாகத் தனிமனிதனின் மீது திணிக்கப்படுகின்றன. சமூக உண்மைகளைப் பற்றி அறிவதற்குச் சமூகவியல் ஆய்வு இன்றியமையாததாகும்.

சமூகவியல் ஆய்வின் மூலம் ஒரு சமூகம் எவ்வாறு தோன்றியது என்றும், அது எவ்வாறு கட்டமைக்கப்பட்டிருக்கிறது என்றும், அது எவ்வாறு செயல்படுகிறது என்பதனையும் தெளிவாக உணரமுடியும். மனிதனுடைய வளர்ப்புமுறையில் அவன் மீது திணிக்கப்பட்ட குறைகளில் இருந்து விடுபடவும் மனித வாழ்வை உயர்ந்த நிலைக்கு உயர்த்துவதற்குரிய கண்ணோட்டத்தை வழங்கவும் முடியும். சமூக மதிப்புகள், மாற்றங்கள் ஆகியவற்றை அறிய இயல்வதோடு எதிர்காலம் பற்றிய முன் மதிப்பீடு செய்வதற்கான திறனையும் வளர்க்க முடியும்.

சமூகத்தின் நுண்மையான ஒழுங்கு அமைவுகள் மற்றும் வழிமுறைகளைப் பற்றி அதிகம் அறியவும், அவற்றை மனிதகுல வளர்ச்சிக்குப் பயன்படுத்திடவும் உதவமுடியும். சமூகச் சிக்கல்களைத் தீர்க்கவும், வாழ்வின் வளர்ச்சிக்குத் தயார்படுத்திக் கொள்ளவும், மனிதத் தேவைகளை நிறைவு செய்து கொள்ளவும் இயலுகின்றது.

சமூக வாழ்க்கையின் வரலாறும் அதனுடன் இணைந்த பிரச்சினைகளும் சமூகத்தைப் போன்றே மிகப் பழமையானவை. மனிதன் நாகரீகத்தின் தொடக்க காலத்தில் ஏனையோருடன் கூடிவாழத் தலைப்பட்ட பொழுது கொண்டிருந்த சிக்கலான சமூக உறவுமுறைத் தொடர்புகளைத்தான் சமூகம் என்கிறோம்.

மனிதன் கொள்கின்ற தொடர்புகள் எல்லாம் சமூகத் தொடர்பு ஆகிவிடாது. ஒருவர் மற்றவர் இருப்பை உணரும் பொழுதே சமூகத் தொடர்பு ஏற்படுகிறது. இருவர் அல்லது அதற்கு மேற்பட்டோர் தங்களிடையே ஏதோ ஒன்று இருப்பதை அறிவதால் ஏற்படும் தொடர்பே சமூகத் தொடர்பாகும். இத்தகைய சமூக உறவுமுறைகள் தான் சமூகத்தை உருவாக்குகின்றன. எங்கெல்லாம் சமூக உறவுமுறை காணப்படுகின்றதோ, அங்கெல்லாம் சமூகத்தின் உயிர்ப்பு இருப்பதாகக் கொள்ளலாம். குறிப்பிட்ட பொது நோக்கங்களை அடைவதற்காக ஒருசில நிலையான உறவுமுறைகளால் விளைவிக்கப்பட்டுள்ள மனிதர்களின் கூட்டுத் தொகுதியையே சமூகம் என்கிறோம். எனவே ஒற்றுமை, நிலைபேற்றுத் தன்மை, சமுதாய உணர்ச்சி ஆகியவை தான் சமூகத்தின் பண்புகள் ஆகும். சமூகம் பற்றிய இத்தகைய கருத்தைத் தான் இட்டிங்ஸ் என்பவர் ஒரே விதமான எண்ணங்களை உடைய

மனிதர்கள் தங்களுடைய ஒத்த தன்மையை உணர்ந்து அதன் காரணமாகப் பொதுவான நோக்கங்களை அடையச் சேர்ந்து முயல்கின்ற பொழுது சமூகம் உருவாகின்றது என்கிறார். பொதுவான இலட்சியத்தை அடையக் கூட்டுறவாகச் செயற்படும் பகுத்தறிவுள்ள மக்களின் நிலையான ஒழுக்க நியதிக்குட்பட்ட பிணைப்பு சமூகம் ஆகும் என்று தாமஸ் அக்வினாஸ் வரையறை செய்கின்றார். அரசியல் உளவியல், வரலாறு, மானிடவியல், பொருளாதாரவியல் போன்ற வேறுசில அறிவுத் தொகுதிகளும் சமூகத்தைத் தான் ஆராய்கின்றன. எனவே சமூகவியல் என்பது சமூகத்தைப் பற்றிய அறிவியல் என்ற வரையறைக்கு மேலும் சில விளக்கம் கூறப்படுகிறது.

சமூகவியல் என்பது சமுதாயத்தைப் பற்றிய அறிவியல் என்பர் மாக்ஸ்வெப்பர். "மனித இனத்தின் தோற்றம், மனித இனத்தின் வகை அவர்களின் பழக்க வழக்கம், மொழி, நம்பிக்கை, சமயம், பொருளாதாரம் ஆகியன குறித்து விளக்குவதாகும். சமூகவியல் என்பது சமூகம், சமுதாயம் ஆகியன குறித்த அனைத்துப் பொருள்களைப் பற்றியும் விவாதிக்கும் இயல் என்பது தெளிவாகும். இது சமூக மரபு, செயற்பாங்கு, நடத்தை ஆகியவை பற்றியும், சமூக நிகழ்வுகளின் வடிவங்கள், இடையுறவு, சமூக உறவின் மீது சமூக ஆற்றலின் தாக்கம் முதலியன பற்றியும் ஆராய்கிறது."[13] சமூகம் என்பது மக்கள் சேர்ந்து வாழும் ஒரு குழு. மனிதர்கள் தனித்தனியாக வாழ்ந்தபோது அவர்களிடம் எவ்விதமான பண்புகளோ, பழக்க வழக்கங்களோ சிறப்பினதாக இருந்திருக்க முடியாது. சேர்ந்து வாழ்ந்த போது உயர் பண்புகளும், லட்சியங்களும் தோன்ற ஆரம்பித்தன. தனி மனிதனுடைய இயல்பையும், நோக்கங்களையும் உருவாக்குவதில் முக்கியமான

அடித்தளமாக இருப்பது சமூகமாகும். சமூகமாக மாறும் போது பொதுவான பண்புகளும், மரபுகளும் தோற்றம் பெறுகின்றன.

"ஒத்த பண்புடைய மனிதர்கள் சேர்ந்து வாழும் சமூகக் குழுக்களை வழிநடத்திச் செல்லுவது சமூக நிறுவனங்களாகும். குழுக்களுக்கும், தனி மனிதர்களுக்கும் இடையே உள்ள தொடர்பைக் கட்டுப்படுத்தும் ஏற்புடையை நிலையான வழிகளின் வகைகளையே நிறுவனம் என்கிறோம்."[14] சமுதாயங்களின் மேன்மையான அதிகாரத்தினால் வரையறுக்கப்பட்டதும் அமைப்புக்கு ஆட்படுத்தப்பட்டதும், ஆணை பெற்றதுமான முறையில் ஒன்றுகூடி வாழும் வழக்கமான வழிவகைகளே நிறுவனமாகும். மக்கள் குழுக்களாகச் சேர்ந்து வாழும்போது அவர்களை ஒன்றிணைப்பதற்குச் சில வரையறைகள் தேவைப்படுகின்றன. இவ்வரையறைகளை ஏற்படுத்திக் கொடுப்பதே நிறுவனத்தின் கடமையாகும். சமூகத் தேவைகளை நிறைவேற்றுவதற்கும், பொதுவான ஒழுக்கங்களைக் கற்றுக் கொடுப்பதற்கும், சமூக வளர்ச்சிக்கும் நிறுவனங்கள் தேவைப்படுகின்றன. சமூக நிறுவனங்களை இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம். 1.குடும்பம், 2.அரசு, இவ்விரு நிறுவனங்களுமே சமூகத்தின் ஒட்டுமொத்த வளர்ச்சிக்கும் அடிப்படையாக இருப்பவை.

பிரெஞ்சு அறிஞரான சார்லஸ் மாண்டாங்கு மனித சமுதாயம் என்பது பலவகையான இயல்பு நிகழ்ச்சிகளைக் கொண்ட ஒரு கலப்புத் தொகுதி என உணர்ந்தார். சமுதாயங்களிடையே காணப்படும் வேறுபாட்டிற்குச் சமுதாயப் பண்பாட்டுக் கூட்டமைப்பும், பல்வேறுபட்ட சுற்றுச் சூழல்களுமே காரணம் என்றார். மேலும் அவர் ஒரு சமுதாயத்தின் தரங்களைக் கொண்டு மற்றொரு

சமுதாயத்தை மதிப்பிடக்கூடாது. அந்தந்த சமுதாய முறைகளைக் கொண்டே மதிப்பிட வேண்டும் என வலியுறுத்தினார். மனித வரலாறு மூன்று வளர்ச்சி நிலைகளைக் கொண்டுள்ளதாகக் கூறினார். அவை,

1. வேட்டைநிலை (அல்லது) விலங்குத் தன்மை,
2. ஆயர்நிலை அல்லது காட்டுவாசி நிலை,
3. நாகரிகம் அடைந்த நிலை,

என்பனவாகும்.

இதை ஒட்டியே மூக்காட் (கி.பி.1727-1781) மனிதனின் வாழ்க்கைப் பொருளாதாரம் வேட்டுவ வாழ்க்கை, ஆயர் வாழ்க்கை, வேளாண்வாழ்க்கை ஆகிய மூன்று நிலைகளில் வளர்ச்சி அடைந்துள்ளதாகக் கூறுகிறார். வேட்டுவத் தொழிலையும், ஆயர் தொழிலையும் மேற்கொண்டிருந்த போது மனிதன் ஒரே தன்மையான வாழ்க்கை முறையைக் கொண்டிருந்தான். வேளாண் தொழிலை மேற்கொண்ட பின்பே நிலையான வாழ்க்கை ஏற்பட்டது. தொழிலில் பல்வேறு போக்குகள் தோன்றின. இவற்றுள் முன்னதைக் குறிஞ்சி, முல்லைத் திணைகளிலும், பின்னதை மருதம், நெய்தல் திணைகளிலும் தமிழ் இலக்கியம் விவரித்துச் சொல்கின்றன. இதன் மூலம் மனிதனால் மனிதனின் தேவையை நிறைவு செய்வதற்கான ஒரு குழுவாகக் கூடிச் செயல்பட்டதன் விளைவாகச் சமுதாயம் தோற்றம் பெற்றது எனவும், அதுநிலைபேறு உடையதாகவும், இயக்கத் தன்மைகளைக் கொண்டதாகவும் விளங்குகிறது எனவும் கருதலாம்.

சங்க இலக்கியத்தின் தலையாயச் சிறப்பு மக்களின் வாழ்க்கையை ஒட்டி நிலத்தை வகையாகப் பிரித்துள்ளமுறையாகும். அவை குறிஞ்சி,

முல்லை, மருதம், நெய்தல், பாலை என்பனவாகும். குறிஞ்சி நிலத்தில் வேட்டை நிலையில் தொடங்கிய தமிழர் வாழ்க்கை, முல்லை நிலத்தில் ஆயர்களாக மாறுகிறது. மருத நிலத்தில் வேளாளர்களாக உருவாகின்றனர். நெய்தல் நிலத்தில் பொருளாதார வளம் சேர்க்கும் வணிகர்களாகக் காணப்படுகின்றனர்.

எந்த ஒரு இனமும் தோன்றிய போதே பண்பாட்டோடும், நாகரீகத்தோடும் தோன்றியிருக்க முடியாது. மனித இனமானது பல போராட்டங்களுக்கும் முயற்சிகளுக்கும் பிறகே வளர்ச்சியடைந்துள்ளது. விலங்குகளைப் போல நாடோடிகளாகத் திரிந்த இனக்குழுக்கள் ஓரிடத்தில் தங்கி தம் வாழ்க்கையைத் தொடர்ந்தன. அவர்கள் தங்கியிருந்த இடத்தையும், அந்தச் சூழ்நிலைக்கேற்ப அவர்களின் வாழ்க்கை முறையையும் வைத்து நிலப்பாகுபாடு செய்யப்பட்ட தன்மையானது சிறப்புடையதாகும்.

“ஓரிடத்தில் தங்கி நிலைத்து வாழத் தலைப்பட்ட சமுதாயமாகச் சங்கச் சமுதாயம் மாறியதைத் தான் திணைப் பாகுபாடுகள், திணைநிலை வாழ்வுகள் காட்டுகின்றன.”[15] இத்திணைப் பாகுபாடுகளை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று பகுத்துக் கூறினார் பண்டைத் தமிழர்கள். இத்திணைப் பகுப்புகள் வழியாக நிலத்திற்கேற்ற வாழ்க்கைமுறை வாழ்ந்தனர்.

“நாகரீக முதிர்ச்சியற்ற வேடர்கள், பயிரிடுபவர்களாக இல்லாமல் சிதறிய உணவு சேகரிப்பவர்கள், ஏரையும் இழுமாடுகளையும் பயன்படுத்தத் தெரியாமல், தோண்டும் கம்பையும், மண்வெட்டியையும் கருவிகளாக எடுத்துக் கொண்டு, அடிக்கடி இடம் மாறுபவர்களாகிய குடியானவர்கள், வெள்ளாடு-

செம்மறியாடு, பிற கால்நடை வளர்ப்போர், அலைந்து பிற பொருட்கள் விற்போர், கைவினைஞர்கள், நாடோடிகளாக அலைந்து திரிகின்றவர்கள் என பலவகை படிநிலைகள் இந்திய சமூகத்தில் காணப்பட்டதாகக் கூறுவர்."[16]

**சாதியநிலை**

இந்திய மானுட வாழ்வில் சாதி என்பது தவிர்க்க இயலாததாகிவிட்டது. இன்றைய நிலையில் சாதியே அனைத்திற்கும் அடிப்படை நிறுவனமாக விளங்குகின்றது. 'சாதி' என்னும் சொல் பல்வேறு நிலைகளில் பல பொருட்களில் வழக்கில் இருந்து வந்துள்ளதை அறிய முடிகின்றது. இதைக் குலம், வகுப்பு, வர்ணம், இனம் என்று வகைப்படுத்துவர். சாதியானது தொழில் ரீதியாக ஏற்பட்டு பொருளாதாரம், சமயம், உடலியல் கூறுகள் போன்ற தன்மைகளால் வலுப்படுத்தப்பட்டது எனலாம்.

**சாதி சொல் விளக்கம்**

'சாதி' என்ற சொல்லிற்குப் பிரிவு என்று பொருள். தொல்காப்பியம் நீரில் வாழும் உயிர்களை இப்பொருளில் 'நீர்வாழ்சாதி' (தொல்.மர.44-64) எனக் குறிக்கிறது. தமிழ் இலக்கண, இலக்கியங்களுள் 'சாதி' என்ற சொல் ஆளப்பட்டுள்ள மிகப் பழைய இடம் இதுவே ஆகும். இச்சொல்லிற்குப் பொருளை வரையறுக்கும் தமிழ்ப் பெயரகராதி காலந்தோறும் இச்சொல் அடைந்த பொருளைக் குறிப்பிடுகிறது.

ஆங்கிலத்திலும், பிரெஞ்சிலும் சாதி என்பதை 'காஸ்ட்' (Caste) என்ற சொல் வழியாகச் சுட்டுவர். இச்சொல் 'காஸ்ட்' என்ற ஸ்பானிசு மொழிச் சொல்லில் இருந்து தோன்றியதாகும். 'காஸ்டா' என்பதற்கு இனம்,

குலத்தூய்மை போன்ற தலைமுறைப் பண்புகளின் தொகுதி என்பது பொருளாகும். தொடக்கத்தில் இந்தியாவிற்கு வந்த போர்ச்சுக்கீசியர்கள் இந்தியரிடம் இருந்த சாதி அமைப்பை மேற்கண்ட சொல்லால் சுட்டியுரைத்தனர். மொழி அடிப்படையில் இச்சொல்லின் பொருள் எளிதாக இருப்பினும் சமூகவியலில் இச்சொல்லும் பொருளும் செயல்பாடும் சூழ்ந்த பொருளுடையவையாக அமைந்திருக்கின்றன. “சாதி என்ற சொல் குழப்பத்தை ஏற்படுத்துகின்ற சொல்லாகும். இச்சொல் வெவ்வேறு சூழ்நிலைகளிலும் வெவ்வேறு அர்த்தங்களையும் சமுதாயப் பிரிவுகளையும் குறிப்பிடப் பயன்படுத்தப்படுகிறது.”[17] சாதி என்ற சொல்லானது பல்வேறு இடங்களில் பல பொருட்களைத் தந்து நிற்கிறது.

**சாதி பற்றிய அறிஞர்களின் கருத்துக்கள்**

சாதி பற்றி பல்வேறான அறிஞர்களின் கருத்துக்கள் இடம்பெற்றுள்ளன. “சாதி என்பது ஒரு குறுகிய ஆட்சிமன்றம், கோட்பாட்டு அளவில் பரம்பரை பரம்பரையாக மிகக்கண்டிப்போடு இயங்குவது. ஒரு தலைவனையும், ஓர் ஆலோசனைக் குழுவையும் தன்னகத்தே கொண்ட ஒரு குறிப்பிடத்தக்க மரபு வழியிலான தன்னிச்சையான ஓர் அமைப்பாகும். இவ்வமைப்பு ஏறத்தாழ தன்னிறைவான அதிகாரங்களைக் கொண்ட அவைகளாகச் சில சமயங்களில் கூடும், ஒரு குறிப்பிட்ட விழாக்களின் போது ஒன்று சேரும் திருமணம், உணவு, மரபு ஒழுக்கங்களை மாசுப்படுத்துதல் பற்றிய கேள்விகள் ஆகியவற்றை நெருங்கிய அம்சங்களைக் கொண்ட பொது அலுவல்களில் பிணைக்கப்பட்டிருக்கும்”[18] என்பர் செனார்ட்.

“சாதி என்பது சமூகத்தின் ஒரு வகுப்பு (Class). இவ்வகுப்பு இதுபோன்ற பிற வகுப்புகளுடனான எத்தகைய தொடர்பையும் மறுதலிக்கும். எந்தவொரு வகுப்பும் மற்ற எந்த ஒரு வகுப்புடனும் திருமணம் செய்து கொள்ளாது தன்னுடைய சொந்த வகுப்பைத் தவிர்க்க, வேறெந்த வகுப்பையும் சேர்ந்த எவருடனும் எதையும் உண்ணவோ அருந்தவோ செய்யாது”[19] என்று சாதியைப் பற்றி நெஸ்பீல்டு குறிப்பிடுகிறார்.

“சாதி என்பது ஒரு பொதுப்பெயர் கொண்ட குடும்பங்களின் திரட்சியையோ அல்லது அவ்வாறான குடும்பங்களை உள்ளடக்கும் குழுக்களையோ குறிக்கும். இப்பொதுப்பெயரானது ஒரு குறிப்பிட்ட அலுவலைக் குறிப்பதாகவோ அல்லது ஒரு குறிப்பிட்ட அலுவலோடு தொடர்புடையதாகவோ இருக்கும் ஓரியல்பான ஒரு கூட்டத்தின் (Community) உருவாக்கமே சாதி”[20] என்று சொல்லப்படும் என்கிறார் ரிஸ்லி.

சாதியைப் பற்றிக் குறிப்பிடும் எட்கர் “சாதி என்பது இரு இயல்பொழுக்கங்களைக் கொண்ட சமூகக்குலம்”[21] என்பர்.

1. உறுப்பினராகும் உரிமை உறுப்பினர்களுக்குப் பிறந்தவர்களுக்கு மட்டுமே உரித்தானது. பிறப்பால் அத்தகையவர்கள் அனைவரும் உறுப்பினர்களே என்கிறார்.

2. தம் குலம் தவிர்த்த வேறெந்த வெளிக்குலத்தில் இருந்து மணம் புரிதலில் இருந்து உறுப்பினர்கள் சிறிதேனும் தளர்த்தப்பட முடியாத சமூகச் சட்டத்தால் தடை செய்யப்பட்டு இருப்பவர்கள் எனப் பிரிக்கிறார்.

“சாதி என்பது ஒரு அமைப்புமுறை. இந்த அமைப்பில் ஓர் ஆண், பெண் எந்த ஒரு குறிப்பிட்ட குழுவில் பிறந்தாரோ, அக்குழுவின் மூலமாகவோ அவருக்குச் சமூகப் பிரதிநிதித்துவம் வழங்கப்படுகிறது. சமூகப்படிநிலை வரிசையில் ஒவ்வொரு குழுவுக்கும் ஒரு குறிப்பிட்ட ‘மதிப்பு’ வழங்கப்பட்டுள்ளது. இக்குழுவிற்கென ஒத்துக்கொள்ளப்பட்ட குறிப்பான தொழில் அல்லது தொழில்கள் உள்ளன. அக்குழுவிற்குள் மட்டுமே மேற்கொள்ள முடியும். சமபந்தி போஜனம் போன்ற நெருக்கமான சமூக உறவுகளை அக்குழுவுக்குள் மட்டுமே மேற்கொள்ள முடியும். (Roti-Beti-Vyavagar) உணவு-பெண்-விவகாரம் என்ற இக்குழுவானது கட்டுப்பாடானதொரு குழுவாகும். தன் உறுப்புகளுக்கென வரையறை செய்யப்பட்ட நடத்தை விதிகளைக் கொண்டது. தன் உறுப்பினர்கள் மீது ஆதிக்கம் செலுத்த வல்லது. குழு அதிகாரத்தை மீறுகிறவர்களை குழுவிலிருந்து நீக்குவதற்கு உரிமை பெற்றது. இப்படியொரு குழுவில் பிறந்த ஒருவர் தன் வாழ்நாள் முழுவதும் அக்குழு உறுப்பினர் ஆவார் (நீக்கப்பட்டாலொழிய) சட்டபூர்வமாக வேறொரு குழுவில் ஒருவர் தன்னை இணைத்துக் கொள்ளவே முடியாது”[22] என்று சாதியைப் பற்றி விரிவாக விளக்கம் அளிக்கிறார். ஈ.ஏ.எச்.ப்ளண்ட் என்பார், “பிறப்பினடிப்படையில் தோன்றிய உறுப்பினர்களையும், ஒரு பொதுவான பெயரையும் கொண்ட ஒரு அகமணக்குழுவோ அல்லது அகமணக் குழுக்களின் தொகுதியே சாதி”[23] எனக் குறிப்பிடுகிறார்.

**சாதியின் குணங்கள்**

சமூகவியல் அறிஞர்கள் சாதிமுறையின் ஆறு இயல்புகளைப் பின்வருமாறு சுட்டுவர்.

1. சாதி, பிறப்பு வழியில் தீர்மானிக்கப்பெறுகிறது. ஒருவன் எந்தச் சாதியில் பிறக்கின்றானோ, அந்தச் சாதியை அவன் சார்ந்தவனாவான். அதில் இருந்து எக்காரணம் கொண்டும் மாறமுடியாது.

2. எந்த உணவை உட்கொள்ளலாம்; உட்கொள்ளக்கூடாது என்று சாதி வரையறை செய்கிறது. உணவு அடிப்படையில் சாதி ஒரு காலத்தில் வகுக்கப்பட்டு இருக்கலாம். புலால் உண்ணாதவர் மேல் சாதியினர் என்றும், உண்ணுபவர்கள் கீழ்ச்சாதியினர் என்றும் பிரிக்கப்பட்டுள்ளது. மாட்டு இறைச்சியை உண்போர் மிகமிகக் கீழ்ச்சாதியினர் என்றும் பகுக்கப்பட்டு இருக்கலாம்.

3. சாதிக்குள்ளேயே திருமணம் செய்துகொள்ளும் அகமணமுறை கண்டிப்பாகக் கடைப்பிடிக்கப்பெற்றது.

4. சாதி அமைப்பு உயர் சாதியினரான பிராமணர்களோடு கொண்டுள்ள உறவை மையமாக வைத்துப் பல்வேறு படிநிலைகளாகப் பிரிக்கப் பெற்றது.

5. ஒவ்வொரு சாதியினரும், குறிப்பிட்ட ஒரு தொழிலைத் தலைமுறை, தலைமுறையாகச் செய்து வந்தனர். மற்ற சாதியினர் அத்தொழிலைச் செய்ய அனுமதிக்கப்படுவது இல்லை. தொழில் இதன்வழி பேணப் பெற்றது.

6. சாதி தனது உறுப்பினர்கள் மீது அதிகாரம் செலுத்தும் ஆற்றல் வாய்ந்தது. சாதிப் பஞ்சாயத்துக்கு உறுப்பினரைத் தன் குழுவில் வைத்துக் கொள்ளவோ மீறுபவர்கள் விலக்கவோ உரிமை உண்டு.

**சாதியின் தோற்றக் காரணங்கள்**

"சாதி என்ற பிரிவு, சமுதாயத்தில் ஒரே நாளில் தோன்றிவிடவில்லை. நீண்ட நெடுங்காலத்தில் படிப்படியாகவே தோன்றியிருக்க வேண்டும். இக்கருத்துக்கு அளிக்கப்படும் விளக்கங்கள் பின்வருமாறு:

1. பரம்பரைத் தொழில்.
2. தம்மைச் சுத்தமானவர்களாக வைத்துக்கொள்ள வேண்டும் என்ற மேல்சாதியினரின் விருப்பம்.
3. பல்வேறு மதங்கள் தம்முள் மோதி ஒற்றுமையின்றி இருந்தமை.
4. எல்லார்க்கும் ஒரே விதமான சட்டங்களைக் கொண்டு வருதல். வேறு வேறு வழக்கங்களை வேறு வேறு அரசர்கள் கொண்டு வந்தது.
5. கர்ம வினைகளிலும், மறு பிறவியிலும் கொண்டிருந்த நம்பிக்கை.
6. மூதாதையாரை வழிபடுவதும், புனித உணவுப் படையலும்.
7. தாய்வழி, தந்தைவழிப் பண்பாடுகளின் மோதல்கள்.
8. இன, நிற வேறுபாடுகளின் மோதல்கள்.
9. ஆதிக்கக்காரர்கள், ஆங்கிலேயர்கள் பின்பற்றிய பொருளாதாரக் கொள்கைகள்.
10. இந்தியத் துணைக் கண்டத்தின் நிலவியல் அமைப்பு

ஆகியவை ஆகும்."[24]

**தமிழகச் சூழலில் சாதியின் தோற்றம்**

'சாதி' என்னும் சொல் தொல்காப்பியத்தில் காணப்படுகிறது. ஆனால் இச்சொல் மக்களைக் குறிக்கும் சொல்லாக வழங்கப்படவில்லை.

'சாதி' என்னும் சொல் நீரிலே வாழும் உயிர்களையே குறிக்கின்றது. பிறப்பிலே வேற்றுமையுண்டு என்பதைக் குறிப்பதே சாதி என்னும் சொல். சாதி-ஜாதி; ஜம்-பிறப்பு, ஜனித்தல்-பிறத்தல்; ஜன்மம்-பிறப்பு என்பன நோக்கத்தக்கன.

**'நீர்வாழ் சாதியுள் அறுபிறப்பு உரிய'** **(தொல்.பொருள்.மரபு.44))**

நீரில் வாழும் பிறவிகளுள் ஆறு வகைப்பட்ட பிரிவுகள் உண்டு என்கிறார் தொல்காப்பியர்.

**'நீர்வாழ் சாதியுள் நந்தும் ஒன்றே'** **(தொல்.பொருள்.மரபு.64)**

நீரில் வாழும் பிறவிகளிலே நத்தையும் ஒன்றாகும் என்று குறிப்பிடுகிறார் தொல்காப்பியர். பண்டைய பொதுமைச் சமுதாயத்தில் இத்தகு பிறப்பு அடிப்படை வேறுபாடுகள் எதுவும் இல்லை. பிரிவு என்பது ஆணுக்கும், பெண்ணுக்கும் இடையே அமைந்த வேலைப்பிரிவாகும். இதுவும் உயர்வு-தாழ்வு, ஆதிக்கம்-அடிமை என்ற நிலையில் தோன்றியிருக்க வாய்ப்பில்லை. தமிழகத்தில் உடல் உழைப்பிற்கு மதிப்பு இருந்தவரை மாந்தரிடையே மேலோர், கீழோர் என்ற பிரிவு இல்லை எனலாம். ஒருவன் குழுவின் தலைமையை வலிமை, திறமை, முதுமை ஆகியவற்றால் அடைந்திருக்கக் கூடும். ஆண்மகன் அப்பொறுப்பை நிலையாக்க அல்லது வாரிசு உரிமையாகத் தலைமையை அனுபவிக்க, தான் சேர்த்த உடைமையைத் தன் வாரிசில் உள்ளோர் நுகர்தற்குரிய வாய்ப்பாகத் 'திருமணம்' என்ற சடங்கு முறையை முதலில் அமைத்துக் கொண்டிருக்க வேண்டும்.

இம்முறையால் ஒரு தலைவனுக்குப் பிறகு பிறிதொரு தலைவனை வலிமை, முதுமை, திறமை எனும் அடிப்படையில் தெரிவு செய்யும் முறைமை மாறித் தலைவனின் மகன் தலைவன் என்ற வாரிசு உரிமை தோன்றியது. தந்தை அரசவையில் அவன் மகனும் அவ்வுரிமைக்குரியவன் எனும் வாரிசுரிமை ஒரு கோட்பாடு போல் ஆயிற்று. தலைமை உரிமை பிறப்பு வழித் தீர்மானிக்கப்பட்டது போல சாதியின் ஊற்றுக்கண் பிறப்புவழி அமைந்துவிட்டது தான் முதற்கட்ட நிலையாகும். அடுத்தகட்ட விரிவாக்கமாகத் திருமணமுறையால் கிடைக்கிற சொத்துரிமையின் மூலம் சொத்து வெளியே செல்லாதவாறு அடுத்துள்ள குழுவின், குழுத்தலைவனின் அல்லது இரத்தத் தொடர்புடைய உறவில் மட்டுமே திருமணம் முடிக்க வேண்டும் என்ற நிலைமை தோன்றியது. வாரிசு உரிமைக்காகவும், சொத்து உரிமைக்காகவும் பிறப்பு அடிப்படையில் உருவான தலைவன் குடிவழி அகமணமுறை அரசியல் கட்டாயமாயிற்று. சாதியில் முதல் இறுக்கம் பிறப்பு என்றால் அதன் இரண்டாவது இறுக்கம் அகமண முறையாக அமைகிறது.

தமிழகத்தைப் பொறுத்தவரை தலைமைக்குடிவழி அல்லது அரசக்குடிவழியே சாதியத் தோற்றத்திற்குத் தொடக்கமாக இருந்திருக்க வேண்டும். தலைவனின் மகன் தலைவன் என்ற பிறப்புரிமை, அதற்காக அமைந்த அகமணமுறை ஆகிய மேல்நிலை ஆதிக்கம் ஏனைய மக்களாலும் காலப்போக்கில் மெல்ல மெல்ல பின்பற்றப்பட்டிருத்தல் வேண்டும்.

சாதி சமுதாயத்தில் மிக ஆழமாக வேர்விட்டுள்ளது. ஒவ்வொரு மனிதனும், மதத்தால், இனத்தால், சாதியால் பிறந்த சார்புடையவராகவே விளங்குகின்றான். உறவுநிலைகள் சாதி அடிப்படையிலேயே அமைந்துள்ளன.

மனிதர்களிடையே பிளவினை ஏற்படுத்திச் சண்டைகளுக்கும், தீய செயல்களுக்கும் காரணமாகச் சாதி அமைந்துள்ளது.

தற்காலத்தில் மனிதநேயம் மறைந்து, வெறுப்பும், விரோதமும் வளரச் சாதி துணை செய்து வருகின்றது. சாதியினால் உயர்வு, தாழ்வு கற்பித்து மக்களை ஒடுக்குவதும், ஒதுக்குவதும் சமூகச் சீர்கேடுகளாக நடைபெற்று வருகின்றன. தொழில் அடிப்படையில் பிரிந்த சாதிப்பாகுபாடு பிறப்படிப்படையாகக் கருதப்பட்டு கேடுகளுக்கு வழி செய்து வருகிறது.

**சாதிப் பாகுபாடுகளும் தொழில்களும்**

இந்திய நாட்டில் சமுதாயம் சாதியடிப்படையில் பிரிந்துக்கிடக்கிறது. சங்ககாலச் சமுதாயத்திலும் இப்பாகுபாடு குறிப்பிடத்தக்க அங்கமாகவே விளங்கியுள்ளதை அறியமுடிகின்றது. அன்று இது நில அடிப்படையிலும், மக்கள் செய்யும் தொழில்கள் அடிப்படையிலும், பல பிரிவுகளையுடைய சமுதாயமாக விளங்கியுள்ளது. ஐவகையான நிலங்களை அடிப்படையாகக் கொண்டு அந்நிலங்களுக்குத் தொழிற்பிரிவு ஏற்பட்டன. ஐவகை நிலங்களையும் ஐவகைத் திணைகளாகக் குறிப்பிடுவர். “திணை என்னும் சொல்லுக்கு குடி”[25] என்று பொருள். “குடிகள் வாழும் நிலமும் திணை எனப்பட்டது. சொல்லிலக்கணங்களால் விளக்கப்படும் திணைகள் வேறு. அவை உயர்திணை, அ.்.றிணை என்று பொருள் இலக்கணத்தில் விளக்கப்படும். இவ்வைந்து திணைகளும் வாழ்க்கையைப் பற்றியவை. திணை என்னும் சொல் நிலத்தை மட்டுமன்றி நிலத்தின் அமைப்பு அங்கு வாழும் மக்கள் இயல்பு, அங்கு உயிர் வாழும் விலங்குகள், பறவைகள், செடி

கொடிகள், மரங்கள், உழவுப் பயிர் வகைகள், மக்கள் வழிபட்டு வந்த தெய்வங்கள் ஆகியவற்றையும் குறிக்கும்."[26]

தொல்காப்பியர் பெயர்ச் சொல்லின் வகைகளைச் சுட்டுமிடத்தில் "நிலப்பெயர், குடிப்பெயர், குழுவின் பெயர், கிளைப்பெயர்"[27] எனப் பல வகையான பிரிவுகளைச் சுட்டுகின்றார்.

**வர்க்கமுறை**

வர்க்கம் (Class) என்பது சமுதாயத்தில் நிலவுகின்ற ஏற்றத் தாழ்வுகளை விளக்குவதற்குப் பயன்படுகின்ற சொல்லாகும். "சமுதாயத்தில் மிகுந்த செல்வர்கள், மிகுந்த வறுமையானவர்கள். இவர்கள் இருவருக்கும் இடைப்பட்டவர்கள் என மூன்று வகையான வர்க்கங்கள் நிலவும்"[28] என்பது அரிஸ்டாட்டில் என்ற அறிஞரின் கருத்தாகும். ஒவ்வொரு காலத்திலும் சுரண்டும் வர்க்கம், சுரண்டப்படுகின்ற வர்க்கம் என்ற இரண்டுவிதமான வர்க்கங்கள் இருக்குமென்றும், பொதுவுடைமைச் சமூகத்தில் வர்க்கமே இருக்காது என்பது மார்க்சீய விதியாகும்.

"தொழிலாளர்கள் (Proletarial), முதலாளிகள் (bourgeoisie) என இரண்டு வர்க்கங்களே சமுதாயத்தில் நிலவும்"[29] என்பார் கார்ல்மார்க்ஸ்.

"உழைப்பை நம்பியுள்ள தொழிலாளிகள், நிலத்திலிருந்து வரும் குத்தகையை நம்பி வாழும் நிலச் சொந்தக்காரர்கள், வாணிகம் மூலம் கிடைக்கும் இலாபத்தை நம்பி வாழும் வணிகர்கள் ஆகிய மூன்று பிரிவினர்கள் சமுதாயத்தில் இருப்பர்"[30] என்பார் ஆடம்ஸ்மித்.

“வாழ்க்கையின் அடிப்படைத் தேவைகளுக்காக உழைத்து வாழும் தொழிலாளர்கள் ஒருபுறமும், மிகுதியான செல்வத்தைப் பகட்டாகச் செலவழித்துக்கொண்டு வாழும் ஓய்வு வகுப்பினர் மறுபுறமும் சமுதாயத்தில் இருக்கின்றனர்”[31] என்பார் தான்ஷ்பீன் வெப்லான். அறிவியல் அறிஞர்களின் கூற்றுப்படி அனைவரும் குறிப்பிடும் சமுதாயப் பிரிவுகளானது, செல்வத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளது. செல்வமே மக்களைப் பல்வேறு வர்க்கங்களாகப் பாகுபடுத்துகிறது என்பதை அறியமுடிகிறது. சொத்து, வருவாய், தொழில், கல்வி ஆகியவற்றின் அடிப்படையிலேயே வர்க்கங்கள் பாகுபடுகின்றன. வருவாய் வேறுபாடுகளானது, வர்க்க அமைப்பு ஏற்படுவதற்குக் காரணமாக அமைகின்றது.

“சமுதாயத்தை உயர்வர்க்கம், இடைநிலை வர்க்கம், கீழ்வர்க்கம் என மூன்று வர்க்கங்களாக மட்டுமே பிரிப்பது பழைய நிலையாகும். ஆனால் இன்றைய நிலையில் இப்பிரிவுகளுள் நிலவும் தகுதிநிலையின் தொடர்ச்சியை (Status Continue) அடிப்படையாகக் கொண்டு ஆறு பிரிவுகளாகப் பிரிப்பர்.”[32]

**1. உயர்ந்த மேல்நிலை (Upper-Upper)**

இப்பிரிவினர் நெடுங்காலமாகச் செல்வக் குடும்பத்தினர் என்னும் தகுதியுடையோர் இவர்களிடம் இவ்வளவு செல்வம் எப்போது வந்தது என்பதை மக்கள் கணக்கிட முடியாத அளவு பழமைமிக்கவர்கள்.

**2. தாழ்ந்த மேல்நிலை (Lower-upper)**

இப்பிரிவினரும் செல்வர்களே. ஆனால் இச்செல்வத்தை நெடுங்காலமாகக் கொண்டவர்கள் அல்லர்.

### 3. உயர்ந்த இடைநிலை (Upper-Middle)

இப்பிரிவினர் வணிகத்திலும், தொழில்முறை சார்ந்த துறையிலும் (Professional Field) செல்வாக்குப் பெற்றவர்கள்; நல்ல குடும்பப் பின்னணியும், நிறைவான வருவாயும் கொண்டவர்கள்.

### 4. தாழ்ந்த இடைநிலை (Lower-Middle)

அரசுப் பணியாளர்களும், பாதியளவு தொழில்துறை சார்ந்த துறையினரும், கைவினைத் தொழிலில் சிறந்து விளங்குவோரும் இப்பிரிவில் அடங்குவர்.

### 5. உயர்ந்த கீழ்நிலை (Upper-Lower)

நிலையான வருவாயைக் கொண்ட தொழிலாளர்கள் இவர்கள் ‘கீழ்வர்க்கத்தினர்’ (Lower Class) எனக் குறிப்பிடும் போது சலிப்படைபவர்களாக இருப்பர்.

### 6. தாழ்ந்த கீழ்நிலை (Lower-Lower)

நிலையற்ற வேலையும், பகுதிநேரக்கூலி வேலையும், வேலையின்மையும் கொண்டவர்கள் இப்பிரிவைச் சேர்ந்தவர்களாவர்.[33] வர்க்க சமுதாயங்களுக்கும், சாதியமைப்புடைய மூடிய சமுதாயங்களுக்கும் (Closed Society) ஒரு முக்கியமான வேறுபாடு உண்டு. வர்க்கச் சமுதாயங்களில் ஒருவர் தம் தகுதி நிலையைச் செங்குத்துப் போக்கில் உயர்த்திக் கொள்வர். (Vertical Mobilization). தாழ்ந்த கீழ்நிலை வர்க்கத்தைச் சேர்ந்த ஒருவர் அடுத்த தலைமுறையில் பெரும் மருத்துவராக பொறியியலராக அல்லது வேறு தொழிலைக் கொண்டு மேல்நிலை வர்க்கத் தகுதியை ஈட்டிக் கொள்ளமுடியும். ஆனால் சாதி அடுக்கமைப்புடைய சமுதாயத்தில் இவ்வாறு ஒருவர் தம்

தகுதியைச் செங்குத்துப் போக்கில் உயர்த்திக் கொள்ளமுடியாது. இடைநிலைப் போக்கில் மட்டுமே உயர்த்திக் கொள்ளமுடியும்.

**பிராமணரும் துறவியரும்**

ஆரியருக்கும், தமிழருக்கும் பண்பாட்டுத் தொடர்பு ஏற்பட்ட காலத்திலிருந்தே பிராமணர் தமிழ்ச் சமுதாயத்தின் இணைபிரியாப் பகுதியாக இருந்துள்ளனர். சங்க இலக்கியத்திலுள்ள ஒவ்வொரு நூலிலும் அந்தணரைக் குறித்த பதிவுகள் இருக்கின்றன. தொல்காப்பியம், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு, இரட்டைக்காப்பியங்கள் போன்றவற்றில் பிராமணரைக் குறித்த பதிவுகள் காணக்கிடைக்கின்றன. பிராமணர்களும் இலக்கியங்களை யாத்துள்ளனர். புரவலராயும் இருந்திருக்கின்றனர். மேலும் தூதுவர், புரோகிதர், துறவியர், இல்லறத்தார், வைசியர், அறக்களத்தோர் என்னும் பலவகை நிலைகளில் பிராமணரைக் காணமுடிகின்றன.

பிராமணர் என்பது பிரமம் அல்லது முழுமுதற் பொருளை ஆய்பவர் என்று பொருள்படும். அதாவது தத்துவர் என்பர். தமிழில் இச்சொல்லுக்கு மிக நெருங்கிய பதியாயச் சொல் ‘அந்தணர் அல்லது பார்ப்பார்’ (புறநா.34) அல்லது ‘மறையவர்’ (சிலப்.63) என்று பொருள்படும். வள்ளுவர்,

**“அந்தணர் என்போர் அறவோர் மற்றெவ்வுயிர்க்கும்**
**செந்தண்மை பூண்டொழுகலான்” (குறள்.30)**

என்றனர். ‘அந்தணர்’ என்ற சொல்லானது செந்தண்மை பூண்டொழுகுவார் என்றதனால் இது அனைவருக்கும் பொதுவான சொல்லாகும்.

**பார்ப்பார்**

இனக்குழுக்களாக வாழ்ந்த மக்களை சாதி என்ற ஒன்றால் பாகுபாடு செய்து வைத்ததில் முக்கியப் பங்கு வகித்தவர்கள் ஆரியர்களாவர். இவர்கள் இந்தியாவிற்குள் வருவதற்கு முன்பு இந்திய மக்களிடம் பிறப்பால், உடல் அமைப்பால், பண்பாட்டால், பழக்க வழக்கத்தால் பாகுபாடு ஏதும் இல்லை எனலாம். இவர்கள் வந்த பின்னரே சாதிப் பாகுபாடு ஏற்பட்டுக் காலப்போக்கில் வருணப் பாகுபாடு புகுத்தப்பட்டது. "கி.மு.1500இல் ஆரியர்கள் இந்தியாவிற்கு வந்த போது இங்கு வாழ்ந்த மக்களிடையே உடல் அமைப்பாலோ, நிற வேறுபாட்டாலோ, பிறப்பு, வாழ்க்கைநிலை போன்றவற்றாலோ எவ்வித உயர்வு, தாழ்வு கற்பித்துக் கொண்ட குழுக்கள் செயல்முறையில் இல்லை. ஆனால் இங்கு வந்தேறிய ஆரியர்கள் உடலாலும், நிறத்தாலும், மொழியாலும், சமயத்தாலும், இந்நாட்டு மக்களிடமிருந்து வேறுபட்டுக் காணப்பட்டனர். அவ்வேறுபாடுகளைப் பயன்படுத்தி இங்கு வாழ்ந்தோரை தஸ்யூக்கள் அல்லது தாசர்கள் என்று வேறுபடுத்திக் குறிப்பிடத் தொடங்கினர்."[34] இந்த வேறுபாடே காலப்போக்கில் வருணப் பாகுபாடாக, சாதிப் பாகுபாடாக நிலைக்கத் தொடங்கியது எனலாம்.

பிராமணர்கள், சத்திரியர்கள், வைசியர்கள், சூத்திரர்கள் என நான்கு வருணத்தினராகப் பிரித்து இவர்களுக்கு வேதம் ஓதுதல், புரவி புரத்தல், செல்வம் ஈட்டல், ஏவல் புரிதல் எனத் தொழில் நான்கையும் பகுத்துக் காட்டினர். இப்பாகுபாட்டை நிலைப்படுத்த மனுதரும சாத்திரங்கள் போன்ற நூல்களையும் உருவாக்கினர். மேலும் இவர்கள் தொழிலை அடிப்படையாகக் கொண்டு அத்தொழிலின் தன்மையால் தீட்டு, தூய்மை ஆகிய

கருத்தாக்கங்களை ஏற்படுத்திச் சாதிப் பிரிவுகளை நியாயப்படுத்தி வருகின்றனர்.

ஆனாலும் சாதி என்ற வடிவம் தோற்றம் பெறுவதற்குத் தொழிற் கொள்கை மட்டும் முக்கிய அங்கம் வகிக்கவில்லை. உடல் அமைப்பு, திறம், பழக்க வழக்கம் முதலிய கூறுகளும் முக்கிய அங்கம் வகித்தன. இக்கருத்துக்கு அரணாக ஹட்டன் (Hutton) பின்வருமாறு கூறுகிறார். "சாதிகளின் படிநிலை வளர்ச்சிக்குத் தொழிற் பிரிவுகள் ஒரு காரணியாகத் தான் செயல்பட்டனவே தவிர அவை முழுமையான விளைவை ஏற்படுத்தவில்லை."[35]

இந்தியாவிற்குள் நுழைந்த ஆரியர்கள் தங்களின் வாழ்க்கையை மேம்படுத்திக் கொள்வதற்காகச் 'சாதி' என்ற கருவியைக் கையில் எடுத்துக் கொண்டனர். இவ்வலுவான ஆயுதத்தைப் பயன்படுத்திக் கொண்டு இந்திய சமூகத்தின் பழங்குடிகளைச் சிறுசிறு கூட்டமாகச் சிதறடித்தனர் என்ற குர்ரேயின் (G.S.Churye) கருத்து இங்கு ஒப்புநோக்கத்தக்கதாக உள்ளது. பிராமணர்கள் சமுதாயத்தில் உயர்ந்த தகுதியைப் பெற்று அதன்மூலம் பல்வேறு சலுகைகளை அனுபவிக்கும் பொருட்டு அவர்கள் செய்த சூழ்ச்சியே சாதிகள் தோன்றக் காரணங்களாக இருக்கின்றன.

சமயச் செயல்களையும், சடங்குகளையும் செய்யும் பொருட்டு உணவு, குடிநீர், திருமணம் போன்றவற்றின் மீது சில கட்டுப்பாடான விதிகளை ஏற்படுத்தியதனால் ஓர் அகமணக்குழுவினர் மற்ற பிரிவினரை தம் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவந்தனர். இதன்மூலம் பிராமணர்கள் மற்றவர்கள்

மீது அதிகாரம் செய்யத் தொடங்கினர். “சாதி என்பது இந்திய ஆரியப் பண்பாட்டில் ஏற்பட்ட பிராமணக் குழந்தை. சாதி என்னும் குழந்தை முதலில் சங்கைப்படுகையில் தவழ்ந்து வளர்ந்து பின்னர் அவர்களால் இந்தியாவின் பிற பகுதிகளிலும் வேரூன்றியது.”[36]

“‘சாதி அமைப்புடைய சமுதாயம் தோன்றியதற்குப் பல காரணிகள் செயற்பட்டிருந்தாலும் அவை அனைத்தும் பிராமணர்கள் முதன் முதலில் முதுகுடிகளைச் சமயச் செயல்களிலிருந்து நீக்க மேற்கொண்ட முயற்சிகளால் இருந்தும், சமுதாயத்தில் அவர்களோடு மற்றவர்கள் சேர்ந்து செயல்படுவதைத் தடுக்க மேற்கொண்ட முயற்சிகளிலிருந்தும் ஏற்பட்ட விரிவாக்கங்களே ஆகும். ஆரியர்கள் தங்களை உயர்ந்த இனத்தினர் என அவர்களாக எண்ணிக் கொண்டதுடன் திராவிடர்களை தஸ்யூக்கள் என்றும், கீழினமென்றும் அதனால் அவர்கள் தாழ்வான பணிகளையே செய்ய வேண்டும் என்றும் கூறிக் கொண்டனர். ஆரியர்களின் இவ்வாறான இனப்பண்பாட்டு உயிர் வாதங்கள் சாதி வேறுபாடுகளைத் தோற்றுவித்தன. தீண்டாமைச் சாதிகள் என்னும் மற்றொரு பிரிவையும் தோற்றுவித்தன”[37] என்ற கருத்து இங்கு எண்ணத்தக்கதாகும்.

ஆரியர்கள் உருவாக்கிய சாதியக் கட்டுமானம் காலப்போக்கில் இந்தியப் பழங்குடிகளுக்குள்ளே உயர்வு தாழ்வை ஏற்படுத்திச் சமூக வளர்ச்சிக்குப் பெரும் இடையூறாக அமைந்தன. இதேநிலையே தமிழகத்திலும் நிலவியது. ஆரியர்களால் உருவாக்கி வைக்கப்பட்ட இச்சாதி தமிழ்ச் சமுதாயத்தையும், பல்வேறு படிநிலைகளில் சிக்கியது. மக்கள் ஒற்றுமையைச் சிதறடித்தது. சாதியால் உயர்வு, தாழ்வு ஏற்படுத்தப்பட்டுத் தீண்டத்

தகாதவர்கள் என ஒதுக்கப்பட்ட சமூகம் பல கொடுமைகளுக்கு உள்ளாக்கப்பட்டது.

“மன்னர்கள் தங்களுக்கான சர்வ அரசியல் பொருளாதார வல்லமையைத் தக்க வைத்துக் கொள்ளும் பொருட்டுச் சடங்கியல் செயல்பாடுகளைப் பிராமணர்கள் வழி செய்து கொண்டார்கள். எஜமானர்களான மன்னர்களின் தெய்வீக, ஆன்மீக ஆற்றலுக்கு வழிகோலும், வேள்விச் செயல்பாடுகளை புரோகிதர்கள் செய்தனர். அப்பணிகளுக்காக எஜமானர்களான அரசர்களிடம் இருந்து தானங்களும், தட்சிணைகளும் பெற்று வாழ்க்கை நடத்தினர். பொருளியல் நிலையிலும் அரசியல் நிலையிலும் மேலாண்மை பெற்று எஜமானர்களாகத் திகழ்ந்த அரசர்களின் “அதிகாரம்” (Power) என்னும் தளம் (Domain), ஆன்மீகம், சடங்கு, சடங்குவழி ஆற்றல் இவற்றைக் கொண்டு மன்னனுக்கும், அரசுக்கும், நாட்டுக்கும் மேன்மை ஏற்படுத்தினர் பிராமணர்கள். இவர்கள் மன்னர்களைக் காட்டிலும் கூடுதல் ‘சமூகத்தகுதி’ (Status) பெற்றுத்தரும் தளமும் கொண்ட உறவே சாதியமைப்பின் அடித்தளம் என்பார் தூய்மோன்.”[38] மேலும் “மன்னர்களின் சர்வ வல்லமைக்குப் பயன் செய்யும் பொருட்டு மக்கள் பல குழுக்களாகப் பாகுபட்டனர். இப்பாகுபாடு பொருளியல் உற்பத்தியில் பங்கேற்பு, பணிப்பகிர்வு என்பன தொடங்கிச் சடங்கு நிலை, திருமண உறவு கொள்ளும் குழுக்களின் எல்லை வரை விரிந்து ஒவ்வொரு குழுவும், தங்களுக்கு ஏற்படுத்திக் கொண்ட உறவு சாதியப் படிநிலைக்கு மற்றுமோர் அடித்தளத்தை அமைத்தது என்பார் தூய்மோன்.”[39]

“வேதகாலத்தில் முடியாட்சி அமைப்பில் பிராமணர்கள் மன்னர்களுக்கு அடுத்த பிரிவினராக இருந்தனர். இவர்கள் உயர் சாதியினருக்கு இணையாகவும், சடங்கு ஊழியம் செய்பவராகவும் காணப்பட்டனர். முடியாட்சி அமைப்பின் நீண்ட வரலாற்றில் சாதியத்தின் அரசியலும் முக்கியத்துவம் வாய்ந்தது. இது பிராமணர்களின் மேலாதிக்கத்தை வலுவூட்டிவிட்டது. இதற்கு முடியாட்சி அரசர்களின் பெருங்கொடையும், தானங்களும் அவர்களை எஜமானர்களிடமிருந்து தானங்கள் பெற்று வாழும் நிலையிலிருந்து உயர்த்தியது. இவ்வாறான மாற்றங்களைப் பிராமணர்கள் ஏற்படுத்திக் கொண்டனர் என்றாலும் வேதகாலத்திற்குப் பிந்தைய காலத்தில் துணைக் கண்டத்தின் பல பகுதிகளிலும் குடியேறிய பிராமணர்கள் அந்தந்தப் பண்பாட்டுப் பகுதியின் தன்மைகளுக்கு ஏற்ப மாறிக் கொண்டனர். குறிப்பாக திராவிடப் பண்பாட்டுப் பகுதிக்கு வந்த பிராமணர்கள் இப்பகுதிக்கான மொழிகளையும், திராவிடப் பண்பாட்டின் பல மூலப்படிவ குணாதிசயங்களையும் அப்படியே ஏற்றுக் கொண்டனர்”[40] என்பார் ஹோகார்ட்.

**சங்க இலக்கியத்தில் மகளிர்நிலை**

சங்க இலக்கியப் பெண்கள் “ஆடல் பாடலில் திறம் பெற்றிருந்தனர்.”[41] “விளையாட்டில் பயிற்சி பெற்றனர்,”[42] “தொழிலார்வம் உடையவராயிருந்தனர்”[43] “கலைப்பாங்கு உடையவர்”[44] “உணவாக்கல்”[45] குடும்பம் பேணல் என்ற துறைகளிலும் சிறந்திருந்தனர். புலவர்களாகவும் வீற்றிருந்தனர்.

ஆண்பாற் புலவர்களோடு பெண்பாற் புலவர்களது எண்ணிக்கையை ஒப்பிடும்போது அதன் விகிதாச்சாரம் குறைந்திருந்தாலும் தரம் ஒத்த நிலையில் காணப்படுகிறது. பெண்களுக்குத் தம் கருத்தை, அறிவைப் புலப்படுத்த அக்காலச் சமுதாயத்தில் வாய்ப்பிருந்தது என்பது குறிப்பிடத்தக்கதாக உள்ளது. மொத்தம் உள்ள 463 சங்கக் கவிஞர்களில் 40 பேர் பெண் கவிஞர்கள். இந்த விழுக்காட்டைக் காணும்பொழுது பெண்களில் கற்றறிந்தவர்கள் ஆண்களைவிடக் குறைவாகத்தான் இருந்தார்கள் என்ற முடிவுக்கு வரமுடியும். இருந்தாலும் பெண்களுக்கும் கல்வி கற்பதற்கு வாய்ப்புக் கொடுக்கப்பட்டது என்பது கவனிக்கப்பட வேண்டிய ஒன்றாகும்.

“சங்ககாலப் பெண்பாற்புலவர்கள் அரசியல், வரலாறு, தொழில், சோதிடம், வானவியல், இயற்பியல், தத்துவம், புராணம், சமுதாயம் ஆகிய அனைத்துத் துறைகளிலும் தேர்ச்சி உடையவராயிருந்தனர் என்பர் பெ.சு.மணியும் பத்மாவள்ளியும்.”[46]

சங்க இலக்கியப் பெண்களின் கலை உணர்வு, அவர்கள் ஆடல், பாடல், நடனம், பாட்டு ஆகியவற்றில் பங்கு பெற்றதன் அடிப்படையில் புலப்படுகின்றது.

பெண்களது இல்லப்பணி என்பது தந்தைவழிச் சமுதாயத்தில் பெண்களுக்கு உருவாக்கப்பட்ட வேலைப் பகிர்வாகக் காணப்படுகிறது. சங்க காலத்தில் பெண்கள் இல்லப்பணியுடன் மட்டுமல்லாது சமுதாயத்தில் வணிகப் பணியையும் செய்து வந்தனர். வணிகத்தில் பெண்களது இடம்பற்றிய பொருளியல் அறிஞர் கருத்துக்கள் சங்க இலக்கியப் பெண்கள் மேற்கொண்ட வணிகத்துடன் ஒப்பிட்டு விவாதிக்கப்படுகின்றன.

“ஒரு நாட்டிற்குள்ளேயே நடைபெறும் வாணிகம் உள்நாட்டு வாணிகம் எனப்படும்”[47] என்றும், “இதில் ஈடுபடுகின்ற மக்கள் ஒரே வகைப்பட்ட சட்ட ஒழுங்கு முறைகளுக்குக் கட்டுப்படுகின்றனர்”[48] என்றும், “வாணிகம் மொத்த வாணிகம், சில்லறை வாணிகம் என இரு வகைப்படும். சரக்குகளைச் சிறிய அளவில் வாங்கி விற்பது சில்லறை வாணிகம்; முதலீட்டுப் பொருள்களைப் பேரளவில் வாணிகம் செய்வது மொத்த வாணிகமாகும்”[49] என்றும், “உள்நாட்டு அங்காடிகளில் சில காலத்திலும், சில இடங்களிலும் பண்டமாற்று முறையில் நடைபெறுகிறது”[50] என்றும், “பண்டமாற்றுமுறை செயல்படுவதில் பல சிக்கல்கள் காணப்படுகின்றன. விற்போர் நுகர்வோருக்கிடையே வேற்றுமைகள் காணப்படுகின்றன. ஒரே பண்டத்தின் அங்காடிகளின் பன்முகத் தன்மையாலும் விளைவுகளின் ஏற்றத்தாழ்வுகளினாலும் பல மாற்றங்கள் காணப்படுகின்றன என்றும், நுகர்வோர் பெரும்பாலும் இடைத்தரகர்களால் ஏமாற்றப்படுவதற்கு வாய்ப்புகள் ஏற்படுகின்றன”[51] என்றும் குறிப்பிடுகின்றனர்.

சங்க இலக்கியத்தில் பெண்களுக்கு மட்டுமே இல்லப்பணி என்பது மிக அழுத்தமாகப் பதிவாகியுள்ளது. அதேநிலையில் பெண்கள் பிற சமுதாயப் பணிகளிலும் ஈடுபட்டிருக்கின்றனர். பெண்களின் பல்வேறு சமுதாயப் பணிகளில் ஒன்றாகக் காணப்படுகிறது. வணிகப் பணியில் பெண்களின் இடம், திறம் ஆகியன நில அடிப்படையில் ஈண்டு விளக்கம் பெறுகின்றன.

**குறிஞ்சி நில மகளிர்**

குறிஞ்சி நிலத்துப் பெண்கள் தம் இடம் விடுத்துச் சென்று விற்பனையில் ஈடுபட்டனர் என்று செய்தி இல்லை. ஆயின் “குறிஞ்சிநில

மக்கள் தேடலையும் கிழங்கையும் பிற நிலத்தார்க்குக் கொடுத்து மீன் நெய்யையும், நறவையும் வாங்கிச் சென்றனர். இனிய கரும்போடு அவலைக் கூறுபடுத்தி விற்றவர்கள், மானினது தசையோடு கள்ளையும் பெற்றனர்" (பொருந.214-217) என்று விற்பனையில் ஈடுபட்ட செய்தி மட்டும் காணப்படுகிறது.

### மருதநில மகளிர்

மருதநிலப் பெண்கள் வணிகத்திற்காக அங்காடி நோக்கிச் சென்றதாகச் செய்தி இல்லை. அவர்கட்குத் தம் நிலமே அங்காடியாயிற்று. நெல் அழியாதது. அதனால் உடனடியாக விற்க வேண்டிய அவசியம் இல்லை. எனவே அம்மகளிர் வீட்டிலிருந்தபடியே தாம் வாங்கும் பொருளுக்கு ஏற்ற நெல்லைக் கொடுத்தனர். "முத்து, நன்கலம் ஆகியவற்றுக்கு வாளை மீனும், பயறுக்குக் கெடிற்று மீனும், ஓராண்டு கழிந்த பழைய வெண்ணெல்லுக்கு வரால் மீனும், பல்வேறு நெல்லுக்குச் சிலவாகிய மீனும் பெறும்"[52] முறையில் மருதநில மகளிரது வாணிகம் நடைபெற்றது.

### நெய்தல் நில மகளிர்

நெய்தல் நிலப் பெண்டிருக்கு மீனும் உப்பும் வாணிகத்திற்குரிய பொருட்களாகின்றன. பெண்கள் தெருவில் விற்பனை நிகழ்த்தியிருக்கின்றனர். "இவர்கள் உப்பைக் கொண்டு பண்டமாற்றாகத் தமக்கு வேண்டிய நெல்லைப் பெற்றனர்."[53] மீனைத் தெருக்களில் விலை பகர்ந்த செய்தி மட்டும் காணப்படுகின்றது. நெல் நீண்டகாலம் இருக்கக் கூடியதாலும், பரந்த அங்காடி அதற்கு உண்டென்பதாலும் மருதநில மகளிர் சந்தைக்கு வணிகத்திற்குச்

செல்லவில்லை. ஆனால் நெல்லின் தேவை காரணமாக நெய்தல் மகளிர் உப்பைத் தெருவிற்குக் கொண்டு வந்தனர். உப்புக்கு நெல் நேர் என்றும், மீனுக்கு விலை பகரப்பட்டது என்றும் கூறுவது பெண்களால் விலை நிர்ணயம் செய்யும் தலைமை நிலையை எடுத்துக் காட்டுகிறது.

"தொழிலில் முக்கியத்துவம் வாய்ந்த ஒரு நிறுவனம் விலையை நிர்ணயிக்கும். மற்ற நிறுவனங்கள் அதைப் பின்பற்றும் இம்முறைக்கு விலைத் தலைமை"[54] என்று பெயர். சங்க இலக்கியப் பெண்களது விலை நிர்ணயம் பொருளியலறிஞர் கருத்துடன் இயைந்து காணப்படுகிறது. இவர்களது விற்பனையில் பேரம் இல்லை. அங்காடியில் போட்டிக்கோ, மக்களின் வாங்குந்திறன் பற்றியோ சிந்திக்காத முற்றுரிமையாளராக நெய்தல் நிலப்பெண்கள் காணப்படுகின்றனர்.

**முல்லை நில மகளிர்**

குடும்பத்தின் பொருளாதார நிலையைச் சீர்செய்யப் பெண்கள் வேற்றிடம் செல்ல வேண்டிய சூழல் ஏற்பட்டமையை முல்லைநில மகளிரின் வணிகம் புலப்படுத்துகின்றது. முல்லைநிலப் பெண்களது விற்பனை இலாப நோக்குடையதாகத் திகழ்கின்றது. மருதம், நெய்தல் போன்று முல்லைநிலப் பெண்டிரும் பண்டங்களை மாற்றாகப் பெறினும் சில இடங்களில் அம்மாற்றுப் பொருட்கள் தொடர்வளர்ச்சி நிலையை எதிர்நோக்குவனவாகவே உள்ளன. "மோருக்கு வெண்ணெல் பெற்றனர். நெய்க்கு மாற்றாகப் பொன் பெறாது எருமை, ஆண் கன்று இவற்றையே பெறுநர்"[55] என்று கூறப்படுவதினின்றும் பொருளாதார வளர்ச்சியில் இவர்களின் அக்கறை தெரிகிறது. "எதிர்காலத்தில்

தொழிலை விரிவுபடுத்த மூலதனம் தேவைப்படும். இலாபத்தைப் பெற்றால் அதை மறு முதலீடு செய்வதற்கும் தொழில்களின் வளர்ச்சிக்கும் பயன்படுத்த உதவும்”[56] என்ற பொருளியற் கருத்து அக்கால முல்லைநில மகளிரது சிந்தனையில் உருவாகியிருக்கிறது. பெண்கள் பொருளாதார ரீதியாகச் செயல்பட்டாலும் அதில் அடிமைத்தனமோ அன்றி வலிந்து ஈடுபட்டதாகவோ செய்திகள் இல்லை.

நல்லியல்பிழந்த இந்நிலத்திலும் பெண்கள் வணிகம் செய்திருக்கின்றனர். “பூவிற்றலும், கள் விற்றலும் இந்நில மகளிரது தொழிலாகும்.”[57] சிறுகுடி மறுகுதொறும் பழையர் மகளிர் பூவிற்றனர் என்ற செய்தி காணப்படுகின்றது. “பூ வணிகம் பற்றி மூன்று செய்திகள் காணப்படுகின்றன.”[58]

சங்க இலக்கியப் பெண்களது வாணிகம் நாடு கடந்து நடைபெறவில்லை. தமிழ்நாட்டின் ஐவகை நிலப்பகுதிகளுக்குள் மட்டுமே நடைபெற்றமையால் பெண்கள் மேற்கொண்ட வணிகம் உள்நாட்டு வணிகம் என்பது உறுதிசெய்யப்பட்டுள்ளது.

சங்க இலக்கியப் பெண்கள், மேற்கொண்ட வணிகம் சிறுவணிகமாகவே காணப்படுகின்றது. மொத்தமாக ஏதோ பொருளைப் பண்டமாற்றுக்குப் பயன்படுத்திய செய்தி இல்லை. “ஒரே பொருளுக்குப் பலவகைப் பொருட்களைப் பெற்ற சான்றுகளே காணப்படுகின்றன.”[59] சங்க இலக்கியப் பெண்களது வணிகத்தில் சட்ட ஒழுங்குமுறைக் கட்டுப்பாடுகள் இல்லை.

சங்க இலக்கியப் பெண்கள் மேற்கொண்ட வணிகம் அனைத்து இடங்களிலுமே பண்டமாற்றாகவே காணப்படுகின்றது. சங்க இலக்கியக் காலத்தில் 'பனை இடையீடு' என்பது உருவாகவில்லை. அதனால் வணிகம் முழுமையும் பண்டமாற்றாக நடைபெற்றது என்பது உறுதியாகின்றது.

**சங்க இலக்கியத்தில் பெண்களின் பல்வேறு பணிகள்**

சங்க இலக்கியம் தந்தைவழிச் சமுதாயக் கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்ட நிலைத்த குடும்ப அமைப்புடையது. இக்குடும்பத்தில் பெண்கள் பல்வேறு பணிகளை ஆற்றித் தம் பங்கினை நிலை நிறுத்துகின்றனர். "பெண்களின் பணிகள் சங்க இலக்கியத்தில் இரு வகைகளாகக் காணப்படுகின்றன. 1. இல்லம் சார்ந்த பணி, 2. சமுதாயம் சார்ந்த பணி என்பவையாகும். அவற்றுள் முதல்நிலை சார்ந்த பணிகளாக,

1. அதிகாலையில் எழுந்து இல்லப்பணி செய்தல் (ம.கா.664)
2. முற்றம் கூட்டல். (ம.கா.684-686)
3. கிணற்றில் நீர் எடுத்தல். (பெரும்.97-98
4. கலங்கிய நீரைத்தெளிய வைத்தல். (நெய்.கலி.142:64-65)
5. பாத்திரம் கழுவுதல். (புறம்.120)
6. உணவு சேகரித்தல். (அகம்.283, பெரும்பாண்.327-336)
7. புல்லரிசி எடுத்தல். (பெரும்.90-94)
8. நெல்குற்றல். (பெரும்.90-97, குற்றல் அகம்.9,393, குறுந்.89, உலக்கையில் அவல் இடித்தல், குறுந்.238)

9. மரத்திரிகையில் திரித்தல். (அகம்.224:2)

10. அடுப்பெரித்தல். (புறம்.108:1-3)

11. சமைத்தல். (இயல்.2:4, நற்.41)

12. தயிர்கடைதல். (முல்.கலி.110:10-11)

13. விளக்கேற்றுதல். (நெய்.கலி.2:13-14)

14. அந்தியில் விளக்கேற்றுதல். (நெடுநல்.42)

15. சோறு கொண்டு செல்லுதல். (முல்.கலி.108:30-33)

16. புண்பட்ட வீரரைக் காத்தல். (புறம்.281)"[60]

என்பவை அமைகின்றன. இரண்டாம்நிலை சார்ந்த பணிகளாக,

"1. உழவுத் தொழில்

2. உணவு காத்தல்

3. ஆடை வெளுத்தல்

4. ஏவல் மகளிர்

5. குழந்தை வளர்த்தல்

6. அரியல் பெண்டிர்

7. பருத்திப் பெண்டிர்"[61]

என்பவை அமைந்துள்ளன.

**பாடுநர்கள்**

விறலியர், பாடினி, பாண்மகள் ஆகியோர் பாடல் பாடுவதையே தொழிலாகக் கொண்டவர்களாவர்.

விறலியர்தம் பாடலுக்குப் பரிசு கிடைக்கும் என்ற நம்பிக்கை சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றது. அதனால் தான் “பாரிவேள்பால் பாடிச் சென்றால் சேயிழை பெறுவாய்” (புறநா.105:8) என்று கூறப்படுகிறது. மற்றொரு இடத்தில் “பறம்பு வெல்வதற்கு எளிதன்று எனினும் விறலிக்கு எளிது” (புறநா.111:4) என்றும், “வாளை வைத்து விருந்து செய்த நிலையிலும் மற்றவர்க்குக் கள்ளுடன் சோறு கொடுத்து விறலிக்கு அணி தருவான்” (புறநா.316) என்றும் கூறப்படுகிறது.

**பாடினி**

பாடினியும் விறலியைப்போல பாடற்தொழிலை மேற்கொண்டவளாவாள். பாடினியின் பாடற்பொருளும் வீரமே ஆகும். இதனைப் “பகை மன்னரை அழித்துப் புறக்கொடை பெற்றுச் சிறந்தவனின் வீரத்தை வியந்து பாடினாள்” (புறநா.10) என்ற புறநானூற்று வரிகளால் அறியலாம். “பாடினி வஞ்சி பாடிய” (புறநா.15:24) செய்தியும் காணப்படுகிறது.

**பாண்மகள்**

பாண்மகளும் பாடலைத் தொழிலாகக் கொண்டவளாகக் காட்சிப்படுத்தப்படுகின்றாள். பாடலுக்குப் பரிசு பெறும் நம்பிக்கை இவர்களுக்கு இருந்திருக்கிறது. “நாம் சென்றால் பகைப்புலத்தே பெறும் அருங்கலன்களை வரையாதே வழங்குவான். பாண்மகளே அவனைக் காண்பங்குச் செல்வோமோ” (பதிற்.60:1-3) எனப் பதிற்றுப்பத்துச் செய்தி புலப்படுத்துகிறது.

**புண் ஆற்றப்பாடல்**

“தொழில் பாடல், பாடல் தொழில் இவை தவிரப் புண்ணை ஆற்றுமுகமாகவும் பாடல் பாடப்பட்டமையை கூத்தராற்றுப்படை” (கூத்தராற்.303-304) காட்சிப்படுத்துகின்றது.

**திருமணமுறை**

வரைவு, வதுவை (அகநா.136), மன்றல் (அகநா.112,116), கரணம், மணம் (குறிஞ்சிப்.232) முதலிய சொற்கள் திருமணத்தைக் குறிக்கின்றன. பண்டைக்கால மக்களின் திருமணமுறை பற்றி சங்க இலக்கியம் கூறுகின்றது. இன்றைய திருமணமுறையிலிருந்து பண்டையமுறை முற்றிலும் வேறுபட்டதாகத் தெரிகிறது. சங்க காலத்தில் இரண்டு வகையான மணங்கள் நடைபெற்றிருக்கின்றன. களவு மணம், கற்பு மணம் ஆகிய இவ்விரு மணங்களும் பல வகைகளில் நடந்ததாக ஆய்வறிஞர்கள் கூறுவர். அவை, “1.களவு மணம் (களவு வெளிப்படுத்துவதற்கு முன் வரைதல், களவு வெளிப்பட்ட பின் வரைதல்), 2.தொன்றியல் மரபின் மன்றல் (மரபு மணம்), 3.பரிசமளித்து மணத்தல், 4.சேவை மணம் (பணி செய்தல்), 5.திணைக்கலப்பு மணம், 6.ஏறு தழுவி மணமுடித்தல் (முல்லைத்திணை மக்களுக்குரியது), 7.மடலேறி மணமுடித்தல், 8.போர் நிகழ்த்தி மணமுடித்தல், 9.துணங்கையாடி மணமுடித்தல், 10.பலதாரமணம்”[62] போன்றவையாகும்.

எந்தச் செயலைச் செய்தாலும் காலம், நேரம், நிமித்தம் போன்றவற்றைப் பார்த்தல் என்பது பண்டைத் தமிழர் மரபு. திருமணம் நடைபெறுவதற்கு நல்ல நேரத்தையும், காலத்தையும் பார்த்துள்ளனர்.

திருமணத்திற்குரிய காலமாக வேங்கை மலரும் இளவேனிற் காலத்தைத் தேர்ந்தெடுத்துள்ளனர். “வேங்கை தந்த வேற்பணி நன்னாள்” (நற்.369) நற்பொழுதாக இருள் நீங்கும் விடியற்காலத்தையும், திங்கள் ரோகிணியுடன் சேர்ந்த நாளையும் தேர்ந்தெடுத்துள்ளனர்.

**“கனைஇருள் அகன்ற கவின்பெறு காலை**

**கோள்கால் நீங்கிய கொடுவெண் திங்கள்**

**கேடு இல்விழுப் புகழ்நன் தலை வந்தென”　(அகநா.86:5-7)**

இன்றைக்கும் திருமணம் பேசுவதற்கு முன் ஜாதகம் பார்த்தல் (பொருத்தம்), நாள் குறித்தல் என்பது தமிழரிடையே இருந்துவரும் வழக்கம். இது நம் முன்னோர்களிடமிருந்து வழிவழியாக வந்த செயலாகும்.

இரு மனங்கள் இணையும் திருமணத்திற்கு நாளும், இடமும் குறித்த பின்னர் தலைமகன் தன்னிடம் அன்பு கொண்ட தலைவியைப் பெற்றோர் கொடுப்பப் பலரறிய மணம் செய்தனர். “வரலாற்றுக்கு முற்பட்ட மாந்தர் பயிர்ச்செழிப்புக்குச் சடங்குகள் செய்வதைப் போல தம் இனச்செழிப்பை விரும்பிச் செய்வதே மணச் சடங்காகும்.”[63]

திருமணத்திற்கு முன் மணமகள் இல்லத்தில் செம்மண்பூசி, மணல் பரப்பி மாலைகள் தொங்கவிடப்பட்டன. மணவிழா அன்று மங்கல ஒலியாகச் சங்கொலியும், மணமுழவும் ஒலிக்கப்பெற்றன. மணவிழா நாளில் சிறப்பான விருந்து நடைபெற்றது. மணத்திற்கு முன் சிலம்பு கழி நோன்பு நடைபெற்றது. விளக்கு ஏற்றப்பட்டு இறைவழிபாடு நடத்தப்பட்டது. மணமக்களின் கைகளில் காப்பு நூலைக் கட்டுவர். புத்தாடை அணிவிப்பர். மங்கலப் பெண்டிர் குடங்களில் நீரேந்தி வருவர். அக்குடங்களில் நெல்லும், மலரும் தூவி மக்கள்

ஈன்ற மங்கல மகளிர் நால்வர் மணமகளை வாழ்த்தி மண நீராடுவர். இழையணிவித்தல் நடைபெறும் பெற்றோரும், மற்றவர்களும் வாழ்த்துவர். இவை போன்ற சடங்குகள் மணநாளில் நடைபெறும். பெண்ணிற்கு கற்பின் அடையாளமாக இலை அணிவித்தல் செய்யப்பட்டது. பெண்ணிற்குத் தாலி கட்டும் வழக்கம் காணப்படவில்லை.

"திருமணத்தின் பொழுது மணமக்களுக்குத் 'தாலி' கட்டும் வழக்கம் இருந்திருக்குமாயின் இரு பாடல்களில் (அகம்.86,136) ஒன்றிலேனும் நீராட்டு, விருந்து முதலியவற்றைக் கூறும் புலவர் தாலி கட்டும் சடங்கினைக் குறிக்காமல் இருந்திருப்பாரோ என்ற ஐயம் எழுகிறது"[64] என்பர் இராசமாணிக்கம். மங்கலப் பெண்டிர் மங்கல நாணாக இழை அணிந்துள்ளதை உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்,

**"ஈகை அரிய அழை அணி மகளிரொடு"** (புறநா.127)

என்ற பாடலடியால் சுட்டுவர். இத்திருமணமுறை இருவீட்டார் இணைந்து திருமணம் செய்யும் போது நடைபெற்றவை. "நீருடன் நெல்லும் சேர்ந்து முளைவிடுதல் போல மணமகளும் பிள்ளைப்பேறு அடைவாள் என ஒத்த மந்திரமாக நெல்லும் பூவும் தூவப்பட்டன"[65] இது மனித இன விருத்தியும், பயிர்ச் செழிப்பும் அக்காலத்தில் தொடர்பு படுத்தப்பட்டிருப்பதற்கு மற்றொரு சான்றாகும்.

**தொல்காப்பியத்தில் விளிம்புநிலை மக்கள்**

தொல்காப்பியத்தில் விளிம்புநிலை மக்கள் பற்றிய பதிவு உள்ளது. அதனை,

**“அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்**

**கடிவரை இலபுறத்து என்மனார் புலவர்” (தொல்.அகம்.25)**

என்ற அடிகள் புலப்படுத்தும். தொல்காப்பியர் காலத்தில் அடியோர், வினைவலர் இருந்துள்ளமை இதனால் புலனாகிறது. அடியோர் குறித்து “ஏவல் பணியாளர்”[66] என்றும் வினைவலரை “கூலித் தொழிலாளர்”[67] என்ற பொருளிலும் வழங்குவர்.

**சங்க காலத்தில் விளிம்புநிலை மக்கள்**

சங்க காலத்தில் குறவன், புனவன், அகவன் மகளிர், துணங்கையர், யானைப்பாகர், ஊர்க்காப்பாளர், தேர்ப்பாகன், காலங்கணிப்போர், புலைத்தி, ஆடல் மகளிர், நற்சொல் கூறுவோர், பள்ளியறைக் காவலர், தச்சன், பருத்திப் பெண்டிர், அரிநர், களமர், பாடினி, உழவர், உழத்தியர், பரதவர், பரத்தியர், உமணர், பொருநர், வலைஞர், கள்ளடுமகளிர், பாணர், கோடியர், வயரியர், கொல்லன், கிணறுதோண்டுபவர், மறவர், காரோடன், கழைக்கூத்து ஆடுபவர்கள், கூத்தர், கலிங்கம்பகர்நர், பூவிலைப்பெண்டிர், தொழுவர், அறைநர், நெசவாளர், கண்ணுளர், கொண்டிமகளிர் முதலியோர் விளிம்புநிலையில் வாழ்ந்துள்ளனர். இவர்களின் சடங்குமுறைகளும், பழக்கவழக்கங்களும் ஈண்டு விரித்துரைக்கப்பெறுகின்றன.

**சடங்குகள்**

“சடங்குகள் என்பதற்கு நற்செயல்கள் என்று பொருள் சொல்லலாம். இச்சடங்கு முறையானது, சங்க காலத்திலேயே இருந்தது. அந்தக் காலத்தில் இச்சடங்குகளைக் கருத்துணர்வோடு, பொருளோடு நற்பயன் கருதி அமைத்தனர். நம்முன்னோர்கள் அறிவுப் பூர்வமாகத்தான் எதையும்

மேற்கொண்டு இருந்தனர். இதன் உண்மை நிலையை அறியாமல் தான் நம்மில் சிலர் மூடப்பழக்கம் எனக் கைவிட்டனர்”[68] என்பார் தே.ப.சின்னத்தம்பி. சடங்குகள் சமுதாயத்திற்குச் சமுதாயம் வேறுபட்டுக் காணப்பெறும். சடங்கு ஒன்றாக இருக்கலாம். செய்யும்முறை வேறாக இருத்தல் கூடும். பழக்க வழக்கங்களைப் போலவே சடங்குகளும், பல வகையானவை; இனத்திற்கு இனம் மாறுபட்டு இருப்பவை.

பக்தவத்சலபாரதி அவர்கள் “சடங்கு என்பது நிகழ்த்தப்படுவது அழகியல் வெளிப்பாட்டுடன் ஓர் அதீதப்புலப்பாட்டினை வெளிப்படுத்துவது. இதில் பரஸ்பர உறவுடைய இரண்டு கூறுகள் உண்டு.

1. சடங்கென்பது ஒன்றைச் செய்து இன்னொன்றைப் பெறுவதற்காக நிகழ்த்தப்படுவது. (ritual is a performance of something for some one).
2. ‘சடங்கென்பது ஒன்றைச் செய்து இன்னொன்றை அடைவது’ (Performance of something for some one)”[69]

என்று குறிப்பிடுகிறார். மேலும், “சடங்கானது நடத்தை முறைகளின் வெளிப்பாடு”[70] என்றும், “பெரும்பாலான சடங்குகள் சமூகம் சார்ந்தது. மக்கள் கூட்டாகச் சேர்ந்து நிகழ்த்தப்படுவதாக உள்ளது. சடங்கு நிகழ்வில் பங்கேற்போர் தனிமனிதராக இல்லாமல் கூட்டமாகச் சேருவது என்பதும். அது மரபாக காலங்காலமாக ஒரு விதிமுறையாகப் பின்பற்றப்படுவது என்பதும் ஒரு விபத்து போல ஏற்பட்டதல்ல. நனவு நிலையில் பேணப்படுவதாகும்”[71] என்றும் குறிப்பிடுகின்றார்.

“சடங்கு நிகழ்வென்பது சடங்கு செய்பவருடைய சடங்குப் பங்கேற்பாளர்களுடைய சடங்குப் பார்வையாளர்களுடைய நடத்தை முறைகளின் தொகுப்பாகும். அதே வேளையில் இவர்கள் அனைவரும் சடங்குக் காலத்தில் வெளிப்படுத்தும் நடத்தைமுறைகள். அவர்கள் இயல்பாகச் சமூக வாழ்வில் கொண்டுள்ள உறவை வெளிப்படுத்துவதாகவும் இருக்கும்”[72] என்பது இவரின் கருத்தாகும்.

“இயற்கையின் சீற்றங்களிலிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்ள நினைத்த மனிதன் இப்படிச் செய்தால் இவ்வாறு நடக்கும் என்று எண்ணிக் கற்பித்துக் கொண்ட செயல்முறைகள் சடங்குகளாகத் தோற்றம் கொண்டன”[73] என்று சடங்குகளின் தோற்றத்திற்குக் கூறும் காரணம் பொருந்துவதாக இல்லை. ஏனெனில் இன்று இயற்கையின் சீற்றம் இன்றியே இயல்பான வாழ்க்கையிலே சடங்குகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

“மனித இனத்தை ஒன்றுபடுத்தி மகிழ்ச்சியில் திளைக்க வைப்பதே விழாக்களின் செயற்பாடாகும். அவை சடங்குகளின் அடிப்படையில் தோன்றிச் சமுதாய நம்பிக்கையின் காரணமாகச் செல்வாக்குப்பெற்று வளர்ந்தும் வாழ்ந்தும் மறுமலர்ச்சியடைந்தும் மக்களினங்களிடையே தொன்றுதொட்டு நிலவி வருகின்றன. விழாக்கள் என்பன மக்கள் ஒன்று சேர்ந்து நடத்தும் கூட்டுச் சடங்குகளிலிருந்து தோன்றியனவாகவே காட்சி தருகின்றன. சடங்குகளே விழாக்களுக்கு அடிப்படை. சடங்குகளின் ஒன்றிணைக்கப்பட்ட கூட்டுத் தொகுதியினை விழா எனக் கூறலாம்”[74] என்பார் க.காந்தி.

இறைவன் தொடர்பான விழாக்கள் மாதந்தோறும், ஆண்டுதோறும் நடைபெற்று வருகின்றன. ஒவ்வொரு விழாவிற்கும் வரையறுக்கப்பட்ட விதிமுறைகள் பின்பற்றப்படுகின்றன. இவை வழிபாட்டுமுறைகள் என்று பொருள்படும். பெரும்பாலும் இல்லங்களில் நடைபெறும் விழாக்களில் பின்பற்றப்படும் நடைமுறைக்குச் சடங்கு என்று பெயர்.

**சங்க காலத்தில் சடங்குமுறைகள்**

சங்க காலத்தில் திருமணமானது சடங்குகளில் ஒன்றாகக் கருதப்பட்டது. மணநாளில் இறைச்சியும் நெய்யும் கூடிய உணவானது சுற்றத்தாருக்கு வழங்கப்பட்டது. திங்களும், உரோகிணியும் கூடிய நன்னாளில் மணமக்களை நீராட்டினர். மணப்பெண்ணிற்கு வாகையின் இலையை அறுகின் அரும்போடு சேர்த்துக் கட்டிய காப்பு நூலை அணிவித்தனர். புதிய ஆடைகளையும், அணிகலன்களையும் அணிவித்தனர். மணமுழவு முழங்கத் தலைவியின் பெற்றோர் அவளைத் தலைவனிற்குக் கொடுத்தனர். இதனை விற்றூற்று மூதையினனார்,

> **“மைப்புஅறப் புழுக்கின் நெய்க்கனி வெண்சோறு**
> **வரையா வண்மையொடு புரையோர்ப் பேணி**
> **புள்ளுப் புணர்ந்து இனிய ஆக, தெள்ஒளி**
> **அம்கண் இருவிசும்பு விளங்க, திங்கட்**
> **சகடம் மண்டிய துகள்தீர் கூட்டத்து**
> **கடிநகர் புனைந்து கடவுட் பேணி,**
> **படுமண முழவொடு பரூஉப்பணை இமிழ**
> **வதுவை மண்ணிய மகளிர் விதுப்புற்று**

**பூக்கணும் இமையார் நோக்குபு மறைய**

**மென்பூ வாகை புன்புறக் கவட்டிலை**

**பழங்கன்று கறித்த பயம்புஅமல் அறுகைத்**

**தழங்குகுரல் வானின் தலைப்பெயற்கு ஈன்ற**

**மண்ணுமணி அன்ன மாஇதழ்ப் பாவைத்**

**தண்நறு முகையொடு வெண்நூல் சூட்டி,**

**தூஉடைப் பொலிந்து மேவரத் துவன்றி,**

**மழைபட் டன்ன மணல்மலி பந்தர்**

**இழைஅணி சிறப்பின் பெயர்வியர்ப்பு ஆற்றி**

**தமர் நமக்கு ஈத்த ..........................."** **(அகநா.136:1-19)**

என்ற பாடலடியால் சுட்டுவர்.

**பழக்க வழக்கங்கள் - விளக்கம்**

பழக்கம் என்ற சொல் பழகுதல் அல்லது பயிற்சியாதல் என்ற பொருளில் தமிழில் பண்டுதொட்டுப் பயின்று வந்துள்ளது. பழகு-பழகிய-பழகுதல்-பழக்கம் என்ற சொல்லாட்சிகள் இன்றும் உள்ளன. பழகிப்போன செயல் பழக்கம் ஆகின்றது. பழக்கம் தனி மனிதச் செயற்பாடு. இதனைப் பிறரும் பின்பற்ற வாய்ப்புண்டு.

**பழக்கம்**

பழக்கம், வழக்கம், பழக்க வழக்கம் என்ற சொல்லாட்சிகள் தமிழரிடையே மிகுதியும் காணப்படுகின்றன. தொல்காப்பியத்தில் பழக்கம்

என்ற சொல்லாட்சி இல்லையாயினும், அப்பொருள் தரக்கூடிய பல சொற்கள் காணப்பெறுகின்றன. ‘பழகிய’ (தொ.நூ.682) என்ற சொல்லாட்சி உண்டு.

“பழக்கம் என்பது ஒரு கற்கும் செயலாகும். இது தனிமனிதனிடம் இயல்பாக வந்தமைந்த நடத்தையைக் குறிப்பதாகும். பழக்கம் வளர்ச்சிக்கு இன்றியமையாத கூறாகக் கருதப்படுகிறது”[75] என்று விளக்குகிறார் க.காந்தி.

“நனவுடன் தொடங்கிய செயல் நாளடைவில் நனவன்றியே அதாவது மூளையின் பிரதானப் பகுதிகளின் சம்பந்தமின்றியே நிகழ்வதாக ஆகிவிடுகின்றது. அப்படி நிகழும் செயலே பழக்கம் எனப்படும்”[76] என்று கலைக்களஞ்சியம் கூறுகிறது.

தனி மனிதனிடம் இயல்பாக வந்தமைந்த நடத்தையைப் பழக்கம் எனவும் இனக்குழுவிலுள்ள பலருடைய மனவெழுச்சி உணர்ச்சி ஆகியவற்றுடன் இயைந்து நிற்பது வழக்கம் எனவும் சமூகவியலார் கூறுவர்.”[77] இக்கூற்று ஏற்புடையதாகும்.

“தனிமனிதன் பழகிப்போன முறையில் திரும்பத் திரும்பச் செய்து வரும் ஒரு குறிப்பிட்ட செயலைப் பல மனிதன் ஒன்றாகச் சேர்ந்து செய்கின்ற பொழுது அது வழக்கம் எனப் போற்றப்படுகின்றது”[78] என்பர் க.த.திருநாவுக்கரசு.

“பழக்கம் என்பது தனிமனிதனைச் சார்ந்த தொடக்கநிலை எனவும் வழக்கம் என்பது சமுதாயம் சார்ந்த தொடர்நிலை எனவும் கூறலாம்”[79] என்பர் க.காந்தி.

பழக்கம் சமுதாயத்தின் பிரதிபலிப்பாக அமைவதுடன், மக்களின் பாரம்பரியத்தையும் வெளிப்படுத்துகிறது. எனவேதான், “பழக்கம் சமுதாயத்தை இயங்கச் செய்யும் சக்கரம் என்றும் சமூகப் பாதுகாப்புச் செயல் என்றும், மனிதனின் இரண்டாம் இயல்பு என்றும் சமூகவியல் அறிஞர் கூற்றை எடுத்துக் காட்டுவார் பாஸ்கல் கில்பர்ட்.”[80]

**வழக்கம்**

வழக்கு - வழக்கம் என்றாகி இருத்தல் வேண்டும். பழக்கத்தின் தொடர்ந்த நிலையே வழக்கம் ஆகும். “சமூகத்தில் அதிகமாகப் பின்பற்றப்படும் பழக்கமான நடவடிக்கையே வழக்கம் ஆகும்….. வழக்கங்கள் ஒரு குழுவினுடைய விருப்பங்கள், இலட்சியங்கள், வாழ்க்கைக் கண்ணோட்டங்களில் பிரதிபலிப்பதாகவும் அமைகின்றன”[81] என்பர் க.காந்தி. ஓர் இனக்குழுவிலுள்ள பலருடைய மனவெழுச்சி, உணர்ச்சி, விருப்பு, வெறுப்பு ஆகியவற்றுடன் இணைந்து நிற்பது வழக்கம் என்று கருதப்படுகிறது.

வழக்கம் என்ற சொல்லாட்சி தொல்காப்பியத்தில் இடம் பெற்றுள்ளமை அதன் பழமையைச் சுட்டுவதாகும்.

**“தகுதியும் வழக்கும் தழீஇயின ஒழுகும்**
**பகுதிக் கிளவி வரைநிலை இலவே”** **(தொல்.500)**

**“முந்நீர் வழக்கம் மகடூஉவோடு இல்லை”** **(தொல்.980)**

**“வல்லெழுத்து மிகுனும் மானமில்லை**
**ஒல்வழி யறிதல் வழக்கத்தான”** **(தொல்.246)**

**“அக்கென் சாரியை பெறுதலும் உரித்தே**

**தக்கவழி அறிதல் வழக்கத்தான”** **(தொல்.270)**

**“சொல்வழி அறிதல் வழக்கத்தான”** **(தொல்.312)**

**“சேய்மையின் இசைக்கும் வழக்கத்தான”** **(தொல்.637)**

**“நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்”** **(தொல்.999)**

**“வழக்காறல்ல செய்யுளாறே”** **(தொல்.501)**

என்ற அடிகள் அதற்குச் சான்றாக அமையும். மக்களிடையே தொன்றுதொட்டு வழங்கிவருவது வழக்கமாகும். வழக்கு என்பது பண்டை காலத்தில் நன்னெறி என்ற பொருளில் வழங்கியது. அதனையே வள்ளுவர்,

**“அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்**

**கொன்போ டியைந்த தொடர்பு”** **(குறள்.73)**

என்பர்.

**“எண்பதத்தா லெய்த லெளிதென்ப யார்மாட்டும்**

**பண்புடைமை என்னும் வழக்கு”** **(குறள்.991)**

என மேலும் புலப்படுத்துவர்.

**சங்க காலத்தில் பழக்க வழக்கங்கள்**

சங்க காலத்தில் ஒரு செயலினைச் செய்ய விரும்பும் போது நற்சொல் கேட்கும் பழக்கம் இருந்தது. அதை விரிச்சி கேட்டல் என்று கூறுவர். முல்லைப்பாட்டுத்தலைவன் பிரிந்து சென்றபோது மாலைக்காலத்தில் நெல்லையும், முல்லை மலரையும் தூவி நற்சொல் கேட்கின்ற பழக்கம் இருந்துள்ளது. இதனை நப்பூதனார்,

**“யாழிசை இனவண்டு ஆர்ப்ப நெல்லொடு**

**நாழி கொண்ட நறுவீ முல்லை**

**அரும்பவிழ் அலரி தூஉய்க் கைதொழுது**

**பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்ப”** **(முல்லைப்.8-11)**

என்ற பாடலடியால் சுட்டுவர். வாடைக்காலத்தில் மகளிர் சந்தனம் பூசுவதில்லை. மலர்கள் புனைவதில்லை. நெருப்பை வளர்த்து அகிலும், வெள்ளயிரையும் சூட்டிற்காகப் புகைத்துக் கொண்டனர். இதனை நக்கீரர்,

**“கடியுடை வியல்நகர் சிறுகுறுந் தொழுவர்**

**கொள்ஊழ் நறுங்கல் பல்கூட்டு மறுக**

**வடவர் தந்த வான்கேழ் வட்டம்**

**தென்புல மருங்கில் சாந்தொடு துறப்பக்**

**கூந்தல் மகளிர் கோதை புனையார்**

**பல்இருங் கூந்தல் சில்மலர் பெய்ம்மார்**

**தண்ணறுந் தகரமுளரி நெருப்பமைத்து**

**இருங்காழ் அகிலொடு வெள்ளையிர் புகைப்ப”** **(நெடுநல்.49-56)**

என்ற பாடலடியால் விளக்குவர். குழந்தை பெற்ற பெண் மான்தோளில் படுக்கும் பழக்கம் இருந்தது. இதனை கடிலூர் உருத்திரங்கண்ணனார்,

**“ஈத்து இலை வேய்ந்த எய்ப்புறக் குரம்பை**

**மான்தோல் பள்ளி மகவொடு முடங்கி”** **(பெரும்பாண்.88-89)**

என்ற பாடலடியால் சுட்டுவர்.

**விளிம்புநிலை**

சமூகத்தில் விளிம்பு நிலையினர் என்போர் தனித்த பிரிவினராவர். இவர்கள் ஒன்று அல்லது ஒன்றுக்கும் மேற்பட்ட குழுவின் பேராளர்களாக இருப்பர். பண்பாட்டு நிலையில் தனித்தன்மையுடன் விளங்குவர். ''சமூகத்தில் மேல்நோக்கி நகரும் அடித்தளத்தோர்''[82] (parvenus) என விளிம்புநிலை மக்கள் பற்றி டர்னர் வரையறை செய்கிறார். மேலும் விளிம்புநிலையினர், ''எப்பொழுதும் விழிப்புடனும், தன் முனைப்புடனும், தற்பெருமையுடனும் செயல்படுவர். சிறுபான்மை எண்ணிக்கை முற்றிலும், எதிர்மாறாக மிகுந்த எண்ணிக்கையில் எழுத்தாளர்களை கலைஞர்களை தத்துவவாதிகளை உற்பத்தி செய்வர்''[83] என்ற கருத்தினையும் வரையறுக்கிறார். ''கலை எழுத்து, தத்துவம் போன்ற பல துறைகளில் தொடர்ந்து திசை திருப்பும் போக்காகவும் இருக்கும்''[84] எனவும் குறிப்பிடுகிறார். விளிம்பு நிலையினர் தங்களது புத்தாக்கத்தின் மூலம், கலை, எழுத்து, தத்துவம் உள்ளிட்ட அனைத்து நிலையிலும், தொடர்ந்து பெரும்பான்மையினருடன் உள்ளார்ந்த நிலையில் உரசிக் கொண்டே சமூகத்தில் மாற்றத்திற்கு வழிகோலுவர்''[85] என விளிம்புநிலை மக்களைப் பற்றி டர்னர் வரையறுக்கிறார்.

விளிம்பு நிலை என்பதற்குத் "துன்பத்தின் கடைசிநிலை"[86] எனக் கிரியாவின் தமிழ் அகராதி விளக்கம் தருகிறது. விளிம்பு என்பதற்கு "வடிம்பு, ஓரம், கரை (Margin), கண்ணிமை (Eyelid), எயிறு (Gyms)"[87] என்ற பொருள்களைத் தமிழ்சொற் பேரகராதி விளக்கம் தருகிறது.

“சமுதாயத்தின் ஓரத்திற்குத் தள்ளப்பட்டோரே விளிம்புநிலை மாந்தர் எனப்படுகின்றனர். விளிம்புநிலை என்பது ஒரு சமுதாயத்தின் குறைபாடாகக் கொள்ளத்தக்கது. சோசியல் எக்ஸ்குளுசன் (Social exclusion) என்ற சொல்லில் இது மேலைநாட்டில் குறிக்கப்படுகிறது. பிரான்ஸ் நாட்டில் முதன்முதலாக எழுந்த விளிம்புநிலை மக்கள் பற்றிய சிந்தனை ஐரோப்பாவில் பெருத்த நிலையில் பயன்பாட்டிற்கு வந்தது. இது கல்வி, சமுதாயவியல், உளவியல், அரசியல், பொருளியல் ஆகிய துறைகளில் கவனிக்கத்தக்கதாக விளங்குகின்றது.”[88]

“ஒரு தனிமனிதரோ, அல்லது மனிதக் குழுவோ அடிப்படையான உயிரியல் தகுதிகளை, வாழ்வுரிமைகளை அடையப்பெற அனுபவிக்கத் தடை செய்யும் முறையாக சமுதாய விலக்கல் கொள்ளப்படுகிறது. இதையே விளிம்புநிலை எனலாம். வீட்டுரிமை, வேலைவாய்ப்பு உரிமை, உடல்நல உரிமை, குடியுரிமை, மக்களாட்சியில் பங்கெடுத்தல், இன்னும் பிறவற்றில் உரிமைகள் பறிக்கப்படும், பறிபோகும் நிலையே சமுதாய விலக்கல் அல்லது விளிம்புநிலை எனப்படுகிறது. ஒரு மனிதனின் பிறந்த குலம், சாதி, கல்வி, குழந்தைப் பருவ உறவுமுறை, வாழ்க்கைத் தரம், தன்னலங்காரம் செய்து கொள்வதில் தனக்குள்ள தனித்தன்மை போன்றவற்றால் சமுதாய விலக்கல் நடைபெறலாம். மேலும் உறுப்புக்குறைபாடு, சிறுபான்மை இனம், போதை மருந்து பயன்படுத்துபவர்கள், மூத்தவர்கள் மிக இளையவர்கள் போன்றோரும் விளிம்புநிலை சார்ந்தோர் ஆவர்.”[89]

“வாழ்கின்ற நாள்களில், வாழ்கின்ற சூழலில் விளிம்புநிலை மக்கள் தனக்கான பொருளாதார சமுதாய அரசியல் சார்ந்த வாழ்வுரிமையை விட்டுக் கொடுக்க வேண்டிய, இழக்க வேண்டிய நிலைக்குத் தள்ளப்படுகின்றனர் என்ற வரையறைகள் விளிம்புநிலை மக்கள் என்பவர்களைப் பற்றி அறிந்து கொள்ள உதவுகின்றன.”[90]

**சமுதாய விலக்கல்**

“சமுதாய விலக்கல் என்பது அனைத்துத் தரப்பினருக்கும் கிடைக்கப்பெற வேண்டிய கல்வி, சுகாதாரம், இருப்பிடம், சமுதாய மதிப்பு ஆகியவற்றில் ஏற்படும் தடைகள் அல்லது குறிப்பிட்ட ஒருவருக்கு அல்லது குறிப்பிட்ட குழுவுக்குக் கிடைக்காமல் இருப்பது என்பதை முன்வைப்பதாகும். குறிப்பிட்ட இனத்தை, குறிப்பிட்ட குழுவை விலக்கும் சமுதாய விலக்கலுக்குப் பரந்துபட்ட காரணங்கள் பல இருக்கம். இனச்சிறுபான்மையினர், மாற்றுத்திறனாளிகள், முதியவர்கள், குற்றவாளிகளாக ஆனவர்கள், அகதிகள் போன்ற பலரை உள்ளடக்கியது. இந்தச் சமுதாய விலக்கல் என்ற முறை. இந்த விலக்கல் என்பது பலதரப்பட்ட வழிகளில் பலதரப்பட்ட காரணங்களுக்காக சமுதாயத்தில் அவ்வப்போது நிகழ்ந்து வருகின்றது”[91] என்று சமுதாய விலக்கலுக்கு வரையறை தரப்படுகின்றது.

“சங்ககாலச் சமுதாயமும், ஒரு கூட்டமைப்புச் சமுதாயத்தில் பல்வேறுபட்ட ஏற்ற இறக்கங்கள் அமைந்திருக்கின்றன. சமுதாய நிலையில், வருண அடிப்படையில், பொருளாதார அடிப்படையில் செய்யும் தொழில் அடிப்படையில் பல ஏற்ற இறக்கங்கள் இருந்துள்ளன. சங்ககாலச்

சமுதாயத்தில் இவ்வேற்ற இறக்கங்கள் இருந்தது என்பதும் அவை பாடல்களாக பதிய வைக்கப்பெற்றுள்ளன என்பதும் சங்க இலக்கியங்களின் உண்மைத்தன்மையை, அவற்றைப் படைத்த புலவர்களின் நேர்மையை உணர்த்துவனவாக உள்ளன."[92]

"பொருளாதாரத்தில் பின்தங்கியும் கல்வியில் விழிப்புணர்வு இன்றியும், தகுந்த வழி காட்டுதல் இன்மையாலும் மேற்தட்டு மக்களால் புறக்கணிக்கப்பட்டவருமே விளிம்புநிலையில் உள்ளவர்களாகவும் கருதப்படுகிறது."[93]

**அடித்தள மக்கள்**

"சமீபகாலங்களில் மேற்கொள்ளப்பட்டுவரும் அடுத்த வகையான சமூகவியல் ஆய்வு அடித்தளமக்கள் வரலாறு மற்றும் ஆய்வு வளர்நிலைக்கு அடித்தளமாக 1991-ஆம் ஆண்டு "நாவாவின் ஆராய்ச்சி" என்னும் ஆய்விதழில் வெளிவந்த பேராசிரியர் பி.எஸ்.சந்திரபாபுவின் 'அடித்தள மக்கள் வரலாறு-ஒரு மதிப்பீடு' என்னும் அறிமுகக் கட்டுரையே முதன்மையானதாகக் கொள்ள வாய்ப்புண்டு. அடித்தள மக்கள் வரலாறு தெற்காசிய நாடுகளின் வரலாறு சமுதாயம் பற்றிய 44 கட்டுரைகள் அடங்கிய ஆறு தொகுதிகளையுடைய இந்நூல் 'தெற்காசிய நாடுகள்' என்னும் தலைப்பில் வெளிவந்தது. இதன் பதிப்பாசிரியர், பேராசிரியரும் மார்க்சீயச் சிந்தனையாளருமான இரணஜித் குஹா ஆவார். இந்நூலில் 1982 ஆம் ஆண்டு முதல் 1989 ஆம் ஆண்டு வரை நடந்த ஆய்வுகளின் தொகுப்புகளே இடம்பெற்றிருந்தன. இதில் மேலை மற்றும் இந்தியாவின் வரலாற்றறிஞர்கள், மார்க்சீய அறிஞர்கள் தம்

பங்கிளிப்புக்களைப் பாகுபாடின்றி செய்திருந்தனர். இதில் பல முரண்பாடுகளும் இருந்தவையாக எடுத்துரைத்து இறுதியில் சில கருத்தாங்களின்வழி அடித்தள மக்கள் யார்? என்ற வரைமுறை செய்கின்றனர். அதனடிப்படையில் இரணஜித் குஹா இந்த அடித்தள மக்கள் ஏழையாக இருக்கலாம், தாழ்ந்த சாதியைச் சேர்ந்தவராகவும் இருக்கலாம். வயது, பால் வித்தியாசத்தில் எழும் பிரச்சினைகளைச் சுமந்தவராகவும் இருக்கலாம் என்றும் மரபு வழி உறவுகள், இருப்பிடம், வர்க்க அமைப்பு இவைகளைச் சார்ந்தே அடித்தள மக்களின் விழிப்புணர்வு பாதிக்கப்பட்டு வெளிப்படும் என்பார். மேலும் அவர் ‘‘இந்த அடித்தள மக்களின் எதிர்ப்பு வன்முறை உடையது. இயல்பானது. மேல்தள மக்களின் ஆதிக்கத்தை எதிர்ப்பதே இதன் இன்றியமையாத ஒரு குணாதியம்சம் ஆகும் என்றும் எந்தச் சமுதாயத்தில் சுரண்டல் அதிகமாக உள்ளதோ அங்கு அடித்தள மக்கள் அல்லது சுரண்டப்படுகின்ற மக்கள் கிளர்ந்தெழுவர்’’ என்றும் குறிப்பிடுகிறார். அடித்தள மக்கள் வரலாறு தொடர்பான இந்நூலின் ஆக்கத்திற்கான காரணத்தை மற்றொரு இடத்தில் இந்திய தேசிய இயக்க வரலாற்று வரைவியல் நெடுங்காலமாக மேல்தள மக்களால் குறிப்பாக காலனியாதிக்கவாதிகளின் - மேல்தள மக்களின் ஆதிக்கத்தின் கீழ் உள்ளது. மற்றும் இந்தியத் தலைவர்களின் ஆன்மீக வாழ்க்கை வரலாறாகவே உள்ளது. இது வரலாற்று உண்மைக்குப் புறம்பான வரைவியல் வரலாறு. அடித்தள மக்களின் அரசியல் உணர்வை அறவே புறக்கணித்து விட்டது. இவற்றை மாற்ற வேண்டும் என்றும் பதிவு செய்துள்ளதாகக் குறிப்பிடுகிறார். இதன்மூலம் அடித்தள மக்கள் என்போர் ‘‘எண்ணிக்கையில் அதிகமானவர்களாகவும், சமுதாயத்தின் வளங்களில் உரிய

பங்கு பெற முடியாதவர்களாகவும், குறைந்த அளவு உணவு, குறைந்த அளவு உடை, குறைந்த கல்வி பெற்று வாழும் மக்கள் இந்திய தமிழ்ச் சூழலில் அடித்தள மக்கள் என்பதற்கு சாதி, செய்யும் தொழில், அரசியல் ஆதிக்கம், பாலியல் நிலை, பொருளாதார நிலை ஆகியவற்றில் ஏதேனும் ஒன்றில் அல்லது அனைத்து நிலையிலும் தாழ்ந்திருக்கும் மக்கள்" எனப்பொருள் கொள்ளலாம். இறுதியாக அடித்தள மக்கள் என்போர் சமூகப்படிநிலையில் (Social Hierarchy) இடமிருந்தாலும் ஒப்பீட்டளவில் கீழானவர்கள். தற்காலத்தில் சான்றாகத் தலித்துக்களைக் கூறலாம். சாதிய சமூகத்தில் இவர்கள் தங்களை உயர்நிலைக்குக் கொண்டுவர இயக்கமாக தமது புராணங்களைக் கூறி மேலே வர முயல்கின்றனர். இவர்களுக்கு சமூக மாற்றத்திற்கு (Social Mobility) வழி உண்டு. சான்றாக கடந்த காலங்களில் அடிமையாக இருந்தோர் தற்பொழுது கல்வியறிவுப் பெற்று பல உயர்நிலைகளில் உள்ளனர்.[94]

**'விளிம்புநிலை' குறித்த மேலைநாட்டார் ஆய்வு**

"விளிம்பு நிலையினர் பற்றிய ஆய்வு மேற்குல நாடுகளில் 1950-களில் தொடங்கியது. இவ்வாய்வினைத் தொடங்கி வைத்தவர் அமெரிக்காவைச் சார்ந்த ஆஸ்கார் லீவிஜ் என்பவராவார். முதலாளித்துவ நாடுகளில் கீழ்நிலையில் உள்ளவர்கள் தங்கள் இருப்பைத் தகவமைத்துக் கொள்ளும் முறையினை 'வறுமை நிலைப் பண்பாடு' என்னும் சொற்றொடர் குறிக்கின்றது. இந்தக் கருத்தாக்கத்தினையே ஆஸ்கார் லீவிஸ் தன்னுடைய களப்பணி மற்றும் ஒப்பீட்டாய்வு மூலமாகத் தொடங்கினார். களப்பணியை

மெக்ஸிகோ, இந்தியா, ப்யூர்டேரிகோ மற்றும் நியூயார்க் போன்ற இடங்களில் ஆய்வு நடத்தி அவ்வவ் இடங்களிலுள்ள பெரிய சமுதாயத்தினரிடையே இருந்து வரும் விழுமியங்கள் குறிக்கோள்களைத் தங்களால் வென்றெடுக்க முடியாமைக்குக் காரணம் பெருஞ் சமுதாயத்துடன் உண்டான முரண்பாடுகளால் வெற்றியடையாமல் போனதோடு மட்டுமல்லாமல் தொடரும் தாழ்வு நிலையுடன் இருப்போரின் வாழ்வு வெளிப்படுத்தப்படுகின்றது என்பதைக் கண்டறிந்தார். இவரது ஆய்வின் முடிவாக விளிம்பு நிலையினர் எனப்படுவோர்.

1. சாதிய சமூக அமைப்பில் அவர்களுக்கென அங்கீகரிக்கப்பட்ட எந்த இடமும் கிடையாது.

2. பிற சாதிய அமைப்புகளைப் போலல்லாமல் ஒட்டு மொத்த சமூகத்தையே நிராகரிப்பவர்கள்.

3. கல்வி வளர்ச்சி, பணிநிலை போன்ற சமூக நிலை மாற்றத்திற்கு (Social Mobility) விளிம்பு நிலையினருக்கான வாய்ப்பு அரிதாகும்.

4. விளிம்பு நிலை மனிதக் குழுவான பழங்குடியினரிடையே எவ்வித ஏற்றத்தாழ்வும் இருக்காது.

5. அமைப்பு வழியாக இயங்க எவ்வித முகாந்திரமும் இல்லாதவர்கள். சான்றாகப் பழங்குடிகள், நாடோடிகள் (Nomads) மூன்றாம் பாலினத்தார். (பெரிய அளவிலான இயக்கங்கள் இவர்களுக்கு நீண்ட காலமாக கிடையாது) என அமைகின்றன."[95]

"விளிம்பு நிலையினர் என்போர் ஒட்டு மொத்த சமூகத்தின் ஒருங்கிணையாமலிருப்பது என்பது இதிலிருந்து புலனாகும். இவர்கள்

சமூகத்தின் பொது ஓட்டத்திற்கு (main stream) அப்பாற்பட்டவர்களாக உள்ளனர். இன்றைய சூழலில் சிறுபான்மை இனக்குழுக்கள், பழங்குடிகள், நாடோடிகள், மூன்றாம் பாலினத்தார், அகதிகள், பெரு நகரத்துச் சேரிவாசிகள் போன்றோரை விளிம்பு நிலையினர் எனக் கூறலாம். சென்னை, பம்பாய் போன்ற பெருநகரங்களில் உள்ள சேரிகள் பல குடிசைப் பகுதிகளை உள்ளடக்கியவை. தமிழ்நாடு, ஆந்திரா, கர்நாடக கிராமங்களிலிருந்து பொருளாதார நிலையில் மிகவும் பின் தங்கிய பல சாதியினர் வெள்ளம் வறட்சி போன்ற இயற்கைப் பேரழிவுகளால் குடிபெயர்ந்து வாழ்கின்றனர். மாநகர வாழ்வியற் சூழலில் தம் சாதி சமய அடையாளங்களைத் தொலைத்தவர்கள். கூலிவேலை, வீட்டுவேலை, கழிவுகளைச் சுத்தப்படுத்துதல் போன்றவற்றைச் செய்து வாழ்வோர், இவர்களது வீட்டு இறப்புச் சடங்குகளில் நிகழ்த்தப்படும் 'கானாப்பாட்டு' நிகழ்ச்சி இவர்களது பண்பாட்டு விழுமியங்களையும், உலக நோக்கினையும் புலப்படுத்துவதாக அமையும். ஒருவர் இறந்த வீட்டின் 14 ஆம் நாள் நள்ளிரவு தொடங்கி அதிகாலைவரை கானாப்பாட்டுப் பாடும் பாடகர்களால் பாடப்படும் நிகழ்ச்சி நடைபெறும். அப்பொழுது அனைவரும் மது மயக்கத்திலிருப்பதாகக் கூறப்படுகிறது. இவர்கள் பாடும் கானாப்பாட்டு திரைப்படங்களில் இடம்பெறுவது போலில்லாமல் மரபு ரீதியான கானாப்பாடல்களை ஒத்திருக்கும். இத்தகைய கானாப்பாடல்கள் இறந்தவரின் வாழ்க்கை வரலாற்றோடு, யாக்கை நிலையாமை, இறப்பின் சிறப்பு, சிறைச்சாலையின் மேன்மை, நகரச்சமாதிகள், சுடுகாடுகளின் வனப்பு, ஆங்கிலக்கல்வி, கல்லூரியின் போலிமை, சாராயம்,

கள் ஏனைய மதுவகைகளின் அற்புதம், காதலின் பொய்மை, தொலைக்காட்சி, திரைப்படம் ஆகிய ஊடகங்களின் பயனின்மை என கானாப்பாடல்களின் கருப்பொருட்கள் அமைகின்றன'' என்றும் இத்தகைய வெளிப்பாட்டு உணர்வு என்பது பல ஆதிக்க பண்பாட்டுக் கூறுகளுக்கான எதிர்ப்பண்படாகும் (Counter Culture) என்பார் ஆ.செல்லப்பெருமாள். மேலும் அவர் இப்போக்கு, அமெரிக்க மானிடவியலறிஞர் ஆஸ்கார் லீவிஸ் முன் வைக்கும் 'வறுமை நிலைப் பண்பாடு'(Culture of Poverty) என்னும் கருத்துடன் ஒத்துப் போவதாகவும் கூறுவார்."[96]

**மூன்றாம் பாலினத்தார்**

"விளிம்பு நிலையினரில் 'அலிகள்' என்றழைக்கப்படும் மூன்றாம் பாலினத்தார் ஆண், பெண் என்ற இரட்டைத் தன்மையுடன் பாலியல் ரீதியில் எந்த ஓர் இடத்தையும் பெற்றுத்தராமல் இருப்பதுடன் சமூகத்தின் அவமானம், கேலி, ஒதுக்குதல் என்ற எல்லாவிதப் புறக்கணிப்புகளுக்கும் ஆட்பட்டு விளிம்பு நிலையினராக ஒதுக்கப்பட்டுள்ளனர். இவர்கள் தங்களுக்கென எடுத்துக் கொண்ட அடையாளமாக மகாபாராதக் கதையில் இடம்பெறும் அரவான் வழிபாட்டையும், புராணத்தையும் கூறலாம். அறுபத்து நான்கு அங்க லட்சணங்களையும், பொருந்திய அரவான் பாண்டவர் வெற்றிக்காகக் களப்பலியாக இடப்படுவதற்கு முன் கிருஷ்ணனிடம், தான் சாவதற்கு முன் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்ற தனது விருப்பத்தை தெரிவிக்கின்றான். மறுநாள் சாகப்போகிறவனுக்கு முதல்நாள் பெண் தர எவரும் உடன்படாத நிலையில், கிருஷ்ணன் தானே ஒரு பெண்ணாக

உருமாறி அரவானைத் திருமணம் செய்துகொண்டு, இரவு அரவான் இறந்தவுடன் காலையில் விதவையாகி பெண்ணுரு நீங்கித் தன்னுரு கொண்டான் எனப் புராணக்கதை கூறுகிறது.

இன்றைய காலகட்டத்தில் இந்தியாவின் எல்லாப்பகுதிகளிலும், உள்ள மூன்றாம் பாலினத்தவர் எனப்படும் அரவாணிகள், ஏழை, பணக்காரன் மொழி மற்றும் சாதி மத வேறுபாடுகளைக் கடந்து ஆண்டுக்கொருமுறை தமிழகத்திலுள்ள கூவாகம் என்ற இடத்தில் ஒன்றுகூடி, பலியிடப்பட்ட அரவானைத் தங்களது கணவனாக நினைத்து முதல் நாள் இரவு கோவிலில் பூசாரியின் கையால் தாலியை வாங்கிக் கட்டிக் கொண்டு மறுநாள் காலையில் தாலியை அறுத்து விதவைக் கோலம் கொண்டு, காலமெல்லாம் கன்னியாக, தமது அலித்தன்மை வெளியே தெரியாதபடி ரகசிய வாழ்வு எனப் பல அடையாளங்கள் மனதில் சுமந்து கொண்டிருக்கும் தனி சமூகத் திரளாவர்."[97]

**நரிக்குறவர்**

"கடந்த பல ஆண்டுகளாக முழு நாடோடிகளாக வாழ்ந்து தற்போது அரை நாடோடிகளாக வாழ்ந்து கொண்டிருக்கும் நரிக்குறவர்களை மற்றொரு விளிம்பு நிலையினராக அடையாளப்படுத்தலாம். இவர்களது புராணம், ஒரு பெரிய கடல் இருந்தது. இதன் ஒரு பகுதியில் ஐயர் எழும்பு, பிள்ளையார் எழும்பு, தேவர் எழும்பு, கோனார் எழும்பு, பள்ளர் எழும்பு எல்லாம் கிடந்தன. அவற்றிற்கு உயிர்கொடுக்கக் கடவுள் கரைக்குவந்து உயிர்கொடுத்துச் சந்ததிகளை உருவாக்குகிறார். நரிக்குறவர்களின் எலும்பை கடவுள் எடுத்து

வரும்பொழுது ஒரு கருங்குருவி அதைக் கடலில் தள்ளிவிடுகிறது. ஒருவாராக அவர்கள் மனித உருவமும், உயிரும் பெற்றுக்கடலில் இருந்து தப்பி காட்டிற்குள் வந்து வாழ்கின்றனர். இதனாலேயே குருவி போன்ற பறவைகளை வேட்டையாடுகின்றனர்."[98]

"இக்குல புராணத்தில் கவனிக்க வேண்டிய செய்தி என்னவென்றால் பல சாதிகளைச் சேர்ந்தவர்கள் தங்களுக்கான புராணக் கதைகளில் பிராமணர்களைத் தங்களது சகோதரர்கள் எனக் குறிக்கும் விதத்தில் கதை அமைந்திருக்கும். ஆனால் நரிக்குறவர்களின் கதையில் கருங்குருவி எலும்பைத் தள்ளிவிடுவதன் மூலம் இவர்கள் ஒட்டுமொத்த சாதி அமைப்பினுள் வராதநிலையில் உள்ளதை உணரலாம். எனவே தற்பொழுதும் அரசாங்கம் கூட இவர்கள் தூய்மை, தீட்டு போன்ற கருத்தியல்களுக்குள் சிக்கிக் கொள்ளாத தீண்டாமை அனுபவிக்காத சாதியினரைச் சார்ந்து வாழாத நிலையில் பட்டியல் சாதிகளுக்குள் அடங்காமல் மிகவும் பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் இணைத்துள்ளது. இவர்களது சாதிக்கென பல அதீத சுதந்திரம் வியப்புக்குரியது. இரவு எந்த நேரமானாலும் தாம் வசிக்கும் இடத்திற்கு வந்து சேர்ந்துவிட வேண்டும். பெண்களை வெளிச் சமூகத்தினர் பாலியல் வன்முறைக்குள்ளாக்குவதோ, கள்ளத்தொடர்போ அல்லது முறையான திருமண உறவோ கொள்ளுவது இயலாத காரியம் (ஒன்றிரண்டு விதிவிலக்காக இருக்கலாம்). நாடோடிகளான நரிக்குறவர்களுக்கு அரசாங்கம் வீடுகள் கட்டிக்கொடுத்து, பால்மாடுகள் கொடுத்த போது நீரோட்டத்திற்குள் கலந்து கொள்ள முயற்சி செய்தாலும் அவர்கள் தமது விளிம்புநிலைத் தன்மையிலேயே உள்ளனர்."[99]

**புலம்பெயர்ந்தோர் அகதிகள்**

"ஒருநாட்டில் இடம்பெறும் உள்நாட்டுக்கலவரங்கள், போர்களினால் ஏற்படும் இடப்பெயர்வினால் பன்னெடுங்காலமாகப்பேணி வந்த பண்பாட்டு அடையாளங்களை நொடிப்பொழுதில் முழுவதும் இழந்து புதிய சூழலில் விளிம்பு நிலைக்குள்ளாக்கப்பட்டவர்கள். எவ்வாறெனில், புலம்பெயர்ந்த வேற்று மண்ணில் எதிர்கொள்ளும் பிரச்சினை, தாங்கள் குடியமர்த்தப்பட்ட பகுதிகளில் ஏற்கனவே வசித்து வரும் மக்களோடு இணக்கமான வாழ்வை மேற்கொள்ள முடியாமல் தவிர்ப்பது. குடியேற்ற நாட்டு மக்கள் புலம்பெயர்ந்தோரைத் தமது பொருளாதாரத்தைப் பங்குபோட வந்தவர்கள் என்ற எதிர்நிலையோடு சந்திப்பதால் சண்டைகளும், சச்சரவுகளும் உண்டாவது. சான்றாக ஈழத்தமிழர்களையும், பாலஸ்தீனர்களையும் கூறலாம். இவர்களது இலக்கியங்களின் மூலம் விளிம்பு நிலையை உணரலாம்."[100]

**பழங்குடிகள்**

"நெடுங்காலமாக தனித்த சூழலில் சிறுசிறு எண்ணிக்கையில் பழங்குடியினர் வாழ்கிறார்கள். ஆயிரக்கணக்கில் வாழ்ந்தாலும் அவர்களிடம் பண்பாட்டுப் பொதுமைக் கூறுகள் ஏதும் பெரும்மாலும் இருக்க வாய்ப்பில்லை. அனைத்துப் பழங்குடிகளும் ஒன்றாக இணையக்கூடிய பெரிய இயக்கங்கள் என்று ஏதுமில்லை. பிற சமூகத்தார், அரசு மற்றும் வனத்துறை ஏற்படுத்திக் கொள்ளும் தொடர்புகளும் அவர்களும் அவர்களை இன்னும் புறந்தள்ளி விளிம்பு நிலைக்கே கொண்டு செல்கிறது."[101]

மேற்கண்ட கருத்துக்களின் அடிப்படையில் விளிம்புநிலையினர் யார் என்ற கருத்தாக்கத்திற்கு வரமுடியும். தற்கால மானிடவியல் ஆய்வுக் கோட்பாடுகளில் ஒன்றான விளிம்பு நிலையினரின் வாழ்வியல் எவ்வாறு செவ்விலக்கியங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது என்கிற நிலையில் 'விளிம்பு நிலையினர்' என்ற சொல்லாடலுக்குள் சங்ககாலச் சாதிய அமைப்பிலிருந்து எவரையெல்லாம் சேர்ப்பது என்பதும் சிந்தனைக்குரியது.

**சங்க காலத்தில் விளிம்பு நிலை மக்கள்**

சங்க காலத்தில் விளிம்புநிலையில் இருந்த மக்கள் வறுமையோடு போராடியவர்களாவர். பாணர், கொண்டி மகளிர், கைம்மைப்பெண்டிர், புலைத்தி போன்றவர்களும், கல்வி மறுக்கப்பட்ட உழவர்கள், பறையடிக்கும் பறையர்கள், தோல் வேலையும் சுடுகாடு காத்தலும் செய்யும் இழிசினர்கள், கொடிய வறுமையில் வாடிய எயினர், எயிற்றியர், அடிமைகள், ஏவிய வேலைகளைச் செய்யும் ஏவலர்கள் என்று சங்க இலக்கியம் இவர்களைப் பலவாறு வகைப்படுத்தப்படுகிறது.

இவைபோல, 'துடியெறியும் புலைய எறிகோல் கொல்லும் இழிசின' (புறம்.287) எனத் தொடர்ந்து கைவினை மக்கள், உழவர், நெல் அரிபவர்கள், கடையர், கடைச்சியர், உழத்தியர், புனவன், கள்அடுமகளிர் எனப் பலர் நிலமற்றவர்களாக, கல்வியற்றவர்களாக, வறுமையுடையவர்களாக, விளிம்பு நிலை மக்களாக வகைப்படுத்தப்படுகின்றனர்.

விளிம்பு நிலை என்பது தரப்படுத்துதல் அல்லது ஒதுக்குதல், ஒடுக்கப்படுத்தல் என்று சுரண்டப்படும் மக்கள் தொகுதியைக் கூற பயன்படுத்தப்படும் பொதுச்சொற்களாக அமைகின்றன.

சமூகத்தில் அடித்தட்டு மக்கள் மீது சமூகம் பார்த்த பார்வை வேறு, ஆனால் அடித்தட்டு மக்கள் சமூகத்தைப் பார்த்த விதம் வேறு. சமூகம் அவர்களைக் கூலிகளாக, அடிமைகளாக, தன் மனப்போக்கின் கூறுகளாக நினைத்தனர். ஆனால் விளிம்புநிலை மக்கள் சமூகம் வளர வேண்டும். அதற்காகத் தன்னையும் இழக்கலாம் என்ற நிலையில் உடல் உழைப்பை மட்டும் மூலதனமாகக் கொண்ட இனக்குழுக்களாக, தொல்குடிமக்களாக வாழ்ந்தனர்.

**தொகுப்புரை**

- ❖ தமிழர்கள் தாங்கள் வாழ்ந்த நிலத்திற்கேற்ப வாழ்க்கை முறையையும், பண்பாட்டையும் அமைத்துக் கொண்டனர்.
- ❖ ஆடு, மாடு மேய்த்தலைத் தொழிலாகக் கொண்ட கோவலர்கள் பாலைக் கொடுத்துப் பாற்சோற்றைப் பெற்றுச் சென்றனர்.
- ❖ இடையர் அறம் புரியும் நெஞ்சை உடையவர்.
- ❖ ஆயர் காலை நேரத்தில் மோர் விற்றுள்ளனர், ஆயர்கள் விருந்தினர்க்கு தினை அரிசியால் ஆக்கிய சோற்றைப் பாலுடன் கொடுத்துள்ளனர்.
- ❖ ஆயர்கள் ஆடு மாடுகளை ஓட்டிக் கொண்டு செல்லும்போது பல மலர்களைச் சூடிக்கொள்வர்.

❖ குறவர்தம் உழைப்பின் பயனாக முதிர்ந்த தினையைக் காவல் செய்வர்.

❖ குறவர்கள் உயர்ந்த பரணிலே ஏறி யானைகள் மீது கவனுமிழ் கற்களை வீசுவர்.

❖ நீர்நிலைகளில் நீரை ஒழுங்குபடுத்துவதற்குக் காவலர்கள் இருந்துள்ளனர்.

❖ உழவர்கள் தங்கள் இல்லத்திற்கு வரும் விருந்தினர்க்கு வெண்ணெல் அரிசிச் சோறும், மனைவாழ்கோழி இறைச்சியும் கொடுத்துள்ளனர்.

❖ பரதவர்கள் உப்பு விளைத்தலையும், மீன்பிடித்தலையும் தொழிலாகக் கொண்டிருந்தனர்.

❖ பரதவரின் குடியிருப்புகள் பாக்கம் என்றும், பட்டினம் என்றும் அழைக்கப்பட்டன.

❖ கடற்கரையோரத்திலிருந்த குடியிருப்புகளைப் பாக்கமெனவும், ஊரிடை உள்ள குடியிருப்புகளை பட்டினம் என்றும் கூறியுள்ளனர்.

❖ கடற்கரைப் பகுதியில் வாழ்ந்த மக்கள், நுழையர், பரதவர், வலைஞர், நுழைமகள் என்று அழைக்கப்பட்டனர்.

❖ வளைந்த திமிலைக் கொண்டு கடலில் செல்லும் பரதவர் நெடிய மாடங்களில் விடியற்காலத்தும் அணையாது விளங்கும் விலக்குகளை எண்ணிப்பார்ப்பது வழக்கமாக இருந்துள்ளது.

- ❖ வஞ்சி, வெண்காஞ்சி மரங்களைத் தாழைநார் கொண்டு கட்டி அதன்மேல் தருப்பைப்புல் வேய்ந்து கட்டப்பெற்ற குடிசைகளில் வாழ்ந்துள்ளனர்.
- ❖ இவர்கள் தங்கள் குடிலுக்கு வருபவர்களுக்கு மீன் வறுவல், கள், வெண்ணெல் சோறு கொடுத்து விருந்து பேணியுள்ளனர்.
- ❖ நானில மக்கள் உழைத்து உண்ணும் இயல்பினை உடையவர்களாகவும், பகுத்துண்டு வாழும் பண்பினராகவும் இருந்துள்ளனர்.
- ❖ பாலை நிலத்தில் வாழும் எயினர்கள் வெம்மையான பாறைகளின் மீது ஏறித் தம் அம்பினைத் தீட்டியுள்ளனர்.
- ❖ எயினர் வில்லினையும், கூரிய அம்பினையும், சிவந்த துவராடையையும் உடுத்திக் கொண்டிருந்தனர்.
- ❖ இவர்கள் முட்பன்றி ஊனை உணவாக உட்கொள்வார்கள். பாலை நிலத்தில் வாழும் கானவர் மான்களையும், முயல்களையும் வேட்டையாடியுள்ளனர்.
- ❖ ஊகம் புல்லினால் வேயப்பட்ட குடில்களில் எயினர்கள் வாழ்ந்துள்ளனர். இவர்கள் தங்கள் இல்லத்திற்கு வரும் விருந்தினர்களுக்கு சோறும், உடும்பின் பொறியலும் கொடுத்துள்ளனர்.
- ❖ தமிழர்கள் நிலத்தின் இயல்பிற்கேற்பத் தங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொண்டதும், சமூகக் குழுக்கள் ஒவ்வோரிடங்களில்

நிலைத்து அவ்விடங்களுக்கு ஏற்பத் தொழில்களைச் செய்தனர் என்பதும் ஆராய்ந்து விளக்கப்பட்டுள்ளது.

❖ தமிழகத்தில் குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்னும் ஐவகைப்பாடு முறையே வேடர், கள்ளர், இடையர், மீனவர், உழவர் ஆகியோரின் வாழிடங்களாக இருந்துள்ளது.

❖ பல்வேறு குடும்பங்களின் கூட்டுத் தொகுப்பு அல்லது கூடி வாழும் அமைப்பு சமுதாயம் எனப்படும்.

❖ மரபு வழிபட்ட பண்பு நலன்கள், உணர்வுகள், உடலமைப்பு ஆகியவை ஒரு சமுதாயத்தை உருவாக்குகின்றன என்ற கருத்து பதிவு செய்யப்பட்டுள்ளது.

❖ சமூகம் என்பது இணைப்பின் இயங்குமுறையாகக் கருதப்படுகிறது.

❖ விஞ்ஞானப்பூர்வமாகவும், புறநிலையாகவும், மனிதனையும், சமுதாயத்தையும் அறிவதே சமூகவியலின் சாராம்சமாகும்.

❖ சங்க காலச் சமுதாயமானது, ஓரிடத்தில் தங்கி நிலைத்து வாழத் தலைப்பட்ட சமுதாயமாக மாறியது. அதனைத் திணைப் பாகுபாடுகள், திணைநிலை வாழ்வுகள் காட்டுகின்றது.

❖ நாகரீக முதிர்ச்சியற்ற வேடர்கள், பயிரிடுபவர்களாக இல்லாமல் சிதறிய உணவு சேகரிப்பவர்கள் ஏரையும், இழுமாடுகளையும் பயன்படுத்தத் தெரியாமல் தோண்டும் கம்பையும், மண் வெட்டியையும் கருவிகளாக எடுத்துக் கொண்டு அடிக்கடி இடம் மாறுபவர்களாகிய குடியானவர்களாக விளங்கினர்.

- ❖ பல்வேறு மதங்கள் தம்முள் மோதி ஒற்றுமையின்றி இருந்தமையினால் சாதி தோன்றியது என்ற கருத்து வலியுறுத்தப்பட்டுள்ளது.
- ❖ வர்க்கம் என்பது ஒத்த சமுதாயம் பொருளாதாரத் தகுதியைக் கொண்ட ஒரு குழுவாகும். சமுதாயத்தில் மிகுந்த செல்வர்கள், மிகுந்த வறுமையானவர்கள் இவர்கள் இருவருக்கும் இடைப்பட்டவர்கள் என மூன்று வகையான வர்க்கங்கள் உண்டு.
- ❖ வர்க்கத்தில் உயர்ந்த மேல்நிலை, தாழ்ந்த மேல்நிலை, உயர்ந்த இடைநிலை, தாழ்ந்த இடைநிலை, உயர்ந்த கீழ்நிலை, தாழ்ந்த கீழ்நிலை என்ற ஆறு வகையான பிரிவுகள் உண்டு.
- ❖ அந்தணர் என்னும் சொல் பார்ப்பார், அறிவர், துறவியர் முதலியோரைக் குறிக்கும் பொதுச் சொல்லாகக் கருதப்படுகிறது.
- ❖ சங்க காலத்தில் வாழ்ந்த குறிஞ்சி, மருதநில மகளிர் வேற்று நிலத்திற்குச் சென்று வணிகத்தில் ஈடுபட்டதாகச் சான்றேதுமில்லை.
- ❖ சங்க இலக்கியச் சமுதாயத்தில் குறிஞ்சி, மருதநில மகளிர் மட்டும் தம் இடம் விடுத்துச் சென்று வாணிகத்தில் ஈடுபடவில்லை.
- ❖ சிறு வணிகம் மட்டுமே பெண்ணால் மேற்கொள்ளப்பட்டது. இவ்வணிகத்தில் 'தரகர்' என்ற நிலையில்லை. அதனால் நுகர்வோர் பாதிக்கப்பட்டதாகத் தெரியவில்லை.
- ❖ சங்க இலக்கியச் சமுதாயத்தில் இல்லப்பணி பெண்களுடையது என்பது அழுத்தமாகப் பதிவாகியுள்ளது. ஆடவர் இல்லப்பணி மேற்கொள்ளவில்லை.

- பெண்கள், வணிகத்திலும் சமுதாயப் பணியிலும் பங்கேற்ற நிலையில் இரட்டைப்பணி செய்தவர்களாகக் காணப்படுகின்றனர்.
- பெண்டிர் ஆடல், பாடலை மகிழ்வின் அடிப்படையில் நிகழ்த்தியிருக்கின்றனர்.
- பெண்டிர் மேற்கொண்ட ஏவல் பணிகளை இந்நாளைய வர்க்க வேறுபாட்டிற்கான தொல்லெச்சமாகக் கருத இடமுண்டு.
- கலையைத் தொழிலாகக் கொண்ட விறலி, பாடினி, பாண்மகள் போன்றோர் பணிக்குப் பொருள் பெற்றனர். ஏனைய பணிகளில் ஈடுபட்ட பெண்டிர் பொருள் பெற்ற செய்தி இல்லை. ஆயின் பொருள் பெற்றிருத்தல் நிகழ்ந்திருக்கக்கூடியது.
- திருமணத்திற்குமுன் சிலம்பு கழி நோன்பு நடைபெற்றது, விளக்கு ஏற்றப்பட்டு இறைவழிபாடு நடத்தப்பட்டது.
- மணமக்களின் கைகளில் காப்புநூலைக் கட்டுகிற வழக்கம் இருந்துள்ளது.
- குடங்களில் நெல்லும், மலரும் தூவி மகவு ஈன்ற மங்கல மகளிர் நால்வர் மணமகளை வாழ்த்தி மணநீராட்டியுள்ளனர்.
- இழையணிவித்தல் நடைபெறும் பெற்றோரும், மற்றவர்களும் வாழ்த்துவர். இவை போன்ற சடங்குகள் மணநாளில் நடைபெறும்.
- பெண்ணிற்கு கற்பின் அடையாளமாக இலை அணிவித்தல் செய்யப்பட்டுள்ளது. பெண்ணிற்குத் தாலிகட்டும் வழக்கம் காணப்படவில்லை.

❖ பழக்கத்தின் தொடர்ந்த நிலையே வழக்கம் ஆகும். வழக்கங்கள் ஒரு குழுவினுடைய விருப்பங்கள், இலட்சியங்கள், வாழ்க்கைக் கண்ணோட்டங்களில் பிரதிபலிப்பதாகவும் அமைகின்றன.

❖ ஓர் இனக்குழுவிலுள்ள பலருடைய மனவெழுச்சி, உணர்ச்சி, விருப்பு, வெறுப்பு ஆகியவற்றுடன் இணைந்து ஏற்பது வழக்கம் என்று கருதப்படுகிறது.

❖ பழக்கம் என்பது தனிமனிதனைச் சார்ந்த தொடக்கநிலை எனவும் வழக்கம் என்பது சமுதாயம் சார்ந்த தொடர்நிலை எனவும் கூற இடமுண்டு.

❖ தொல்காப்பியர் காலத்தில் அடியோர், வினைவலர் இருந்துள்ளமை அறியப்படுகிறது.

❖ சமூகத்தில் விளிம்புநிலையினர் என்போர் தனித்த பிரிவினர். இவர்கள் ஒன்று அல்லது ஒன்றுக்கும் மேற்பட்ட குழுவின் பேராளர்களாக இருப்பர்.

❖ அடியோர் என்போர் 'ஏவல் பணியாளர்' என்றும், வினைவலர் 'கூலித் தொழிலாளர்' என்றும் அழைக்கப்படுகின்றனர்.

❖ விளிம்புநிலை மக்கள் எப்பொழுதும், விழிப்புடனும், தன் முனைப்புடனும், தற்பெருமையுடனும் செயல்படுவர்,

- சமுதாயத்தின் ஓரத்திற்குத் தள்ளப்பட்டோரே விளிம்புநிலை மாந்தர் எனப்படுவர். அதற்கு அவர்களின் பொருளாதார நிலையே அளவீடாக அமைகிறது. இவர்கள் பொருளாதார நிலையில் கடைநிலையில் வாழ்பவர்களாவர்.
- வாழ்கின்ற நாள்களில், வாழ்கின்ற சூழலில் விளிம்புநிலை மக்கள் தனக்கான பொருளாதார சமுதாய அரசியல் சார்ந்த வாழ்வுரிமையை விட்டுக் கொடுக்க வேண்டிய இழக்க வேண்டிய நிலைக்குத் தள்ளப்படுகின்றனர்.
- சமுதாய விலக்கல் என்பது அனைத்துத் தரப்பினருக்கும், கிடைக்கப்பெற வேண்டிய கல்வி, இருப்பிடம் ஆகியவற்றில் ஏற்படும் தடைகள் ஒரு குறிப்பிட்ட குழுவுக்குக் கிடைக்காமல் இருப்பது ஆகும்.
- சங்ககால சமுதாயமும், ஒரு கூட்டமைப்புச் சமுதாயத்தில் பல்வேறுபட்ட ஏற்ற இறக்கங்கள் அமைந்திருக்கின்றன. சங்க காலச் சமுதாயத்தில் பல்வேறுபட்ட ஏற்ற இறக்கங்கள் அமைந்திருக்கின்றன.
- விளிம்புநிலை மக்களுக்கென்று சாதியச் சமூக அமைப்பில் அவர்களுக்கென அங்கீகரிக்கப்பட்ட எந்த இடமும் கிடையாது.
- கல்வி வளர்ச்சி, பணிநிலை போன்ற சமூகநிலை மாற்றத்திற்கு (Social Mobility) விளிம்பு நிலையினருக்கான வாய்ப்பு அரிதாகும்.
- விளிம்புநிலை மனிதக் குழுவான பழங்குடியினரிடையே எவ்வித ஏற்றத்தாழ்வும் இருக்காது.

- கடந்த பல ஆண்டுகளாக முழு நாடோடிகளாக வாழ்ந்து தற்போது அரை நாடோடிகளாக வாழ்ந்து கொண்டிருக்கும் நரிக்குறவர்கள் விளிம்பு நிலையினராக இன்றுவரை அடையாளப்படுத்தப்படுகின்றனர்.
- ஒரு நாட்டில் இடம்பெறும் உள்நாட்டுக் கலவரங்கள், போர்களினால் ஏற்படும் இடப்பெயர்வினால் பண்பாட்டு அடையாளங்களை நொடிப்பொழுதில் முழுவதும் இழந்து புதிய சூழலில் விளிம்பு நிலைக்குள்ளாக்கப்பட்டவர்கள் விளிம்பு நிலையினராகக் கருதப்படுகின்றனர்.

## சான்றெண் விளக்கம்


1. புறப்பொருள் வெண்பாமாலை, குடிநிலை, ப.14.
2. P.T.Srinivasa Iyangar, "The Tamils" P.14.
3. Chithamparanatha Chettiar (Ed.), Eng-Tamil Dictionary, P.961.
4. கௌமாரீஸ்வரி (பதி.,) கௌரா தமிழ் அகராதி, ப.331.
5. கா.சிவத்தம்பி, இலக்கியத்தில் முற்போக்கு வாதம், ப.16.
6. சி.இ.மறைமலை, இலக்கியமும் சமூகவியலும், ப.64.
7. கு.வெ.பாலசுப்பிரமணியன், சங்க இலக்கியங்களில் சமூக அமைப்புகள், ப.1.
8. மேலது, ப.11.
9. கல்பகம், சமூகவியல், ப.31.
10. எங்கெல்ஸ்-பிரடெரிக், இயற்கையின் இயக்க இயல், ப.8.
11. மேலது, ப.44.
12. மேலது, ப.44.
13. க.பாஸ்கரன், சமுதாயத் தத்துவம், ப.9.
14. பாஸ்கல் கிஸ்பர்ட், எஸ்.ஜே., சமூகவியலின் அடிப்படைக் கூறுகள், ப.52.
15. பெ.மாதையன், சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள், ப.37.
16. மேலது, ப.38.
17. சியாமா சரண்துபே (நூ.ஆ.), ஸ்ரீதரன் (மொ.பெ.ஆ.), இந்தியச் சமுதாயம், ப.18.
18. மேலது, ப.64.
19. சீ.பக்தவத்சலபாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.323.
20. மேலது, ப.324.

21. எட்கர்தர்ஸ்டன், தென்னிந்தியக் குலங்களும் குடிகளும், தொகுதி-1, ப.86.
22. மேலது, ப.89.
23. சு.பொ.அகத்தியலிங்கம், சாதியம் வேர்கள் விளைவுகள், ப.10.
24. மேலது, ப.14.
25. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை, (உ.ஆ.), புறம்.27, ப.73.
26. கே.கே.பிள்ளை, தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும், ப.21.
27. சேனாவரையர் (உ.ஆ.), தொல்காப்பியம், சொல்லதிகாரம், நூ.165, ப.109.
28. சீ.பக்தவத்சலபாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.344.
29. மேலது, ப.344.
30. மேலது, ப.344.
31. மேலது, ப.344.
32. மேலது, ப.345.
33. மேலது, ப.347.
34. மேலது, ப.318.
35. J.H.Huton, Caste of India, PP.190-193.
36. G.S.Charge, Caste and Class in India, PP.141-160.
37. D.N.Majumdas, Rales and Cultures of India, P.326.
38. சீ.பக்தவத்சலபாரதி, தமிழர் மானிடவியல், ப.328.
39. மேலது, ப.328.
40. மேலது, ப.147.
41. கே.பி.அழகம்மை, சமூகநோக்கில் சங்க மகளிர், ப.143.
42. மேலது, ப.89.

43. மேலது, பக்.138-139.

44. மேலது, ப.123.

45. மேலது, ப.74.

46. பெ.சு.மணி, "சங்க கால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும்", கோ.பத்மாவள்ளி, "சங்ககாலப் பெண்பாற் புலவர்கள் - ஒரு புதிய பார்வை" எம்.ஃ.பில்., ஆய்வேடு, அன்னை தெரசா மகளிர் பல்கலைக்கழகம், 1989.

47. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி இரண்டு, ப.354.

48. மேலது, ப.367.

49. மேலது, ப.367.

50. மேலது, ப.367.

51. மேலது, ப.368.

52. கே.பி.அழகம்மை, சமூக நோக்கில் சங்க மகளிர், ப.140.

53. மேலது, ப.140.

54. சடகோபன், பொருளியல் கோட்பாடுகள், ப.120.

55. மேலது, ப.120.

56. மேலது, ப.328.

57. மேலது, ப.328.

58. மேலது, ப.328.

59. மேலது, ப.328.

60. மேலது, ப.328.

61. மேலது, ப.328.

62. அ.ஆறுமுகம், சங்க இலக்கியத்தில் குடும்பம், உடைமை, அரசு,ப.17.

63. கா.சுப்பிரமணியன், சங்ககாலச் சமுதாயம், ப.37.

64. மா.இராசமாணிக்கனார், தமிழர் திருமணத்தில் தாலி, ப.13.

65. கா.சுப்பிரமணியன், சங்ககாலச் சமுதாயம், ப.38.

66. கோதில்மொழியான், தொல்காப்பியத்தில் சாதிநெறி, ப.24.

67. மேலது, ப.24.

68. தே.ப.சின்னச்சாமி, கொங்கு வேளாளர் சடங்குகளில் பண்பாடு, ப.51.

69. பக்தவத்சல பாரதி, தமிழர் மானிடவியல், ப.175.

70. மேலது, ப.183.

71. மேலது, ப.180.

72. மேலது, ப.180.

73. வி.சரசுவதி, சாதி அடிப்படைத் தாலாட்டு ஒப்பாரிப் பாடல்களில் ஒற்றுமை, வேற்றுமைகள், ப.242.

74. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும், நம்பிக்கைகளும், ப.12.

75. கலைக்களஞ்சியம், தொகுதி-7, ப.30.

76. பாஸ்கல் கில்பர்ட், சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், ப.234.

77. க.த.திருநாவுக்கரசு, வள்ளுவர் கண்ட மனிதன், Journal of Tamil Studies, ப.60.

78. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும், நம்பிக்கைகளும், ப.15.

79. பாஸ்கல் கில்பர்ட், சமூகவியல் அடிப்படைக் கோட்பாடுகள், ப.235.

80. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும், நம்பிக்கைகளும், ப.12.

81. பக்தவத்சலபாரதி, மானிடவியல் கோட்பாடுகள், ப.252.

82. மேலது, ப.252.

83. மேலது, ப.253.

84. மேலது, ப.254.

85. க்ரியாவின் தற்காலத் தமிழகராதி, ப.101.
86. கழகத்தமிழகராதி, ப.948.
87. பக்தவச்சலபாரதி, மானிடவியல் கோட்பாடுகள், ப.254.
88. மேலது, ப.255.
89. மேலது, ப.256.
90. Social exculution (Wikipidia)
91. பக்தவச்சலபாரதி, மானிடவியல் கோட்பாடுகள், ப.254.
92. மேலது, ப.255.
93. ம.கருணாகரன், ஔவையார் பாடல்களில் விளிம்புநிலை மக்களின் வாழ்வியல், (ஆய்வுக்கோவை), அரசு கலைக்கல்லூரி, மேலூர்.
94. மேலது, ப.1.
95. மேலது, ப.2.
96. மேலது, ப.3.
97. மேலது, ப.4.
98. மேலது, ப.5.
99. மேலது, ப.6.
100. மேலது, ப.7.
101. மேலது, ப.7.

## இயல்-2

## இலக்கணங்களில் விளிம்புநிலை மக்கள்

### முன்னுரை

மனிதகுல வாழ்க்கையின் பிரதிபலிப்பாக இலக்கியங்கள் திகழ்கின்றன. அவ்விலக்கியங்களிலிருந்து எழுந்த இலக்கணங்கள் மனிதனுக்கும் சமூகத்திற்கும் உள்ள அடிப்படையான உறவை வரையறுத்துக் கூறுகின்றது. அதன்படி வாழ்க்கைக்கு இலக்கணம் வகுத்த பெருமை தமிழ் மொழியையே சாரும். இப்பொருள் இலக்கணம் அகம், புறம் பற்றியதாக அமையும். காதல் வாழ்வைச் செப்பியன அகமென்றும் அது அல்லாத பிறவற்றைக் கூறுவன புறமென்றும் பெயர்பெறும். புறத்தைவிட அகம் நுட்பமானத் தன்மைகளைக் கொண்டு மேன்மைபெற்று விளங்குகின்றது. அதன்வாயிலாக அதிகாரமிக்க மனிதர்களும் அதிகாரமற்று விளிம்புநிலையில் வாழக்கூடிய மக்களும் அவர்களின் பண்பாடும் பதிவுசெய்யப்பட்டுள்ள விதத்தை இலக்கண நூல்களின் வாயிலாக ஆராய்ந்து கூறுவதே இவ்வியலின் நோக்கமாகும்.

### இலக்கண நூல்களில் விளிம்புநிலை மக்களின் வாழ்வியல்

எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்ற ஐந்திலக்கணங்களைக்கூறும் நூல்களாகத் தொல்காப்பியம், வீரசோழியம், இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம், சுவாமிநாதம், அவிநயம், முத்துவீரியம் என்பவை உள்ளன. தனிநிலையில் அகப்பொருளை விளம்பும் அகப்பொருள் இலக்கண நூல்களாக இறையனார் அகப்பொருள்,

களவியற்காரிகை, மாறன் அகப்பொருள் போன்ற நூல்களும், புறம் பற்றிய புறப்பொருள் வெண்பாமாலை போன்ற நூல்களும் உள்ளன. அவ்விலக்கண நூல்களில்,

- ❖ தொல்காப்பியம்
- ❖ இறையனார் அகப்பொருள்
- ❖ வீரசோழியம்
- ❖ நம்பியகப்பொருள்
- ❖ தமிழ்நெறி விளக்கம்
- ❖ தொன்னூல் விளக்கம்
- ❖ முத்து வீரியம்
- ❖ சுவாமிநாதம்

ஆகிய நூல்களில் இடம்பெற்றுள்ள விளிம்பு நிலை மக்கள் பற்றிய கருத்துக்களை மட்டும் இவ்வியலின் விரிவஞ்சி எடுத்துக்கொள்ளப்படுகின்றன.

**தொல்காப்பியத்தில் விளிம்பு நிலை மக்கள்**

தொல்காப்பியம் எழுத்து, சொல், பொருள் என்னும் முப்பொருள் குறித்த இலக்கணத்தை விரிவாகக் குறிப்பிடுகிறது. இந்நூலில் தொல்காப்பியர் ஆற்றுப்படை இலக்கணத்தை

**“கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்**
**ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்**
**பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்**
**சென்று பயன்எதிரச் சொன்ன பக்கமும்” (தொல்.புறம்.நூ.88)**

என்பர். இதில் கூத்தர், பாணர், பொருநர், விறலியர் ஆகிய கலைஞர்கள் கூறப்பட்டுள்ளனர். புரவலரை நாடிச் சென்று பரிசில் பெறுதல், தத்தம் இனத்தவரைப் பரிசில் பெற்ற புரவலர்பால் ஆற்றுப்படுத்துதல் என்பதே இவர்களின் நோக்கமாகும்.

**கூத்தர்**

கூத்து என்ற கலை வடிவை நிகழ்த்துபவர் கூத்தர் என்றழைக்கப்பட்டனர். கூத்தர்களின் இயல்பினைத் தொல்காப்பியம்,

> **“தொல்லவை உரைத்தலும் நுகர்ச்சி ஏத்தலும்**
> **பல்லாற்றானும் ஊடலின் தணித்தலும்**
> **உறுதி காட்டலும், அறிவு மெய்நிறுத்தலும்**
> **ஏதுவின் உணர்த்தலும் துணிவு காட்டலும்**
> **அணிநிலை உரைத்தலும் கூத்தர்மேன” (தொல்.கற்பு.நூ.166)**

எனக்கூறும். இந்நூற்பாவிற்கு உரை எழுதிய இளம்பூரணர், “அவர் எல்லா நெறியினானும் புனைந்துரைக்க வல்லாராதலான் அவர் மேலன”[1] என உரைப்பர். மேற்சுட்டியவற்றால் கூத்தர்கள் கலைஞராகவும் புனைந்துரையில் வல்லவராகவும் விளங்கியமை பெறப்படும். “கூத்த நூல்களை நன்கு கற்று அக்கலையில் புலமை பெற்ற கூத்தரை தமிழ் நெடுநில மன்னரும் நன்கு போற்றிப்பாதுகாத்தனர். இக்கூத்தர்கள் கோடியர், வயிரியர், கண்ணுளர் எனப் பல பெயர்களில் சங்க இலக்கியங்களில் குறிக்கப் பெற்றுள்ளனர். இதனை,

**“இரும்பேர் ஒக்கல் கோடியர்” (அகநா.30)**

**“வயிரியர் கண்ணுளர்க் கோம்பாது வீசி” (பதிற்.20)**

என்ற அடிகள் புலப்படுத்தும்.

தொல்காப்பியத்தில் ஊடல் தீர்க்கும் வாயில்களில் ஒருவராகக் கூத்தர் குறிக்கப்பட்டுள்ளனர்.

**பாணர்**

“இசைக்கலைக்குரிய நூல்களைக் கற்றவரே பாணர், பாடினியர் எனப்பட்டனர். “பண்” என்ற சொல்லின் அடியாகப் பிறந்தது பாணர் என்ற சொல்லாகும். பண் என்ற சொல் பெயர்ச்சொல் நிலையில் இசை என்று பொருள்படும். வினைச்சொல் என்ற நிலையில் இசைவி எனப் பொருள் தரும். மக்களை ஒருங்கு இசைவிக்கும் கலையாகப் பண் பிறந்தது. பண்ணை இசைத்தோர் பாணர் எனப்பட்டனர்”[2]. திணை அடிப்படையில் மக்களைப் பாகுபடுத்திய தொல்காப்பியர், முல்லை நிலத்திற்கு மட்டும் மக்கட் பெயர்களைக் குறிப்பிடுகிறார். அதனை,

**“ஆயர் வேட்டுவர் ஆடூஉத் திணைப்பெயர்**

**ஆவயின் வரூஉம் கிழவரும் உளரே” (தொல்.அகம்.நூ.23)**

என்ற நூற்பா விளக்கும். ஏனைய நிலத்திற்குரிய மக்களை,

**“ஏனோர் பாங்கினும் எண்ணுங்காலை**

**ஆனா வகைய திணை நிலைப்பெயரே” (தொல்.அகம்.நூ.24)**

என்பர். இதற்கு, “ஏனைய நிலத்து மக்கள் மாட்டும் ஆராயுங்காலத்து அவ்வகைத்திணைப் பெயர்கள் உள”[3] என்பது பொருள். இந்நூற்பாவிற்கு

உரை எழுதிய இளம்பூரணர், நச்சினார்க்கினியர் போன்ற உரையாசிரியர்கள் மக்கட் பெயர்களை வரையறுத்துள்ளனர்.

குறிஞ்சி நிலத்திற்குரிய மக்கட் பெயர்களை இளம்பூரணர், மக்கட் பெயர், தலைமக்கட் பெயர் என்று பாகுபடுத்திக் கூறுகிறார். அவற்றுள் “மக்கட் பெயராக குறவன், குறத்தியையும் தலைமக்கட்பெயராக மலைநாடன், வெற்பன் போன்றோரையும் குறிப்பிடுகிறார்.”[4] திணைதோறும் குலப்பெயரும், தொழிற்பெயரும், கிழவர் பெயரும் வரும் என்பர். அதே நூற்பாவிற்கு உரைகாணும் நச்சினார்க்கினியர் “பெயர்ப்பெயரும், வினைப்பெயரும் என்ற பகுப்பை ஏற்படுத்திக் கொண்டு அதன்கீழ் பெயர்களை வகைப்படுத்திக் கூறுகிறார். அவை குலப்பெயர், கானவர், வேட்டுவர், இறவுளர், குன்றவர், வேட்டுவித்தியர், குறத்தியர், குன்றுவித்தியர் என்பவற்றுடன் ஏனைய பெண் பெயரும் வருமென உணர்க”[5] என்பர்.

உரிப்பொருட்குரிய மக்கட்பெயர்களை வகைப்படுத்த எண்ணிய நச்சினார்க்கினியர், “தலைமக்கள், நாடாட்சி பற்றிய பெயர்கள் என்று பகுத்து அதில் வெற்பன், சிலம்பன், பொருப்பன், கொடிச்சி என்பது ஆண்பாலுக்கு ஏலாத பெயர் என்று குறிப்பிடுகிறார்.”[6]

முல்லை நிலத்திற்கு மக்கட்பெயராக ஆயர், வேட்டுவர் என்ற இரு பெயர்களை மட்டும் குறிப்பிடுகிறார் தொல்காப்பியர். ஆனால் இளம்பூரணர் “மக்கட்பெயரில் ஆயர், வேட்டுவரையும், தலைமக்கட் பெயரில் குறும்பொறை நாடனையும் சேர்த்துக் கூறுகிறார்”.[7] நச்சினார்க்கினியர் “கோவலர், இடையர், ஆயர், பொதுவர், இடைச்சியர், கோவித்தியர், ஆய்ச்சியர், பொதுவியர்

போன்ற பெயர்களைக் குறிப்பிடுகிறார்."[8] உரிப்பொருட்குரிய மக்கட் பெயர்களைக் கூறும்போது "அண்ணல், தோன்றல், குறும்பொறை, நாடன், மனைவி போன்ற பெயர்களைக் கூறுகிறார்."[9]

மருத நிலத்திற்குரிய மக்கட்பெயர்களை இளம்பூரணர், "மக்கட் பெயராக, உழவன், உழத்தியரையும், தலைமக்கட்பெயராக ஊரன், மகிழ்நனையும் குறிப்பிடுகிறார்."[10]

நச்சினார்க்கினியர் "களமர், உழவர், கடையர், கடைச்சியர், உழத்தியர் என்று குறிப்பிட்ட அவர் ஏனைய பெண் பெயரும் வருமென உணர்க என்பர். ஆனால் உரிப்பொருளைக் கூறும்போது, மகிழ்நன், ஊரன், மனையோள் போன்ற பெயர்களைக் குறிப்பிடுகிறார்."[11]

நெய்தல் திணைக்குரிய மக்கட்பெயர்களைக் கூற விரும்பிய இளம்பூரணர் மக்கட் பெயரில் நுளையர், நுளைச்சியரையும், தலைமக்கட்பெயரில் சேர்ப்பன், துறைவன் கொங்கன் போன்ற பெயர்களையும் குறிப்பிடுகிறார்."[12] நச்சினார்க்கினியர் "நுளையர், திமிலர், பரதவர், நுளைத்தியர், பரத்தியர் என்று குறிப்பிடும் அவர் ஏனைய பெண் பெயரும் வருமென உணர்க"[13] என்றார். மேலும் உரிப்பொருட்குரிய மக்கட்பெயர்களை அவர் கொண்கன், துறைவன், சேர்ப்பன், மெல்லப் புலம்பன், என்று தலைவன் பெயர்களை மட்டும் கூறியவர் தலைவி பெயர்களை வந்துழிக் கண்டுகொள்க"[14] என்பர். இளம்பூரணர் கொங்கன் என்று குறிப்பிடம் பெயரை நச்சினார்க்கினியர் கொண்கன் என்று குறிப்பிடுகிறார்.

பாலை நிலத்திற்குரிய மக்கட்பெயர்களை இளம்பூரணர் "மக்கட்பெயரில் எயினர், எயிற்றியர் போன்றோரையும் தலைமக்கட்பெயரில் மீளி, விடலை போன்றோரையும் குறிப்பிடுகிறார்."[15] ஆனால் நச்சினார்க்கினியர் பெயர்பெயரும், வினைப்பெயரும் என்ற அடிப்படையிலும், உரிப்பொருட்குரிய தலை மக்கள் நாட்டாட்சி பற்றிய பெயர்கள் என்ற அடிப்படையிலும், மற்ற நான்கு நிலத்திற்குரிய மக்கட்பெயரைக் குறிப்பிட்ட அவர் பாலை நிலத்திற்கு மட்டும் கூறாமல் அப்படியே விட்டுவிட்டார். இதனை,

**"நடுவண் ஐந்திணை நடுவனது ஒழியப்**

**படுதிரை வையம் பாத்தியப் பண்பே"** **(தொல்.அகம்.நூ.11)**

என்ற நூற்பாவில் கூறப்பட்டதற்கிணங்க பாலை நிலத்தை நிலப்பாகுபாட்டில் இருந்து நீக்கியமையால், அந்நிலத்திற்குரிய மக்கட்பெயர்களை நச்சினார்க்கினியர் விட்டுச் சென்றிருக்கலாம் எனக் கருத இடமுண்டு.

**விறலி**

விறலி ஆற்றுப்படுத்தும் கலைஞர்களில் ஒருவராகவும், அகவாழ்விற்குரிய மாந்தர்களில் ஒருவராகவும் குறிக்கப்படுகின்றாள். இதனை,

**"தோழி, தாயே, பார்ப்பான், பாங்கன்**

**பாணன், பாடினி, இளையர், விருந்தினர்,**

**கூத்தர், விறலியர், அறிவர், கண்டோர்,**

**யாத்த சிறப்பின் வாயில்கள் என்ப"** **(தொல்.கற்பு,நூ.19)**

என்னும் நூற்பா விளக்கும்.

**இறையனார் அகப்பொருளில் விளிம்புநிலைமக்கள்**

கி.பி.8 ஆம் நூற்றாண்டில் தோன்றிய இந்நூலின் ஆசிரியர் இறையனார் ஆவார். இதற்கு உரை எழுதியவர் நக்கீரராவார். அவர் திணைநில மக்கட் பெயர்களை தலைமகன், தலைமகள் பெயர், மக்கட் பெயர் என்ற அடிப்படையில் பாகுபடுத்தி அதன்கீழ் மக்கட் பெயர்களைச் சுட்டுகிறார்.

குறிஞ்சி நிலத்துக்குரிய தலைமகன் பெயராக சிலம்பன், வெற்பன், பொருப்பன் போன்றோரையும், தலைமகள் பெயராக கொடிச்சி, குறத்தி, போன்றோரையும், மக்கட் பெயராக குறவர், இறவுளர், குன்றவர் போன்றோரையும் குறிப்பிடுகிறார்.[16]

முல்லை நிலத்திற்குரிய தலைமகன் பெயராகக் குறும்பொறை நாடனையும், தலைமகள் பெயராக கிழத்தி, மனைவி போன்றோரையும், மக்கட் பெயராக இடையர், இடைச்சியர், ஆயர், ஆய்ச்சியர் போன்றோரையும் குறிப்பிடுகிறார்."[17] இதில் கிழத்தி, மனைவி என்பன மருத நிலத்துத் தலைமக்கட்குரிய பெயர் என்பர்.

மருதநிலத்திற்குரிய தலைமகன் பெயராக ஊரன், மகிழ்நன் போன்றோரையும், தலைமகள் பெயராக கிழத்தி, மனைவி போன்றோரையும், மக்கட்பெயராக கடையர், கடைச்சியர், உழவர், உழத்தியர் போன்றோரையும் குறிப்பிடுகிறார்.[18]

நெய்தல் நிலத் தலைமகன் பெயராகத் துறைவன், கொண்கன், சேர்ப்பன் போன்றவர்களையும், தலைமகன் பெயராக நுளைச்சியர், பரத்தி போன்றோரையும், மக்கட்பெயராக பரதர், பரத்தியர், நுளையர், நுளைச்சியர் போன்றவர்களையும் இந்நிலத்திற்குரிய பெயராகக் கூறுவர்."[19]

பாலை நிலத்திற்குரிய தலைமகன் பெயராக மீளி விடலையும், தலைமகள் பெயரில் எயிற்றி பேதையையும், மக்கட் பெயரில் எயினர், எயிற்றியர், மறவர், மறத்தியர் போன்றவர்களையும் இந்நிலத்திற்குரிய மக்களாகக் குறிப்பிடுவர் நக்கீரனார்."[20]

**வீரசோழியம்**

கி.பி. 11ஆம் நூற்றாண்டில் தோன்றிய வீரசோழியத்தின் ஆசிரியர் புத்தமித்தரனார். இவர் இந்நூலில் மக்கட்பெயர்களை எந்தவிதப் பகுப்புமின்றி பொதுவான நிலையில் ஒரு சில பெயர்களை மட்டும் குறிப்பிடுகிறார். இதற்கு உரை எழுதிய பெருந்தேவனார் பெயர்களைப் பற்றிய குறிப்புக்களைக் கூறவில்லை.

குறிஞ்சி நிலத்திற்குரிய மக்கட் பெயர்களாக வெற்பன், குன்றுவர் என்ற பெயர்களையும், முல்லை நிலத்திற்குரிய மக்கட்பெயர்களாக இடையர், கிழத்தி என்ற பெயர்களையும், மருதநிலத்திற்குரிய மக்கட்பெயர்களாக ஊரன், கடைச்சியர் என்ற பெயர்களையும், நெய்தல் நிலத்திற்குரிய மக்கட்பெயர்களாக கொண்கன், நுளையர் என்ற பெயர்களையும், பாலைநிலத்திற்குரிய மக்கட்பெயர்களாக வேடர், விடலை, குறும்பர் என்ற பெயர்களையும் புத்தமித்தரனார் குறிப்பிடுகிறார். அவை முறையே,

“மலையிருள் முன்பனி கூதிர் வெற்பன் கணமூங்கில் மஞ்ஞை
இலைமலி வேங்கை செங்காந்தளி லவமிகல் முருகன்
சிலைமலி குன்றுவர் தேனே புணர்தல் தினைசுனையுங்”

(வீ.சோ.90:1-3)

“காடுகார் மாலை யிடையர் முதிரைகான் யாறு முல்லை
நீடுமால் கொன்றை நிரை மேய்த்தலோடு நெடுங்குருத்தம்
கேடில்கார் தோன்றி சிறுபான் கிழத்தி மனையிருத்தல்”

(வீ.சோ.92:1-3)

“தெற்றா மனையூட லூரன், கடைசியர் செங்கழுநீர்”

(வீ.சோ.93:1)

“மீனே கடல்பனி கொண்கன் திமிலம் விளரிநிலாக்
கானே தரும் புன்னை கண்டலன் னஞ்சுறாக் காதலுப்பு
வானோர் வருணன் முதலை நுளையரிரங்கல் கைதை”

(வீ.சோ.94:1-3)

“தீதியல் வேடர் கலையொள் விடலைதிண் பாலை அத்தங்
கோதியல் செந்நாய் பருந்தொடு கொம்பஅனையார்ப் பிரிதல்
வாதியற் கன்னி குறும்பர் வெம்பாலை மடவரலே”

(வீ.சோ.91:2-4)

என்ற பகுதிகள் விளக்கும்.

## நம்பியகப்பொருளில் விளிம்புநிலை மக்கள்

கி.பி. 12ஆம் நூற்றாண்டில் தோன்றிய நம்பியகப்பொருளை நாற்கவிராச நம்பி இயற்றியுள்ளார். இவர் விளிம்பு நிலை மக்கட் பெயர் பற்றி விரிவாகவும், தெளிவாகவும் இந்நூலில் விளக்கியுள்ளார். இவர் திணை நில மக்கட்பெயர்களில் உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்ற பகுப்பை ஏற்படுத்திக் கொண்டு அதன்கீழ் மக்கட் பெயர்களை வகைப்படுத்துகிறார்.

இந்நிலத்திற்குரிய உயர்ந்த மக்களாக பொருப்பன், வெற்பன், சிலம்பன், குறத்தி, கொடிச்சி போன்றவர்களையும், தாழ்ந்த மக்களாக குறவர், கானவர், குறத்தியர் ஆகியோரையும் குறிப்பிடுவர். இதனை,

**“பொருப்பன் வெற்பன் சிலம்பன்**

**குறத்தி கொடிச்சி குறவர் கானவர்**

**குறத்தியர் …… …… ……” (நம்பியகப்.20:1-3)**

என்ற நூற்பா உணர்த்தும்.

முல்லை நிலத்திற்குரிய உயர்ந்தோராகக் குறும்பொறை நாடன், தோன்றல், மனைவி, கிழத்தி போன்றவர்களையும், தாழ்ந்தோராக இடையர், இடைச்சியர், ஆயர், ஆய்ச்சியர் போன்றவர்களையும் கூறுவர். இதனை,

**“குறும்பொறை நாடன் றோன்றல்**

**வடுவில் கற்பின் மனைவி கிழத்தி**

**இடையர் இடைச்சியர் ஆயர் ஆய்ச்சியர்” (நம்பியகப்.22:1-3)**

என்ற நூற்பா புலப்படுத்தும்.

மருத நில மக்கட் பெயர்களில் உயர்ந்தவர்களாக ஊரன், மகிழ்நன், கிழத்தி, மனைவி போன்றவர்களையும், தாழ்ந்தவர்களாக உழவர், உழத்தியர், கடையர், கடைச்சியர் போன்றவர்களையும் குறிப்பிடுவர். இதனை,

**“…… ……. ஊரன் பைந்தார் மகிழ்நன்**

**கெழுதகு கற்பின் கிழத்தி மனைவி**

**உழவர் உழத்தியர் கடையர் கடைச்சியர்” (நம்பியகப்.23:1-3)**

என்ற நூற்பா தெளிவுபடுத்தும்.

நெய்தலாகிய மக்களில் உயர்ந்தோராக சேர்ப்பன், புலம்பன், பரத்தி, நுளைச்சி போன்றோரையும், தாழ்ந்தோராக நுளையர், நுளைச்சியர், பரதவர், பரத்தியர், அளவர், அளத்தியர் போன்றோரையும் குறிப்பிடுவர். இதனை,

**“சேர்ப்பன் விரிதிரைப் புலம்பன்**

**பரும அல்குற் பரத்தி நுளைச்சி**

**நுளையர் நுளைச்சியர் பரதவர் பரத்தியர்**

**அளவர் அளத்தியர்”** **(நம்பியகப்.24:1-4)**

என்ற நூற்பா உணர்த்தும்.

பாலை நிலத்திற்குரிய மக்களில் உயர்ந்தோராக விடலை, காளை, மீளி, எயிற்றி போன்றவர்களையும், தாழ்ந்தோராக மறவர், எயினர், எயிற்றியர், மறத்தியர் போன்றவர்களையும் குறிப்பிடுகின்றார். இதனை,

**“…… …… விடலை காளை மீளி**

**இன்னகை எயிற்றி எயினர் எயிற்றியர்**

**மறவர் மறத்தியர்”** **(நம்பியகப்.25:1-3)**

என்ற நூற்பா நவில்கிறது.

**தமிழ்நெறி விளக்கத்தில் விளிம்புநிலை மக்கள்**

இந்நூல் கி.பி. 12 ஆம் நூற்றாண்டில் தோன்றியது. இந்நூல் மக்கட்பெயர்களை தலைமகன் பெயர், அந்நிலத்து வாழ்வார் பெயர் எனப் பகுத்துப் பெயர்களை வகைப்படுத்துகிறது. இந்தப் பகுப்பு முறை இறையனார் அகப்பொருளிலும் காணப்படுகிறது. ஆனால் இறையனார் அகப்பொருளைப்

போல நிலத்தின் அடிப்படையில் தனித்தனியாகப் பிரித்துக் கூறவில்லை. இதனை,

**"வெற்பன் குறவர் விடலை யெயினர்**

**ஒற்கமில் குறும்பொறை நாடன் குடவர்**

**மகுண னுழவர் சேர்ப்பன் பரதவர்**

**இனையன பிறவு மக்கட் பெயரே"** **(தமிழ்நெறி வி.8)**

என்ற ஒரே நூற்பாவில் தலைமக்கட்பெயரும், நிலமக்கட் பெயரும் குறிப்பிடப்பட்டுள்ளனர். இந்நூற்பாவில் இடம்பெறும் 'பிறவும்' என்பதை அடிப்படையாகக் கொண்ட உரைப்பகுதி ஒவ்வொரு திணைக்கும் உரிய தலைமக்கட் பெயர்களையும், நில மக்கட்பெயர்களையும் வரையறுத்துள்ளது.

குறிஞ்சி நிலத்தின் தலைமகன் பெயராக வெற்பனையும், அந்நிலத்து வாழ்வார் பெயரில் குறவரையும் நூற்பா குறிப்பிடும். பிறவுமென்றதனால் பொருப்பன், மலையன், சிலம்பன், கொடிச்சி, குறத்தி, குறவர், இறவுளர் போன்றவர்களையும் உரை குறிப்பிடும்."[21]

முல்லை நிலத்தின் தலைமகன் பெயராக குறும்பொறை நாடனையும், அந்நிலத்து வாழ்வார் பெயராக குடவரையும் நூற்பா குறிப்பிடும். பிறவுமென்றதனால் அண்ணல், மீளி, இடைச்சியர், கோவலர், இடையர், பொதுவர், ஆயர் போன்றவர்களை உரை குறிப்பிடும்."[22]

மருத நிலத்தின் தலைமகன் பெயரில் மகுணன் என்ற பெயரையும் அந்நிலத்து வாழ்வார் பெயரில் உழவர் பெயரையும் நூற்பா குறிப்பிடும். பிற இலக்கண ஆசிரியர்கள் மகழ்நன் என்று குறிப்பிட்ட பெயரை இவர் மகுணன்

என்று குறிப்பிடுகிறார். பிறவுமென்றதனால் ஊரன், கிழத்தி, மனைவி, கடையர், கடைச்சியர் போன்றவர்களை உரை குறிப்பிடும்."[23]

நெய்தல்நிலத் தலைமகன் பெயரில் சேர்ப்பனையும் அந்நிலத்து வாழ்வார் பெயரில் பரதவரையும் நூற்பா குறிப்பிடும். பிறவுமென்றதனால் கொண்கன், துறைவன், துறைவி, பரத்தி, நுளையர், நுளைச்சியர் போன்றவர்களை உரை குறிப்பிடும்."[24]

பாலைநிலத் தலைமகன் பெயரில் விடலையையும், அந்நிலத்து வாழ்வார் பெயரில் எயினரையும் நூற்பா குறிப்பிடும். பிறவுமென்றதனால் காளை, விடலை, எயினர், எயிற்றி, மறவர் போன்றவர்களை உரை குறிப்பிடும்."[25]

**தொன்னூல் விளக்கத்தில் விளிம்புநிலை மக்கள்**

கி.பி. 18 ஆம் நூற்றாண்டில் தோன்றிய தொன்னூல் விளக்கம் என்ற நூலின் ஆசிரியர் வீரமாமுனிவர் ஆவார். இவர் திணைநில மக்கட்பெயர்களை தலைமக்கள் குடிமக்கள் என்ற பகுப்பின் கீழ் வகைப்படுத்துகிறார்.

குறிஞ்சி நிலத்திற்குரிய மக்கட் பெயர்களை வீரமாமுனிவர்

**"வெறி அணிப் பொருப்பன் வெற்பன் சிலம்பன்**

**குறத்தி கொடிச்சி குறவர் கானவர் குறத்தியர்"　　　(தொ.வி.176)**

என்பர். இதில் தலைமக்களாக பொருப்பன் வெற்பன் சிலம்பன் குறத்தி கொடிச்சி போன்றோரையும் குறிப்பிடுகிறார்.

முல்லை நிலத்திற்குரிய தலைமக்களாக குறும்பொறை நாடன், தோன்றல், மனைவி, கிழத்தி போன்றோரையும், குடிமக்களாக இடையர், இடைச்சியர், ஆயர், ஆய்ச்சியர் போன்றோரையும் குறிப்பிடுகிறார். இதனை,

**"தொல்லைக் குறும்பொறை நாடன் தோன்றல்**

**மடியாக் கற்பின் மனைவி கிழத்தி**

**இடையர் இடைச்சியர் ஆயர் ஆய்ச்சியர்" (தொ.வி.178)**

என்ற நூற்பா அடிகள் தெளிவுபடுத்தும்.

மருத நிலத்திற்குரிய தலைமக்களாக ஊரன், கிழவன், கிழத்தி, மனைவி போன்றோரையும், குடிமக்களாக உழவர், உழத்தியர், கடையர், கடைச்சியர் போன்றோரையும் குறிப்பிடுகிறார். இதனை,

**"...... ...... ...... .......**

**கெழுதகு கற்பின் கிழத்தி மனைவி**

**உழவர் உழத்தியர் கடையர் கடைச்சியர்" (தொ.வி.179)**

என்ற நூற்பா உணர்த்தும்.

நெய்தல் நிலத்திற்குரிய தலைமக்களாக சேர்ப்பன், புலம்பன், பரத்தி, நுளைச்சி போன்றோரையும், குடிமக்களாக பரதர், நுளையர், நுளைச்சியர், அளவர், அளத்தியர் போன்றோரையும் குறிப்பிடுகிறார். இதனை,

**"மொய்திரை சேர்ப்பன் முன்னீர் புலம்பன்**

**பரத்தி நுளைச்சி பரதர் பரத்தியர்**

**நுளையர் நுளைச்சியர் அளவர் அளத்தியர்" (தொ.வி.180)**

என்ற நூற்பா புலப்படுத்தும்.

பாலை நிலத்திற்குரிய தலைமக்களாக காளை, விடலை, மீளி, எயிற்றி போன்றவர்களையும், குடிமக்களாக எயினர், எயிற்றியர், மறவர், மறத்தியர் போன்றவர்களையும் குறிப்பிடுகிறார். இதனை,

**"காளை விடலை மீளி எயிற்றி**

**எயினர் எயிற்றியர் மறவர் மறத்தியர்"** **(தொ.வி.177)**

என்ற நூற்பா உணர்த்தும்.

**முத்து வீரியத்தில் குறிப்பிடும் விளிம்புநிலை மக்கள்**

கி.பி. 19 ஆம் நூற்றாண்டில் தோன்றிய முத்து வீரியத்தில் விளிம்புநிலை மக்கட்பெயர்கள் பதிவு செய்யப்பட்டுள்ளது.

குறிஞ்சி நிலத்திற்குரிய மக்கட்பெயராக வெற்பன், சிலம்பன், குறத்தி, கொடிச்சி, குறவர், கானவர், குறத்தியர் போன்றவர்களைக் குறிப்பிடும். இதனை,

**"…… …… …… வெற்பன் சிலம்பன்**

**குறத்தி கொடிச்சி குறவர் கானவர்**

**குறத்தியர்"** **(மு.வீ.802)**

என்னும் நூற்பா விளக்கும்.

முல்லை நிலத்திற்குரிய மக்கட் பெயராக குறும்பொறை நாடன், தோன்றல், மனைவி, கிழத்தி, இடையர், இடைச்சியர், ஆயர், ஆய்ச்சியர் போன்றவர்களைக் குறிப்பிடும். இதனை,

**"…… …… …… குறும்பொறை நாடன் செம்மல்**

**இல்லாள் கிழத்தியிடைய ரிடைச்சியர்**

**ஆயராச்சிய ரவிட …… ……"** **(மு.வீ.804)**

என்ற நூற்பா சுட்டும்.

மருத நிலத்திற்குரிய மக்கட்பெயராக ஊரன், கிழவன், மனைவி, கிழத்தி, உழவர், உழத்தியர் ஆகியோரைக் குறிப்பிடும். இதனை,

**"இந்தினூர னெழின் மிகுகிழவன்**

**மனைவி கிழத்தி யுழவருழத்தியர்**

**கடையர் கடைச்சியர்"** **(மு.வீ.805)**

என்ற நூற்பா விளக்கும்.

நெய்தல் நிலத்திற்குரிய மக்கட்பெயராக சேர்ப்பன், புலம்பன், பரத்தி, நுளைச்சி, பரதர், பரத்தியர், நுளையர், நுளைச்சியர், அளவர், அளத்தியர் போன்றவர்களைக் குறிப்பிடும். இதனை,

**"…… …… சேர்ப்பன் புலம்பன்**

**பரத்தி நுளைச்சி பரதர் பரத்தியர்**

**நுளையர் நுளைச்சியர் அளவன்**

**அளத்தியர்"** **(மு.வீ.806)**

என்ற நூற்பா உணர்த்தும்.

பாலை நிலத்திற்குரிய மக்கட்பெயராக காளை, விடலை, மீளி, எயினர், எயிற்றியர், மறவர், மறத்தியர் போன்றவற்றைக் குறிப்பிடும். இதனை,

**“காளை விடலை மீளி**

**எயின ரெயிற்றியர் மறவர் மறத்தியர்”** **(மு.வீ.803)**

என்ற நூற்பா உணர்த்தும்.

**சுவாமி நாதத்தில் விளிம்புநிலை மக்கள்**

கி.பி. 19 ஆம் நூற்றாண்டில் தோன்றிய சுவாமிநாதம் என்ற நூலை சுவாமிக்கவிராயர் இயற்றினார். இதில் அக இலக்கணம் நம்பியகப்பொருளைத் தழுவி எழுதப்பட்டது. இதில் திணைநிலை மக்கட்பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

குறிஞ்சி நிலத்திற்குரிய மக்கட்பெயராக சிலம்பன், கொடிச்சி, குறவர், குறத்தியர், ஆகியவற்றை இந்நூல் குறிப்பிடும். இதனை,

**“...... ...... ...... சிலம்பன் கொடிச்சியே குறவன்**

**குறத்தியர்”** **(சு.நா.74)**

என்ற நூற்பா சுட்டும்.

முல்லை நிலத்திற்குரிய மக்கட்பெயராக குறும்பொறை நாடன், மனைவி, இடையர், இடைச்சியர் ஆகியவற்றைக் குறிப்பிடும். இதனை,

**“குறும்பொறை நாடன் மனைவி இடையர்**

**காதல் இடைச்சியர்”** **(சு.நா.76)**

என்ற பகுதி உணர்த்தும்.

மருத நிலத்திற்குரிய மக்கட்பெயராக ஊரன், கிழத்தி, கடையர், கடைச்சியர், வேசையர்கள் போன்றவற்றைக் குறிப்பிடும். இந்நூல் நான்கு

குலத்தார் என்றும் குறிப்பிடுகிறது. இதில் நான்கு குலத்தார் என்று குறிப்பிடப்படுவோர் அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் என்னும் நால்வருணமாவர்.

வேசையர்களை மக்கட்பெயராக, பிற இலக்கண நூல்கள் குறிப்பிடவில்லை. ஆனால் இவர் வேசையர்களை மக்கட் பெயரில் சேர்த்துக் கூறுகிறார். இதனை,

**"…… …… ஊரன் கிழத்தி கடையர்**

**தக்கடைச்சியர் நான்கு குலத்தார் வேசையர்கள்" (சு.நா.77)**

என்ற நூற்பாவால் அறியமுடிகிறது.

நெய்தல் நிலத்திற்குரிய மக்கட்பெயராக சேர்ப்பன், பரத்தி, பரதவர், பரத்தியர் போன்றவற்றைக் குறிப்பிடும். இதனை,

**"…… ……. சேர்ப்பன் பரத்தி பரதவர் பரத்தியர்கள்" (சு.நா.79)**

என்ற நூற்பா அடியால் அறிய முடிகிறது.

பாலை நிலத்திற்குரிய மக்கட் பெயராகிய விடலை, எயிற்றி, மறவர், மறத்தியர் போன்றவர்களைக் குறிப்பிடும். இதனை,

**"…… …… தீவிலை எயிற்றியுடன் மறவர்**

**கொடிய மறத்தியர்" (சு.நா.75)**

என்ற நூற்பா விளக்கும். சுவாமிநாதம் நம்பியகப்பொருள் குறிப்பிடும் மக்களில் உயர்ந்தோரில் இருந்து இரண்டு பெயர்களையும், தாழ்ந்தோரில் இருந்து இரண்டு பெயர்களையும் சேர்த்துத் திணைக்கு நான்கு பெயர்களைக் குறிப்பிட்டுள்ளது.

## நூலடிப்படையில் தலைமக்கட்பெயர் - நிலமக்கட்பெயர்

## தொல்காப்பியம்

| வ.எண் | நிலம் | தலைமக்கட்பெயர் | நிலமக்கட்பெயர் |
|---|---|---|---|
| 1. | குறிஞ்சி | மலைநாடன், வெற்பன். | குறவன், குறத்தி. |
| 2. | முல்லை | குறும்பொறை நாடன். | ஆயர், வேட்டுவர். |
| 3. | மருதம் | ஊரன், மகிழ்நன். | உழவன், உழத்தியர். |
| 4. | நெய்தல் | சேர்ப்பன், துறைவன். | நுளையர், நுளைச்சியர். |
| 5. | பாலை | மீளி, விடலை. | எயினர், எயிற்றியர். |

## இறையனார் அகப்பொருள் (உரையாசிரியர் கருத்து)

| வ.எண் | நிலம் | தலைமக்கட்பெயர் | நிலமக்கட்பெயர் |
|---|---|---|---|
| 1. | குறிஞ்சி | சிலம்பன், வெற்பன், பொருப்பன் கொடிச்சி, குறத்தி. | குறவர், இறவுளர், குன்றவர். |
| 2. | முல்லை | குறும்பொறை நாடன், கிழத்தி, மனைவி. | இடையர், இடைச்சியர், ஆயர், ஆய்ச்சியர். |
| 3. | மருதம் | ஊரன், மகிழ்நன், கிழத்தி, மனைவி. | கடையர், கடைச்சியர், உழவர், உழத்தியர் |
| 4. | நெய்தல் | துறைவன், கொண்கன், சேர்ப்பன், நுளைச்சியர், பரத்தி. | பரதர், பரத்தியர்-, நுளையர்,நுளைச்சியர். |
| 5. | பாலை | மீளி, விடலை, எயிற்றி, பேதை. | எயினர், எயிற்றியர், மறவர், மறத்தியர். |

**வீரசோழியம் (பொதுவான பகுப்புமுறை)**

| வ.எண் | நிலம் | நிலமக்கட்பெயர் |
|---|---|---|
| 1. | குறிஞ்சி | வெற்பன், குன்றுவர் |
| 2. | முல்லை | இடையர், கிழத்தி |
| 3. | மருதம் | ஊரன், கடைச்சியர் |
| 4. | நெய்தல் | கொண்கன், நுளையர் |
| 5. | பாலை | வேடர், விடலை, குறும்பர் |

**நம்பியகப்பொருள்**

| வ.எண் | நிலம் | தலைமக்கட்பெயர் | நிலமக்கட்பெயர் |
|---|---|---|---|
| 1. | குறிஞ்சி | பொருப்பன், வெற்பன், சிலம்பன், குறத்தி, கொடிச்சி. | குறவர், குறத்தியர், கானவர். |
| 2. | முல்லை | குறும்பொறை நாடன், தோன்றல், மனைவி, கிழத்தி. | இடையர், இடைச்சியர், ஆயர், ஆய்ச்சியர். |
| 3. | மருதம் | ஊரன், மகிழ்நன். | உழவர், கடையர், உழத்தியர், கடைச்சியர். |
| 4. | நெய்தல் | சேர்ப்பன், புலம்பன், பரத்தி, நுளைச்சி. | நுளையர், பரதர், நுளைச்சியர், பரத்தியர், அளவர், அளத்தியர். |
| 5. | பாலை | விடலை, காளை, மீளி. | எயினர், எயிற்றியர், மறவர், மறத்தியர். |

## தமிழ்நெறி விளக்கம் (நூற்பா கருத்து)

| வ.எண் | நிலம் | தலைமக்கட்பெயர் | நிலமக்கட்பெயர் |
|---|---|---|---|
| 1. | குறிஞ்சி | வெற்பன் | குறவர் |
| 2. | முல்லை | குறும்பொறை நாடன் | குடவர் |
| 3. | மருதம் | மகுணன் (மகிழ்நன்) | உழவர் |
| 4. | நெய்தல் | சேர்ப்பன் | பரதவர் |
| 5. | பாலை | விடலை | எயினர் |

## (உரையாசிரியர் கருத்து)

| வ.எண் | நிலம் | பிறமக்கட்பெயர் |
|---|---|---|
| 1. | குறிஞ்சி | பொருப்பன், மலையன், சிலம்பன், கொடிச்சி, குறத்தி, குறவர், இறவுளர். |
| 2. | முல்லை | அண்ணல், மீளி, இடைச்சியர், கோவலர், இடையர், பொதுவர், ஆயர். |
| 3. | மருதம் | ஊரன், கிழத்தி, மனைவி, கடையர், கடைச்சியர். |
| 4. | நெய்தல் | கொண்கன், துறைவன், துறைவி, பரத்தி, நுளையர், நுளைச்சியர். |
| 5. | பாலை | காளை, விடலை, எயினர், எயிற்றி, மறவர். |

## தொன்னூல் விளக்கம்

| வ.எண் | நிலம் | தலைமக்கட்பெயர் | நிலமக்கட்பெயர் |
|---|---|---|---|
| 1. | குறிஞ்சி | பொருப்பன், வெற்பன், சிலம்பன், குறத்தி, கொடிச்சி. | குறவர், கானவர், குறத்தியர். |
| 2. | முல்லை | குறும்பொறை நாடன், தோன்றல், மனைவி, கிழத்தி. | இடையர், இடைச்சியர், ஆயர், ஆய்ச்சியர். |
| 3. | மருதம் | ஊரன், கிழவன், கிழத்தி, மனைவி. | உழவர், உழத்தியர், கடையர், கடைச்சியர். |
| 4. | நெய்தல் | சேர்ப்பன், புலம்பன், பரத்தி, நுளைச்சி. | பரதர், பரத்தியர், நுளையர், நுளைச்சியர், அளவர், அளத்தியர். |
| 5. | பாலை | காளை, விடலை, மீளி, எயிற்றி. | எயினர், எயிற்றியர், மறவர், மறத்தியர். |

## முத்து வீரியம்

இந்நூல் பொதுவாக நில மக்கட்பெயராகவே பகுத்துள்ளது.

| வ.எண் | நிலம் | நிலமக்கட்பெயர் |
|---|---|---|
| 1. | குறிஞ்சி | வெற்பன், சிலம்பன், குறத்தி, கொடிச்சி, குறவர், கானவர், குறத்தியர். |
| 2. | முல்லை | குறும்பொறை நாடன், தோன்றல், மனைவி, கிழத்தி, இடையர், இடைச்சியர், ஆயர், ஆய்ச்சியர். |
| 3. | மருதம் | ஊரன், கிழவன், மனைவி, கிழத்தி, உழவர், கடையர், உழத்தியர். |
| 4. | நெய்தல் | சேர்ப்பன், புலம்பன், பரத்தி, நுளைச்சி, பரதவர், பரத்தியர், நுளையர், நுளைச்சியர், அளவர்,அளத்தியர். |
| 5. | பாலை | காளை, விடலை, மீளி, எயினர், எயிற்றியர், மறவர், மறத்தியர். |

## சுவாமிநாதம்

| வ.எண் | நிலம் | திணைநிலை மக்கட்பெயர் |
|---|---|---|
| 1. | குறிஞ்சி | சிலம்பன், கொடிச்சி, குறவர், குறத்தியர். |
| 2. | முல்லை | குறும்பொறை நாடன், மனைவி, இடையர், இடைச்சியர். |
| 3. | மருதம் | ஊரன், கிழத்தி, கடையர், கடைச்சியர், வேசையர்கள். |
| 4. | நெய்தல் | சேர்ப்பன், பரத்தி, பரதவர், பரத்தியர். |
| 5. | பாலை | எயிற்றி, மறவர், மறத்தியர். |

### தொகுப்புரை

- தொல்காப்பியம், இறையனார் அகப்பொருள், வீரசோழியம், நம்பியகப்பொருள், தமிழ்நெறி விளக்கம், தொன்னூல் விளக்கம், முத்துவீரியம், சுவாமிநாதம் ஆகிய நூல்களில் விளிம்புநிலை மக்கள் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன.
- தொல்காப்பியத்தில் கூத்தர், பாணர், பொருநர், விறலி ஆகிய கலைஞர்கள் குறிக்கப்பெற்றுள்ளனர். அவர்கள் சங்க காலத்தில் நாடோடிகளாக வாழ்ந்துள்ளனர்.
- தொல்காப்பியர் திணை அடிப்படையில் மக்களைப் பாகுபடுத்துகிறார்.
- முல்லை நிலத்திற்குரிய மக்களை ஆயர், வேட்டுவர் என நூற்பாக்களில் வெளிப்படையாகக் குறித்துள்ளனர்.
- இளம்பூரணர் மக்கட் பெயரில் ஆயர், வேட்டுவரையும், தலைமக்கட் பெயரில் குறும்பொறை நாடனையும் குறிப்பிடுகிறார்.

- நச்சினார்க்கினியர், கோவலர், இடையர், ஆயர், பொதுவர், இடைச்சியர், கோவித்தியர், ஆய்ச்சியர், பொதுவியர் போன்ற பெயர்களைக் குறிப்பிடுகிறார்.

- நச்சினார்க்கினியர் உரிப்பொருட்குரிய மக்கட் பெயர்களைக் கூறும்போது அண்ணல், தோன்றல், குறும்பொறை, நாடன், மனைவி போன்ற பெயர்களைக் குறிப்பிடுகிறார்.

- நெய்தல் திணைக்குரிய மக்கட் பெயர்களை இளம்பூரணர், நுளையர், நுளைச்சியர், சேர்ப்பன், துறைவன், கொங்கன் எனக் குறிப்பிடுகிறார். நச்சினார்க்கினியர், நுளையர், திமிலர், பரதவர், நுளைத்தியர், பரத்தியர் என்ற பெயர்களைக் குறிப்பிடுகிறார். உரிப்பொருட்குரிய மக்கட் பெயர்களை, கொண்கன், துறைவன், சேர்ப்பன், மெல்லப்புலம்பன் எனக் குறிப்பிடுகிறார்.

- நச்சினார்க்கினியர் பாலை நிலத்திற்குரிய மக்கட்பெயர்களாக எயினர், எயிற்றியரையும் தலைமக்கட்குரியவராக மீளி, விடலையையும் கூறுவர். கி.பி.8ம் நூற்றாண்டில் தோன்றிய நம்பியகப்பொருளில் திணைநில மக்கட் பெயர்களை தலைமகன் பெயர், தலைமகள் பெயர், மக்கட்பெயர் எனப் பாகுபடுத்தப்பட்டுள்ளது.

- குறிஞ்சி நிலத்துக்குரிய தலைமகன் பெயர் குறும்பொறை நாடன், தலைமகள் பெயர் கிழத்தி, மனைவி என நம்பியகப்பொருளில் குறிக்கப்பட்டுள்ளன.

- மக்கட் பெயராக நக்கீரர், இடையர், இடைச்சியர், ஆயர், ஆய்ச்சியர் போன்றோரையும் குறிப்பிடுகிறார்.
- கிழத்தி, மனைவி என்பன மருத நிலத்துத் தலைமக்கட்குரிய பெயர்.
- மருதநிலத்திற்குரிய தலைமகன் பெயராக ஊரன், மகிழ்நன் போன்றோரையும் தலைமகள் பெயராக கிழத்தி, மனைவி போன்றோரையும் குறிப்பிடுவர்.
- மக்கட்பெயராக கடையர், கடைச்சியர், உழவர், உழத்தியர் போன்றோரையும் குறிப்பிடுகிறார்.
- நெய்தல் நிலத் தலைமகன் பெயராகத் துறைவன், கொண்கன், சேர்ப்பன் போன்றவர்களையும் குறிப்பிடுகிறார்.
- தலைமகன் பெயராக நுளைச்சியர், பரத்தியர் போன்றோரையும், மக்கட்பெயராக பரதர், பரத்தியர், நுளையர், நுளைச்சியர் போன்றவர்களையும் குறிப்பிடுகிறார்.
- பாலை நிலத்திற்குரிய தலைமகன் பெயராக மீளி விடலையும், தலைமகள் பெயரில் எயிற்றி, பேதையையும், மக்கட்பெயரில் எயினர், எயிற்றியர், மறவர், மறத்தியர் போன்றவர்களையும் இந்நிலத்திற்குரிய மக்களாகக் குறிப்பிடுவர்.
- கி.பி.11 ஆம் நூற்றாண்டில் தோன்றிய வீரசோழியத்தின் ஆசிரியர் புத்தமித்தரனார்.
- இவர் குறிஞ்சி நிலத்திற்குரிய மக்கட் பெயர்களாக வெற்பன், குன்றுவர் என்ற பெயர்களையும் குறிப்பிடுகிறார்.

❖ முல்லை நிலத்திற்குரிய மக்கட்பெயர்களாக இடையர், கிழத்தி என்ற பெயர்களையும், மருதநிலத்திற்குரிய மக்கட் பெயர்களாக ஊரன், கடைச்சியர் என்ற பெயர்களையும் குறிப்பிடுகிறார்.

❖ நெய்தல் நிலத்திற்குரிய மக்கட்பெயர்களாக கொண்கன், நுளையர் என்ற பெயர்களையும், பாலை நிலத்திற்குரிய மக்கட் பெயர்களாக வேடர், விடலை, குறும்பர் என்ற பெயர்களையும் புத்தமித்தரனார் குறிப்பிடுகிறார்.

❖ கி.பி.12 ஆம் நூற்றாண்டில் தோன்றிய நம்பியகப்பொருளை நாற்கவிராச நம்பி இயற்றியுள்ளார். இவர் விளிம்புநிலை மக்கட் பெயர் பற்றி குறிப்பிடுகிறார்.

❖ உயர்ந்த மக்களாக பொருப்பன், வெற்பன், சிலம்பன், குறத்தி, கொடிச்சி போன்றவர்களையும், தாழ்ந்த மக்களாக குறவர், கானவர், குறத்தியர் ஆகியோரையும் குறிப்பிடுவர்.

❖ முல்லை நிலத்திற்குரிய உயர்ந்தோராக குறும்பொறைநாடன், தோன்றல், மனைவி, கிழத்தி போன்றவர்களையும் தாழ்ந்தோராக இடையர், இடைச்சியர், ஆயர், ஆய்ச்சியர் போன்றவர்களையும் கூறுவர்.

❖ மருதநில மக்கட்பெயர்களில் உயர்ந்தவர்களாக ஊரன், மகிழ்நன், கிழத்தி, மனைவி போன்றவர்களையும், தாழ்ந்தவர்களாக, உழவர், உழத்தியர், கடையர், கடைச்சியர் போன்றவர்களையும் குறிப்பிடுவர்.

- நெய்தலாகிய மக்களில் உயர்ந்தோராக சேர்ப்பன், புலம்பன், பரத்தி, நுளைச்சி போன்றோரையும், தாழ்ந்தோராக, நுளையர், நுளைச்சியர், பரதவர், பரத்தியர், அளவர், அளத்தியர் போன்றோரையும் குறிப்பிடுவர்.

- பாலை நிலத்திற்குரிய மக்களில், உயர்ந்தோராக விடலை, காளை, மீளி, எயிற்றி போன்றவர்களையும், தாழ்ந்தோராக மறவர், எயினர், எயிற்றியர், மறத்தியர் போன்றோரையும் குறிப்பிடுகின்றார்.

- தமிழ்நெறி விளக்கத்தில் விளிம்புநிலை மக்கள், கி.பி.12 ஆம் நூற்றாண்டில் தோன்றியது. மக்கட்பெயர்களை தலைமகன் பெயர், அந்நிலத்து வாழ்வார் பெயர் எனப் பகுத்துப் பெயர்களை வகைப்படுத்துகிறது.

- தலைமக்கட்பெயரும், நிலமக்கட்பெயரும் குறிப்பிட்டுள்ளனர்.

- தமிழ்நெறி விளக்கமானது குறிஞ்சி நிலத்தின் தலைமகன் பெயராக வெற்பனையும், அந்நிலத்து வாழ்வார் பெயரில் குறவரையும் குறிப்பிடும்.

- முல்லை நிலத்தின் தலைமகன் பெயராக குறும்பொறைநாடனையும், அந்நிலத்து வாழ்வார் பெயராக குடவரையும் குறிப்பிடுவர்.

- மருதநிலத்தின் தலைமகன் பெயரில் மகுணன் என்ற பெயரையும், அந்நிலத்து வாழ்வார் பெயரில் உழவர் என்ற பெயரையும் குறிப்பிடுவர்.

- நெய்தல்நிலத் தலைமகன் பெயரில் சேர்ப்பனையும், அந்நிலத்து வாழ்வார் பெயரில் பரதவரையும் இந்நூல் குறிப்பிடும்.

- பாலைநிலத் தலைவன் பெயரில் விடலையையும், எயினரையும் இந்நூல் குறிப்பிடுகிறது.

- தொன்னூல் விளக்கத்தில் விளிம்புநிலை மக்கள் பற்றிய செய்தியானது இடம்பெற்றுள்ளது.
- குறிஞ்சி நிலத்திற்குரிய மக்கட் பெயர்களாக பொருப்பன், வெற்பன், சிலம்பன், குறத்தி, கொடிச்சி போன்றோர் குறிப்பிடப்படுகின்றனர்.
- முல்லை நிலத்திற்குரிய தலைமக்களாக, குறும்பொறைநாடன், தோன்றல், மனைவி, கிழத்தி போன்றோரையும் குடிமக்களாக இடையர், இடைச்சியர், ஆயர் போன்றோரையும் குறிப்பிடுகின்றார்.
- மருதநிலத்திற்குரிய தலைமக்களாக ஊரன், கிழவன், கிழத்தி, மனைவி போன்றோரையும், உழவர், உழத்தியர், கடையர், கடைச்சியர் போன்றோரையும் குறிப்பிடுகின்றனர்.
- நெய்தல் நிலத்திற்குரிய தலைமக்களாக சேர்ப்பன், புலம்பன், பரத்தி, நுளைச்சி போன்றோரையும் குறிப்பிடுவர்.
- பாலை நிலத்திற்குரிய தலைமக்களாக, காளை, விடலை, மீளி, எயிற்றி போன்றவர்களைக் குறிப்பிடுவர்.
- முத்துவீரியமானது கி.பி.19 ஆம் நூற்றாண்டில் தோன்றியது. இதன் ஆசிரியர் முத்துவீர உபாத்தியாயர்.
- குறிஞ்சி நிலத்திற்குரிய மக்கட் பெயராக வெற்பன், சிலம்பன், குறத்தி, கொடிச்சி, குறவர், கானவர், குறத்தியர் போன்றவர்களைக் குறிப்பிடுவர்.
- முல்லை நிலத்திற்குரிய மக்கட்பெயராக குறும்பொறைநாடன், தோன்றல், மனைவி, கிழத்தி, இடையர், இடைச்சியர், ஆயர், ஆய்ச்சியர் போன்றவர்களைக் குறிப்பிடுவர்.

- ❖ மருதநிலத்திற்குரிய மக்கட்பெயராக ஊரன், கிழவன், மனைவி, கிழத்தி, உழவர், உழத்தியர் ஆகியோர் குறிப்பிடுகின்றனர்.
- ❖ நெய்தல் நிலத்திற்குரிய மக்கட்பெயராக, சேர்ப்பன், புலம்பன், பரத்தி, நுளைச்சி, பரதர், பரத்தியர், நுளையர், நுளைச்சியர், அளவர், அளத்தியர் போன்றவர்களைக் குறிப்பிடுவர்.
- ❖ பாலை நிலத்திற்குரிய மக்கட்பெயராக காளை, விடலை, மீளி, எயினர், எயிற்றியர், மறவர், மறத்தியர் போன்றவற்றைக் குறிப்பிடுவர்.
- ❖ சுவாமிநாதமானது கி.பி.19 ஆம் நூற்றாண்டில் தோன்றியது. இதனை சுவாமிக் கவிராயர் இயற்றியுள்ளார்.
- ❖ குறிஞ்சி நிலத்திற்குரிய மக்கட்பெயராக சிலம்பன், கொடிச்சி, குறவர், குறத்தியர் ஆகியவற்றை இந்நூல் குறிப்பிடுகிறது.
- ❖ முல்லை நிலத்திற்குரிய மக்கட்பெயராக குறும்பொறைநாடன், மனைவி, இடையர், இடைச்சியர் ஆகியவற்றைக் குறிப்பிடுகிறது.
- ❖ மருத நிலத்திற்குரிய மக்கட்பெயராக ஊரன், கிழத்தி, கடையர், கடைச்சியர், வேசையர்கள் போன்றவர்களைக் குறிப்பிடுகிறது.
- ❖ நெய்தல் நிலத்திற்குரிய மக்கட் பெயராக சேர்ப்பன், பரத்தி, பரதவர், பரத்தியர் ஆகியோர் குறிப்பிடப்படுவர்.
- ❖ பாலை நிலத்திற்குரிய மக்கட் பெயராக விடலை, எயிற்றி, மறவர், மறத்தியர் போன்றவர்களைக் குறிப்பிடுவர்.

## சான்றெண் விளக்கம்

1. தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணர் உரை, ப.193.
2. இளங்குமரனார், பாணர், ப.14.
3. தொல்காப்பியம், அகத்திணையியல் உரைவளம், ப.222.
4. மேலது, ப.224.
5. மேலது, ப.225.
6. மேலது, ப.222.
7. மேலது, ப.224.
8. மேலது, ப.225.
9. மேலது, ப.222.
10. மேலது, ப.224.
11. மேலது, ப.225.
12. மேலது, ப.222.
13. மேலது, ப.224.
14. மேலது, ப.225.
15. மேலது, ப.222.
16. நக்கீரர் உரை, இறையனார் அகப்பொருள், பக்.19-20.
17. மேலது, பக்.21-22.
18. மேலது, பக்.22-23.
19. மேலது, ப.20.
20. மேலது, ப.21.

21. உ.வே.சா(ப.ஆ), தமிழ்நெறி விளக்கம், ப.8.

22. மேலது, ப.8.

23. மேலது, ப.8.

24. மேலது, ப.8.

25. மேலது, ப.8.

## இயல்-3

## சங்க அக இலக்கியங்களில் விளிம்புநிலை மக்களின் வாழ்வியல்

### முன்னுரை

இலக்கியங்கள் மக்களின் வாழ்க்கையை விளக்கும் காலக் கண்ணாடியாகத் திகழ்கின்றன. சங்க காலத்தில் தோன்றிய பாட்டும், தொகையும் சங்ககால மக்களின் வாழ்க்கை நிலையைப் பிரதிபலிப்பனவாக உள்ளன. சங்ககால மக்கள் தாம் வாழும் நிலப்பகுதிக்கேற்ப வாழ்க்கைச் சூழலை அமைத்துக்கொண்டனர். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐவகைநிலப் பாகுபாடுகளிலும் ஒவ்வொரு வகையான வாழ்க்கை முறையைக் காணமுடிகின்றது. எல்லா நிலங்களிலும் விளிம்புநிலை மக்கள் வாழ்ந்துள்ளனர். கூத்தர், கோடியர், வயிரியர், பாணர், பொருநர், ஆடல்மகளிர், பாடினி, குறவன், புனவன், அகவன் மகளிர், துணங்கையர், கட்டுவிச்சி, யானைப்பாகர், தேர்ப்பாகன், ஊர்க்காப்பாளர், காலங்கணிப்போர், பள்ளியறைக்காவலர், புலைத்தி, தச்சன், கொல்லன், உழவர், உழத்தியர், அரிநர், களைஞர், களமர், பரத்தையர், பருத்திப்பெண்டிர், பரதவர், உமணர், வலைஞர், கள்ளடுமகளிர், கொண்டிமகளிர், எயினர், எயிற்றியர், ஆறலைக்கள்வர், கிணறு தோண்டுபவர், மறவர், காரோடன், கலைக்கூத்தாடுபவர்கள் ஆகிய முப்பத்து ஒன்பது பேர் சங்க காலத்தில் விளிம்புநிலை மக்களாக வாழ்ந்துள்ளனர். அவர்கள் குறித்த வாழ்வியற் பதிவுகளைச் சங்க அக இலக்கியங்கள் திறம்படப் புலப்படுத்தியுள்ளன. அவற்றை ஆராய்ந்து கூறுவதே இவ்வியலின் நோக்கமாகும்.

**கூத்தர்**

கூத்தர்கள் கோடியர், வயிரியர், கண்ணுளர் எனப் பல பெயர்களில் சங்க காலத்தில் அழைக்கப் பெற்றுள்ளனர். அதனை அதியன் விண்ணத்தனார், குடவாயிற்கிரத்தனார்,

**"இரும்பேர் ஒக்கல் கோடியர்" (அகநா.301)**

என்ற அடிகளால் நவிலுவர். 'நடனமகள் விறலி, கூத்தி, ஆடுகளமகள், ஆடுமகள் எனவும் அங்ஙனமே நடனமாடுபவன் கூத்தன், ஆடுமகன் எனப்பட்டான்' என்று டாக்டர் ம.இராசமாணிக்கனார் குறிப்பிடுவார்.[1] இக்கருத்தால் கூத்தாடுபவர் கூத்தர் என்பது புலனாகிறது. சங்க காலத்தில் கூத்தர் தொகை பெருகியிருந்துள்ளது. அவர்கள் குழுவினராக இணைந்து கூத்தினை ஒரு தொழிலாக நிகழ்த்தியுள்ளனர். அவர்களது குழுக்கள் பெருங்குழுக்கள் என்றே இலக்கியங்களில் சுட்டப்பட்டுள்ளன. அதனை இரும்பேரொக்கல் (அகநா.301) என அகநானூறு குறிக்கும்.

**கோடியர்**

கோடு என்பது சங்கு ஆகும். சங்கு ஊதி இசையெழுப்புவோரைக் கோடியர் என்பர். அவர்களின் இசைத்திறனைக் குடவாயிற்கீரத்தனார், மாமூலனார்,

**"சுரஞ்செல் கோடியர் கதுமென இசைக்கும்**

**நரம்பொடு கொள்ளும் அத்தம்" (நற்.212:3-4)**

**"........................ முனாஅது**

**அருஞ்சுரக் கவலை யசைஇய கோடியர்**

**பெருங்கடல் மீமிசை இயமெழுந்தாங்கு" (அகம்.359:7-9)**

என்ற அடிகளால் சுட்டுவர். இவர்கள் பிறரின் உள்ளக் கருத்துக்களைக் குறிப்பால் அறியும் வல்லமை பெற்றவர்களாவர். அவர்கள் ஊடல் தீர்க்கும் வாயில்களாகவும் செயற்பட்டுள்ளனர். “பல்வேறு இசைக்கருவிகளை வாசிக்கும் ஆற்றல் பெற்றிருந்த இக்கலைஞர் அக்கருவிகள் அனைத்தையும் ஒரு பெரிய பையொன்றில் இட்டு ஒருசேரக் கட்டித் தூக்கிச் சென்றமையால் கலப்பையர் என்னும் பொருள்பட அழைக்கப்பட்டனர்”[2] (அகநா.301). இவர்தம் கலப்பையில் முழவு, ஆகுளி, கஞ்சதாளம், கொம்பு, நெடுவங்கியம், குறுந்தூம்பு, குழல், தட்டை, எல்லரி, பதலை முதலிய இசைக்கருவிகள் இருந்தன. அதனால் பல்லியக்கோடியர் என்றும் இவர்கள் அழைக்கப்பட்டனர்.

**வயிரியர்**

வயிரியர் இசைக் கலைஞர்களாவர். கோடியர் போலவே வயிரியர்களும் விழாக்காலங்களில் இசைபாடி வாழ்ந்தனர். தாம் இசைத்த இசைக்கருவிகளை எல்லாம் விழா முடித்து பயணப்படும் போது ஒருசேரப் பையிலிட்டுக் கட்டி அதைக் கழையில் தொங்கவிட்டு எடுத்துச் சென்றனர். அதனாலேயே இவர்களும் கலப்பையர் என்றழைக்கப்பட்டனர். இவர்தம் யாழை இளையர் சுமந்தனர். உயிர் என்பது மூங்கிலைக் குறிக்கும் சொல்லாகும். மூங்கிலால் செய்யப்பட்ட கருவி வயிர் என்று அழைக்கப்பட்டது. அதனை மாறோக்கத்து நப்பசலையார்,

**“வளியெறி வயிர்” (நற்.304:3)**

என்ற பாடலடியால் உறுதிப்படுத்துவர். வயரியர் கொம்பினை இனிமையாக ஒலித்ததைக் காவட்டனார்,

**“கோடு முற்றினந்தவர் பாடு விறந்தியல**

**ஆடுகள வயிரின் இனிய ஆலிப்**

**பசும்புற மென்சீர் ஓசிய விசும்புகந்து”** **(அகம்.378:8-10)**

என்ற அடிகளால் சுட்டுவர். கோடியர் கொம்பினை இசைத்த தருணத்தில் யாழும், முழவும் சேர்ந்திருந்துள்ளன என்ற குறிப்பும் இதனால் புலனாகிறது. வயிரியர் ஊர்தோறும் சென்று மன்றங்களை அடைந்து தம் வரவை அறிவிக்கும் வகையில் இசைக்கருவிகளை இசைத்துப்பின் தெருக்களில் உள்ள வீடுகளின் புறத்தே நின்று பாடி உணவும் பொருளும் பெற்றதை அகநானூறு குறிப்பிடுகின்றது.

**பாணர்**

பாணர் நாடுதோறும் எல்லா நிலங்களிலும் சென்று கலை நிகழ்த்தும் இயல்பினராயினும், மருத நிலத்திற்குரியவர்கள் ஆவர். பாணர் காவிரியாற்றங்கரையில் குடியாக வாழ்வதும், மருதநிலக் கழிகளில் தூண்டில் கொண்டு மீன் பிடிப்பதும் இதற்குச் சான்றாகும்.

தலைவனுக்காகத் தலைவியிடமும், பரத்தையரிடமும் வாயிலாகப் பாணர் செல்வர். தலைவன் தன் இல்லற நிகழ்வுகளைப் பகிர்ந்து கொள்ளும் அளவுக்குப் பாணர் நட்புடையவராவர். பாணரின் பண்புகளையும், செயல்களையும் அகப்பாடல்கள் விளக்கமாக எடுத்துரைக்கின்றது. இவர்கள் சீறியாழைக் கையில் பெற்றிருந்ததைப் பேயனார்,

**“கைவல் சீறியாழ்ப்பாண”** **(ஐங்.472:1)**

என்ற அடிகளால் விளக்குவர்.

தலைவன் பிரிந்த நிலையில் தலைவிக்குத் துணையாகப் பாணன் இருந்துள்ளதைப் பேயனார்,

**“பனிமலர் நெடுங்கண் பசலை பாய**

**துனிமலி துயரமொ டரும்படர் உழப்போள்**

**கையறு நெஞ்சிற் குயவுத்துணையாகச்**

**சிறுவரைத் தங்குவை”** (ஐங்.477:1-4)

என்ற அடிகளால் சுட்டுவர். தலைவிக்குத் துணையாகப் பாணனைத் தலைவன் அனுப்பி இருப்பதும், பாணன் நம்பகத் தன்மையுடன் செயல்பட்டதையும் இதனால் உணரமுடிகிறது.

பாணன் தலைவன் தங்கியிருந்த பாசறைக்கண் சென்று அவனை இடித்துரைத்துள்ளதைப் பேயனார்,

**“நினக்கியாம் பாணருமல்லே மெமக்கு**

**நீயுங் குருசிலை யல்லை மாதோ**

**நின்வெங் காதலி தன்மனைப் புலம்பி**

**யீரித ழுண்க ணுகுத்த**

**பூசல் கேட்டு மருளா தோயே”** (ஐங்.480:1-5)

என்ற பாடலடிகளால் தெளிவுபடுத்துவர். பாணன் தலைவிக்குச் சார்பாளனாகவும், கொடுமையாளனாகவும் திகழ்வான். தலைவன் பொருள் காரணமாகவோ, பிறவினை காரணமாகவோப் பிரிந்து சென்ற நிலையில் தலைவிக்காகத் தலைவனிடம் தூது செல்வான். இக்கால கட்டங்களில் பாணர் உறவுநிலை நெருக்கமாக அமைந்துள்ளதை அறியமுடிகிறது.

பாணனைத் தலைவி ‘பேரன்பினன்’ எனப் புகழ்ந்து பேசியுள்ளாள். அதனைப் பேயனார்,

**“தொடிநிலை கலங்க வாடிய தோளும்**

**வடிநல னிழந்தவென் கண்ணு நோக்கிப்**

**பெரிது புலம்பினனே சீறியாழ்ப் பாணன்**

**…………………………………………….**

**தம்மோன் போலான் பேரன்பினனே”** **(ஐங்.475:1-5)**

என்ற அடிகளால் உணர்த்துவர். தலைமகன் வரவைத் தனக்கு உணர்த்திய பாணனுக்குத் தலைமகள் பாடலிபுத்திரத்தைத் தருகிறேன் என அகமகிழ்ந்து உரைப்பதைப்படுமரத்து மோசிகீரனார்,

**“நீ கண்டனையோ கண்டார்க்கேட்டனையோ**

**…………………………………………………..**

**பொன்மலி பாடலி பெறீஇயர்**

**யார்வாய்க் கேட்டனை காதலர் வரவே”** **(குறுந்.75:1-5)**

என்ற அடிகளால் புலப்படுத்துவர். வாயில் மறுத்த நிலையில் தலைவி பாணனைப் பழித்துப் பேசுகிறாள். இதனைப் புலவர் அம்மூவனார்,

**“நாணிலை மன்ற பாண”** **(ஐங்.136:1)**

**“பண்பிலை மன்ற பாண”** **(ஐங்.138:1)**

என்ற பாடலடியால் சுட்டுவர். பண்பில்லாதவனாகவும், நாணமில்லாதவனாகவும் பாணன் ஈண்டு குறிக்கப்பெறுகிறான். அவ்வாறு அவன் குறிக்கப்பெறுவதற்கு அவன் செயலே முதற்காரணமாய் அமைந்தது எனலாம். அதனை மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார்,

**“வதுவை நாளணிப் புதுவோர்ப் புணரிய**

**பரிவொடு வரூஉம் பாணன்”** **(அகநா.56:9-10)**

என்ற அடிகளால் விளக்குவர். தலைவனை அழைத்துச் சென்று பரத்தையிடம் சேர்ப்பவனாகப் பாணன் விளங்கினான் என்பது இதன் கருத்து.

பாணன் பொய் பேசுபவனாகக் குறிக்கப்பெறுகிறான். அதனை ஓரம்போகியார்,

**“ஒருநின் பாணன் பொய்யனாக**

**உள்ள பாணரெல்லாம்**

**கள்வர் போல்வர் நீ யகன்றிசி னோர்க்கே”** **(குறுந்.127:4-6)**

என்ற அடிகளால் நவிலுவர். பாணனுடைய இயல்பினை விழாவினை அறிவிக்கும் குயவரிடம் சொல்லி பிறர்க்கு அறிவிக்கச் செய்துள்ளதை கூடலூர்ப் பல்கண்ணனார்,

**“கைகவர் நரம்பிற் பனுவற் பாணன்**

**செய்த அல்லல் …………………..**

**பொய்பொதி கொடுஞ்சொல்”** **(நற்.200:8-11)**

என்ற அடிகளால் சுட்டுவர்.

**பொருநர்**

வேடமிட்டு ஆடுபவர்களே பொருநர் என்றழைக்கப்பட்டனர். அவர்கள் சில நிகழ்வுகளை வேடம் புனைந்தாடி பார்வையாளர் முன்னிலையில் வெளிப்படுத்துவர். அவர்களது வாழ்வு வறுமையில் இருந்துள்ளது. இருப்பினும், அவர்களது நோக்கம் பிறரை மகிழ்விப்பதிலே அமைந்திருந்தது. மன்னர்களின்

போரின்போது நடித்தும், பாடியும், ஆடியும் இசைக்கருவிகளை வாசித்தும் கலை நிகழ்ச்சிகளை நடத்துபவர்களே பொருநராவர். இவர்கள் கயிற்றால் கட்டப்பட்ட தோளிசைக் கருவிகளைத் தோளில் கட்டிக் கொண்டு ஆடியுள்ளனர். கிணை எனும் இசைக்கருவியைக் கலை நுட்பத்துடன் மீட்டுவதில் வல்லவர்கள். அரசனைப் புகழ்ந்து பாடி அவனிடமிருந்து கொம்புடைக் களிரையும், கன்றையும், பிடியையும் பொன்னாலாகிய தாமரையையும் பெறுவார்கள். பெற்ற பரிசுப் பொருட்களைப் பிறரிடம் கொடுத்துத் தமக்குத் தேவையான பொருட்களை அவர்களிடமிருந்து பண்டமாற்று முறையில் பெற்று வாழ்க்கை நடத்துபவர். பொருநர் பறையினை இயக்கும் கலைஞராவர். அரசவைக்குச் சென்று இசைக்கும் பெருமையுடையவர். அதனைப் பரணர்,

**“அவைபுகு பொருநர் பறையின் ஆனாது”** **(அகநா.76:5)**

என்ற அடிகளால் விளக்குவர். பொருநர் யாழிசைத்துப் பாடுவதுடன் கண் அகன்ற தடாரியையும் கொட்டி விடியற்காலையில் பாடியுள்ளனர். அவர்கள் ஆறலைக் கள்வரையும், மனம் திருந்தச் செய்யும் ஆற்றலுடையவர்களாக விளங்கியுள்ளனர். அவர்களைப் பரணர்,

**“கச்சினன் கழலினன் தேந்தார் மார்பினன்**
**வகையமைப் பொலிந்த வனப்பமை தெரியல்**
**கரியலம் பொருநன் ……….”** **(அகநா.76:7-9)**

என்ற அடிகளால் விளக்குவர்.

**ஆடல் மகளிர்**

ஆடுமகளானவள், குழலிசை இசைக்க ஆடுபவள். நெடு வங்கியம், யாழ் முதலிய பலவாக்கியங்கள் ஒலிக்க ஆடுபவள் 'ஆடுமகள்' ஆவாள். இதனைக் கபிலர்,

**"ஆடமைக் குயின்ற அவிர்துளை மருங்கில்**
**கோடை யவ்வளி குழலிசை யாகப்**
**பாடின் அருவிப் பனிநீர் இன்னிசைத்**
**தோடமை முழவின் துதைகுரலாகக்**
**கணக்கலை இகுக்கும் கடுங்குரல் தூம்பொடு**
**மலைப்பூஞ் சாரல் வண்டியாழாக**
**இன்பல் இமிழிசை கேட்டுக் கலிசிறந்து**
**மந்தி நல்லவை மருள்வன நோக்கக்**
**கழைவளர் அடுக்கத் தியலியா டும்மயில்**
**நனவுப்புகு விறலியில் தோன்றும் நாடன்"** **(அகநா.82:1-10)**

என்ற அடிகளால் உணர்த்துவர். ஆடுமகள் 'அரிக்கோல்' என்னும் பறை ஒலிப்ப ஆடியுள்ளதைக் காவன் முல்லைப்பூதரத்தனார்,

**"........................ உழிஞ்சில்**
**தாறுசினை விளைந்த நெற்றம் ஆடுமகள்**
**அரிக்கோற் பறையின் ஐயென வொலிக்கும்"** **(அகம்.151:8-10)**

என்ற பாடலடிகளால் சுட்டுவர். இளமை வாய்ந்த கண்களையும், நறுமணம் மிக்கக் கூந்தலையும், பருத்த தோள்களையும், வரிசைமிக்கப் பற்களையும், திரண்டு நெருங்கிய துடைகளையும் உடையவள் விறலி. அதனை,

"மடக்கண் தகரக் கூந்தல் பணைத்தோள்

வார்தவால் எயிற்றுச் சேர்ந்து செறிகுறங்கின்

பிணையல் அம்தழைத் தைஇத் துணையிலள்

விழவுக்களம் பொலிய வந்து நின்றனளே" (நற்.170:1-4)

என்ற அடிகளால் நவிலுவர். ஆடல் மகளிர் தம் மிடற்றொலியை யாழ் இசையுடன் கூட்டுதற்கேற்பக் குளிர்ச்சியால் நிலை குலைந்த நரம்பைத் தம்முகை வெப்பத்தே தடவி நிலை நிறுத்தினர் என்ற செய்தியும் பெறப்படுகிறது. இதனை நக்கீரர்,

"ஆடல் மகளிர் பாடல் கொளப் புணர்மார்

தண்மையில் திரிந்த இன்குரல் தீந்தொடை

கொம்மை வருமுலை வெம்மையில் தடைஇக்

கருங்கோட்டுச் சீறியாழ் பண்ணுமுறை நிறுப்ப"

(நெடுநல்.67-70)

என்ற அடிகளால் புலப்படுத்துவர். மயிற்தோகை விரித்து ஆடுவது விறலி ஆடுவதுபோல் உள்ளது என்பதை அஞ்சியத்தை மகள் நாகையார்,

"முடவுமுதிர் பலவின் குடமருள் பெரும்பழம்

பல்கிளைத் தலைவன் கல்லாக் கடுவன்

பாடிமி ழருவிப் பாறை மருங்கின்

ஆடுமயில் முன்னதாகக் கோடியர்

விழவு கொண் மூதூர் விறலி பின்றை

முடிவன் போல வகைப்படத் தழீஇ" (அகநா.352)

என்ற அடிகளால் புலப்படுத்துவர். விறலி விழாக்காலங்களில் ஆடியுள்ளது இதனால் அறியமுடிகிறது. விறலி முறைப்படி ஆடலை நிகழ்த்தியதை ஓரம்போகியார்,

**“முழவு முகம் புலர்ந்து முறையின் ஆடிய**

**விழவு யுழி களத்த பாவை போல”** **(நற்:360:1-2)**

என்ற அடிகளால் சுட்டுவர்.

**பாடினி**

பாணரின் துணைவியர் ‘பாடினி’ என அழைக்கப்படுவாள். அக இலக்கியங்களில் பாண் மகளானவள் மிகவும் விளிம்பு நிலையில் காணப்பட்டுள்ளாள். பாணன் வறுமையின் காரணமாக மீன்பிடித்தொழிலை மேற்கொண்டுள்ளான். அவன் பிடித்து வந்த மீன்களை பாண்மகளானவள் விற்று, அதற்குப் பண்டமாற்றாக நெல்லினைப் பெற்றுள்ளாள். அதனைப் பாரதம் பாடிய பெருந்தேவனார்,

**“முள் எயிற்றுப் பாண்மகள் இன்கெடிறு செறிந்த**

**அகன்பெரு வட்டி நிறைய மனையோள்**

**அரிகால் பெரும்பயறு நிறைக்கும்”** **(ஐங்.47:1-3)**

என்ற அடிகளால் சுட்டுவர். பாண்மகள் குறைவாக மீன் கொடுத்து, நிறைவாக நெல்லினைப் பெற்றுள்ளதை ஓரம்போகியார்,

**“அஞ்சில் ஓதி அசைநடைப் பாண்மகள்**

**சில்மீன் சொரிந்து பல்நெல் பெறூஉம்”** **(ஐங்.49:1-2)**

என்ற அடிகளால் தெளிவுபடுத்துவர். பாண்மகள் தூண்டிற் கோலினால் மீன் பிடிப்பாள். பிடித்த வரால் மீனை விறகினால் சுட்டுத் தன் தந்தைக்கு உண்ணக் கொடுத்துள்ளதை உலோச்சனார்,

**"நாண்கொள் நுண்கோலின் மீன்கொள் பாண்மகள்**

**தான்புன லடைகரைப் படுத்த வராஅல்**

**நாரரி நறவுண் டிருந்த தந்தைக்கு**

**வஞ்சி விறகிற் சுட்டுவா யுறுக்குந்**

**தண்டுறை ஊரன் ….."** **(அகநா.210:1-5)**

என்ற அடிகளால் விளக்குவர்.

பாண்மகளின் தந்தை யாமப்பொழுதில் மீன்பிடிக்கச் சென்றுள்ளார். அவர் பிடித்துவந்த வாளை மீனை பாண்மகள் பழம்நெல், கழங்களவு பெரிய முத்து, நல்ல ஆபரணம் ஆகியவற்றிற்குப் பண்டமாற்றாக விற்றுள்ளாள். அதனை நக்கீரர்,

**"காலைத் தந்த கணைக்கோட்டு வாளைக்கு**

**அவ்வாங்கு உந்தி அஞ்சொல் பாண்மகள்**

**நெடுங்கொடி நுடங்கு நறவுமலி மறுகில்**

**பழஞ்செந் நெல்லின் முகவை கொள்ளாள்**

**கழங்குநள் முத்தமொடு நன்கலம் பெறூஉம்"** **(அகநா.126:8-12)**

என்ற அடிகளால் உணர்த்துவர்.

**குறவன்**

குறிஞ்சிநில மக்களாகிய இவர்களைக் 'குறவினத்தார்'[3] என அழைக்கப்படுவர். இவர்கள் தேனாற் சமைத்தக் கள்ளினை உண்பர். இதனைப் புலவர் மதுரை நக்கீரனார்,

**"தேம்பிழி நறவின் குறவர் முன்றில்"** (அகநா.78:7)

என்ற பாடலடியால் தெளிவுபடுத்துவர். வேங்கையின் பொன் போன்ற பூங்கொத்துக்களைச் சூடியும், வளைந்த வலிமையான சிலையைத் தோளிடத்துக் கொண்டும் குறவர் விளங்குவர். அவர்கள் பலாவின் இனிய சுளையினைக் கொண்டு தயாரித்தக் கள்ளினை உண்பர். கள்ளினைப் பருகிய இளையர் சீழ்க்கை ஒலி எழுப்பி மகிழ்வர். அவர்கள் வேட்டையாடுவதில் வல்லவர்கள். வேட்டைக்குச் செல்லும்பொழுது, வேட்டை நாய்களை அழைத்துச் செல்வர். காட்டின் கண்ணுள்ள மல்லிகைப் புதரில் மறைந்துள்ள முட்பன்றியை இரத்தம் சொறிய வேட்டையாடுவதில் வல்லவர். அதனைக் கபிலர்,

**"பூங்கண் வேங்கைப் பொன்னிணர் மிலைந்து**
**வாங்கமை நோன்சிலை எருத்தத் திரீஇத்**
**தீம்பழம் பலவின் சுளை விளை தேறல்**
**வீளை அம்பின் இளையரோடு மாந்தி**
**ஒட்டியல் பிழையா வயநாய் பிற்பட**
**வேட்டம் போகிய குறவன் காட்ட**
**குளவித் தண்புதல் குருதியொடு துயல்வர**
**முளவுமாத் தொலைச்சும் குன்றநாட"** (அகநா.182:1-8)

என்ற அடிகளால் சுட்டுவர். குறவர்கள் மகளிரொடு குரவையாடும் தன்மையைக் கோடிமங்கலத்து வாதுளி நற்சேந்தனார்,

**"…………………….. குறவர்**

**மனைமுதிர் மகளிரொடு குரவை தூங்கும்" (அகநா.232:9-10)**

என்ற பாடலடியால் விளக்குவர். குறவர்கள் புல்லால் வேய்ந்த குடிலில் வாழ்ந்துள்ளனர். இதனைக் கபிலர்,

**"குன்றக்குறவன் காதன் மடமகள்**
**வண்டுபடு கூந்தற் றண்டழைக் கொடிச்சி**
**வளையண் முளைவா ளெயிற்ற**
**ளிளைய ளாயினு மாரணங் கினளே" (ஐங்.256:1-4)**

**"மென்தோட் கொடிச்சியை பெறற்கரிது தில்ல**
**பைம்புறப் படுகிளி யோப்பலர்" (ஐங்.260:2-3)**

**"வளமலைச் சிறுதினை யுணீஇய கானவர்**
**வரையோங் குயர்சிமைக் கேழ லுறங்கு**
**நன்மலை நாடன்" (ஐங்.268:2-4)**

என்ற பாடலடியால் சுட்டுவர். மேலும், கபிலர்

**"இருவி வேய்ந்த குறுங்காற் குரம்பைப்**
**பிணைஎர் நோக்கின் மனையோள் மடுப்ப**
**தேம்பிழி தேறல் மாந்தி மகிழ்சிறந்து**
**சேமம் மடிந்த பொழுதின் வாய்மடுத்து**

இரும்புனம் நிகழ்த்தலின் சிறுமை நோனாது

அரவு உறழ் அம்சிலை கொளிஇ நோய்மிக்கு

உரவுச்சின முன்பால் உடல்சினம் செருக்கி

கணைவிடு புடையூக் கானம் கல்லென

மடிவிடு வீளையர் வெடிபடுத்து எதிர" (குறிஞ்சிப்.153-161)

என்ற பாடலடிகளால் புலப்படுத்துவர். அவர்கள் காலில் செருப்பினை அணிந்திருந்ததை மதுரை மருதனிளநாகனார்,

"தொடுதோற் கானவன் காவை பொறுத்தன்ன

இருதிரி மருப்பின் அண்ணல் இரலை" (அகநா.34:3-4)

என்ற அடிகளில் சுட்டுவர். இவர்கள் இரவு நேரத்தில் யானையினை வேட்டையாடுவர். மரத்தில் ஒரு பரண் அமைத்து அப்பரணில் தங்குவர். கையினில் கவண் என்ற கருவியை வைத்திருப்பர். கடுகிய விசையினையுடைய இக்கருவியில் கல்லினை வைத்து எறிவர். அதனைக் கபிலர்,

"இரவின் மேயல் மரூஉம் யானைக்

கால்வல் இயக்கம் ஒற்றி நடுநாள்

வரையிடைக் கழுதின் வன்கைக் கானவன்

கடுவிசைக் கவணின் எறிந்த சிறுகல்

உடுவுறு கணையிற் போகிச் சாரல்

வேங்கை விரிஇணர் சிதறித்தேன் சிதையூஉப்

பலவின் பழத்துள் தங்கும்

மலைகெழு நாடன்" (அகநா.292:8-15)

என்ற பாடலடிகளில் சுட்டுவர். இக்குறவர்கள் யானையின் தந்தத்தினை விரும்பி யானையினை வேட்டையாடுவதனைக் காவன் முல்லைப்பூதனார்,

**"வெண்கோடு நயந்த அன்பில் கானவர்**

**இகழ்ந்தியங் கியவின் அகழ்ந்த குழிசெத்**

**திருங்களிற்றின நிரை தூர்க்கும்"** **(அகநா.21:24-26)**

என்ற அடிகளில் தெளிவுபடுத்துவர்.

**கள் தயாரித்தல்**

குறவர்கள் அவர்கள் வாழும் மலைப்பகுதியில் விளைந்த மா, பலாப்பழங்களைத் தேனுடன் கலந்து நீண்ட மூங்கிற் குழாயில் அடைத்து முற்றவைப்பர். முற்றிக் காரமேறிய கள்ளை ஆண்களும், பெண்களும் உண்பர். அதனை மதுரை இளம்பாலாசிரியன் சேந்தன் கூத்தனார்,

**"தேன்தேர் சுவைய திரளரை மாஅத்துக்**

**கோடைக் கூழ்த்த கமழ் நறுந்தீங்கனி**

**பயிர்ப்புறப் பலவின் எதிர்சுளையளைஇ**

**இறாலொடு கலந்த வண்டுமூ சரியல்**

**நெடுங்கண் ஆடமைப் பழுநிக் கடுந்திநற்**

**பாப்புக் கடுப்பன்ன தோப்பி வான்கோட்டுக்**

**கடவுள் ஓங்குவரைக் கோக்கிக்குறவர்"** **(அகநா.348:2-8)**

என்ற அடிகளால் சுட்டுவர்.

**தேனெடுத்தல்**

குறவர் உச்சிப்பாறையில் உள்ள தேனை அறுத்தெடுப்பர். இதனைப் பரணர்,

**"அறையுறு தீந்தேன் குறவர் அறுப்ப"** **(அகநா.322:12)**

என்ற அடிகளால் நவிலுவர். அவர்கள் மலைப்பகுதியில் விளைந்த கிழங்கை அகழ்வர். அதனால் அவ்விடங்கள் குழிகளாகக் காணப்படும். இதனைக் கபிலர்,

**"……………………… கானவர்**

**கிழங்குஅகழ் நெடுங்குழி மல்க வேங்கைப்**

**பொன்மலி புதுவீத் தாஅ"** **(ஐங்.208:1-3)**

என்ற பாடலடியால் தெளிவுபடுத்துவர். இவர்கள் மலையிடத்துத் தினையைப் பயிரிட்டுள்ளனர். அப்பயிரிடையே உள்ள களையைக் களைக்கொட்டுக் கொண்டு களைந்துள்ளனர். அதனைப் பெருங்கௌசிகனார்,

**"நினக்கோ அறியுநள் நெஞ்சே புனத்த**
**நீடிலை விளைதினைக் கொடுங்கால் நிமிரக்**
**கொழுங்குரல் கோடல் கண்ணிச் செழும்பல**
**பல்கிளைக் குறவர் அல்கயர் முன்றில்"** **(நற்.44:5-8)**

என்ற அடிகளால் தெளிவுபடுத்துவர். விளைந்த தினைக்கதிரை பாறையின் மீது இட்டு களிற்று யானையைக் கொண்டு மிதிக்கச் செய்துள்ளனர். அதனை,

**"…………………… அகன்கண்பாசறை**

**மென்றினை நெடும்போர் புரிமார்**

**துஞ்சுகளி றெடுப்பும்"** **(நற்.125:10-12)**

என்ற அடிகளால் புலப்படுத்துவர்.

**வேட்டையாடுதல்**

கானவர்கள் வேட்டையாடும் தொழிலைச் செய்வர். "வேட்டையாடி உணவு சேகரிக்கும் பழங்குடிகள் பெரும்பாலும் தனித்தனியாகச் சிறு குழுக்களாகப் பிரிந்து செல்வர்"[4] என்பர் பக்தவத்சலபாரதி. கானவர் அகன்ற நிலப்பிளவின் வாயிலில் வார்களால் பின்னப்பட்ட கண்ணியும் வலையும் அமைப்பர். பன்றியை வேட்டை நாய்களைக் கொண்டு ஏவித் தூக்கி அப்பிளவில் விழச்செய்வர். அவை வளையில் பட்டுச் சிக்குறும். அதனைத் தம் குடிக்குக் கொண்டு வருவர்.

**சந்தனக்கட்டைகளை எரித்தல்**

குறவர்கள் சந்தனக் கட்டைகளைச் சுட்டு உரிப்பர். இதனால் எழுந்த புகையானது நறுமணத்துடன் மலைப்பக்கமெல்லாம் பரவும். இதனை ஓரம்போகியார்,

> **"குன்றக்குறவன் சார்ந்த நறும்புகை**
>
> **தேங்கமழ் சிலம்பின் வரையகங் கமழும்"** **(ஐங்.253:1-2)**

என்ற அடிகள் விளக்கும்.

**தினைப்பயிரிடுதல்**

பன்றிகள் கிழங்குகளைத் தோண்டி எடுத்துள்ள இடங்களில் விளைந்த தினையைக் கொய்து கொண்டு குறவர்கள் வீடு சென்றுள்ளனர். அதனைக் கபிலர்,

**“கிழங்ககழ் கேழ லுழுத சிலம்பிற்**

**றலைவிளை கானவர் கொய்தனர் பெயரும்**

**புல்லென் குன்றத்துப் புலம்புகொனெடுவரை”   (ஐங்.270:1-3)**

என்ற அடிகளில் சுட்டுவர்.

**குறக்குறுமாக்கள்**

குறிஞ்சி நிலத்தில் உள்ள வேங்கை மரத்திலிருந்து தேனடை கசிந்து கல்லின் குழிகளில் நிரம்பியுள்ளது. இத்தேனை குன்றக்குறவர்களின் சிறுவர்கள் நக்கி உண்டனர். இதனை,

**“புள்ளூற்றுக் கசிந்த தீந்தேன் கல்அளைக்**

**குறக்குறு மாக்கள் உண்ட”   (நற்.168:3-4)**

என்ற அடிகளால் சுட்டுவர்.

**புனவன்**

தினைப்புனம் காக்கும் குறிஞ்சிநில மாந்தர்கள் புனவன் என அழைக்கப்படுகின்றனர். சங்க அகப் பாடல்களில் விளிம்புநிலை மாந்தரான ‘புனவன்’ என்பவர்களின் வாழ்வியலானது எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. புனவன் மலையிலுள்ள புன்செய் கொல்லையில் தினையை விதைத்துள்ளனர். தினைப்பயிரை விலங்குகள் அழித்துவிடாமற் காப்பதற்காகக் கழங்குக் காயினைக் கண்ணாகப் பொருத்திப் பொய்ப்புலிப் பொம்மை ஒன்றினைச் செய்து வைப்பர். கற்குகையில் வாழும் ஆண் புலியானது வெளியில் வரும்பொழுது பெண்புலி என நினைத்துப் பொம்மைப் புலியுடன் புணரும். இதனை ஓரம்போகியார்,

**“வெறிச்செறித் தனனே வேலன் கறிய**

**கல்முகை வயப்புலி கழங்கு மெய்ப்படூஉம்**

**புன்புலம் வித்திய புனவர் புணர்ந்த**

**மெய்ம்மை யன்ன பெண்பாற் புணந்து**

**மன்றில் பையுள் திகழும்**

**குன்ற நாடன் ……………….”** **(ஐங்..246:1-6)**

என்ற அடிகளில் உணர்த்துவர். கானவன் கொல்லையினை அழித்துச் சுத்தம் செய்யும் தருணத்தில் காலில் செருப்பினை அணிந்திருப்பது வழக்கமாக இருந்துள்ளது. அதனை மதுரை மருதனிளநாகனார்,

**“தொடுதோள் கானவன் சூடுறு வியன்புனம்**

**கரிபுறங் கழீஇய”** **(அகநா.368:1-2)**

என்ற அடிகளில் சுட்டுவர். இவன் தினைப்புனத்தில் மேயவரும் யானையை விரட்ட “கவண்கருவி”யைப் பயன்படுத்தி உள்ளான். அதனைப் புலவர் பெருங்கடுங்கோ,

**“இலங்கு ஒளி மருப்பின் கைம்மா உளம்புநர்**

**புலம்கடி கவணையின் பூஞ்சினை உதிர்க்கும்”** **(கலி.23:1-2)**

என்ற பாடலடிகளில் புலப்படுத்துவர். அவர்கள் தினை விளைந்த பின்னர் அக்காட்டைச் சுட்டழிப்பது வழக்கமாகும். இவர்களில் தினைப்புனம் காப்பவரை ‘ஏனல் காவலர்’ என்றழைப்பர். அவர்கள் கவணில் கல் வைத்துவிடும் ஒலிக்கு யானை அஞ்சி ஓடியுள்ளது. அதனை மீனெறி தூண்டிலார்,

**“ஏனல் காவலர் கவணொலிவெரீஇக்**

**கான யானை கைவிடு பசுங்கழை”** **(குறுந்.54:2-3)**

என்ற அடிகளால் சுட்டுவர். கானக்குறவர், தினைப்புனத்தில் புகுந்த யானையை விரட்ட, கையில் அம்பையும், கிணைப்பறையையும், கவணையும் எடுத்து ஆரவாரித்துச் செல்வர். இதனை,

**“மலைஅயல் கலித்த மைஆர் ஏனல்**

**துணையின் தீர்ந்த கடுங்கண் யானை**

**அணையக் கண்ட அங்குடிக் குறவர்**

**கணையர் கிணையர் கைபுனை கவணர்**

**விளியர் புறக்குடி ஆர்க்கும் நாட”** **(நற்.108:1-5)**

என்ற அடிகளால் புலப்படுத்துவர். புனவன் ‘புனத்திற்கு உரியவன்’ என்பர் உ.வே.சாமிநாதையர். அவன் தினைப்புனத்தை வந்து மேயும் பன்றியை அழிக்க, கருங்கற் பலகையை ஒருபால் சாய்வாக நிமிர்த்திக் கீழே முட்டுக் கொடுத்து உட்புறம் உணவு வைத்திருப்பான். அதனுள் பன்றிக்குப் பதிலாக புலி மாட்டிக் கொள்ளுதலும் உண்டு. அதனைப் பெருங்குன்றூர்கிழார்,

**“தினையுண் கேழல் இரிய புனவன்**

**சிறுபொறி மாட்டிய பெருங்கல் அடாஅர்**

**ஒண்கேழ் வயப்புலி படூஉம் நாடன்”** **(நற்.119:1-3)**

என்ற அடிகளால் உணர்த்துவர்.

**அகவன் மகளிர்**

குறிஞ்சி நிலத்தில் குறமகள் ‘குறி’ சொல்வது வழக்கமாகும். அவள் ‘அகவன் மகள்’ எனப்பட்டாள். மக்கள் தங்கள் வாழ்வில் நடைபெறக் கூடிய நன்மை தீமைகளை அறிவதில் ஆர்வமுள்ளவராய் இருந்துள்ளனர்.

அவர்களுக்கு அகவன் மகள் குறி சொல்லும் பொழுது தெய்வங்களையும், அவர்களின் குலத்தோரையும் அழைத்துப்பாடுவாள். இதனை ஔவையார்,

**“அகவன்மகளே அகவன்மகளே**

**மனவுக் கோப்பன்ன நன்னெடுங்கூந்தல்**

**அகவன்மகளே பாடுகபாட்டே**

**இன்னும் பாடுக பாட்டே அவர்**

**நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே”** **(குறுந்.23:1-5)**

என்ற பாடலால் சுட்டுவர். கட்டுவிச்சி வயது முதிர்ந்தவளாகக் காட்டப்பெறுகிறாள். “சங்குமணிக்கோவை போன்ற நெடிய கூந்தலையுடைய கட்டுவிச்சி” என்றதன் மூலம் கட்டுவிச்சியின் மூப்பையும், அழகையும் புலவர் குறிப்பிடுகின்றார். இவள் பாட்டாகப்பாடிக் குறி சொல்லுவதை “பாடுக பாட்டே” என்ற தொடரின் மூலம் அறியமுடிகிறது.

**கட்டிற்கேட்டல்**

கட்டு என்பது சேரிமாதரான முதுபெண்டீர் குறி சொல்வதாகும். இவர்களை அழைத்துவந்து, முற்றத்திலே பிடி நெல்லை இட்டு எதிரே தலைமகளை நிறுத்தித் தெய்வத்திற்கு வழிபாடு செய்வர். பின்னர் அந்நெல்லை நான்கு நான்காக எண்ணி எஞ்சியவை ஒன்றிரண்டு, மூன்றளவும் முருகணங்கெனவும், நான்காயின் பிறிதொரு நோயெனவும் கூறப்படும். முருகணங்கென்று கூறின் உடனே வேலனை அழைத்து வெறிக்களத்திருத்தி முருகக் கடவுளுக்கு விழா நடத்தி ஆண்டுக் கழங்குறி பார்ப்பர். இதனைக் குளம்பனார்,

"செம்முது பெண்டிரொடு நெல்முன் நீறீஇக்

கட்டிற் கேட்கும்" (நற்.288:6-7)

என்ற அடிகளால் தெளிவுபடுத்துவர். இவ்வாறு அகவன் மகளிர் குறிசொல்லித் தங்கள் வாழ்க்கையை நடத்தியுள்ளதை அறியமுடிகின்றது.

**கட்டுவிச்சி**

குறி சொல்லுதல், பார்வை பார்த்தல், சோதிடம் சொல்லுதல் ஆகியவை ஒன்றோடொன்று தொடர்புடையவைகளாகும். இவ்வாறு கணிக்கும் தொழிலை வள்ளுவர் என்ற சமூகமும் செய்து வந்தனர். பின்னர் வள்ளுவர் என்ற சாதி விளிம்பு நிலைச் சாதியானது, தற்போது கம்பளத்து நாயக்கர்கள் கட்டுவிச்சித் தொழிலை மேற்கொண்டுள்ளனர். பண்டைக் காலத்தில் நற்பண்புள்ள முதுபெண்டிர், நன்மை, தீமை ஆராய்ந்து குறி கூறியுள்ளனர். அதனை நப்பூதனார்,

"அருங்குடி மூதூர் மருங்கிற்போகி

யாழிசை இனவண்டு ஆர்ப்ப நெல்லொடு

நாழி கொண்ட நறுவீமுல்லை

அரும்பவிழ் அலரி தூஉய்க்கை தொழுது

பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்ப" (முல்லைப்.7-11)

என்ற அடிகளால் சுட்டுவர்.

**துணங்கையர்**

சங்க அக இலக்கியங்களில் துணங்கையர் பற்றிய குறிப்புக்கள் உள்ளன. ஆண்களும், பெண்களும் தனித்தும், இணைந்தும் நின்ற நிலையில்

குனிந்தும், நிமிர்ந்தும் வலம், புறம் எனச் சுழன்றும் இசைக்கருவிகளின் இன்னிசை வாசிப்புக்கேற்பப் பாடும்பாடல்களுக்கேற்பவும் அல்லது பாடல் பாடிக் கொண்டவாறும் தன் இரு கைகளையும், மேலே தூக்கியும், தன் இருவிலாப் புறங்களிலும் மடக்கிய நிலையில் ஒட்டி ஓசை எழுமாறு அணைத்தும், அடித்தும் காலடிவைப்புகளை முன்பின் பக்கவாட்டுக்கள் என இயைபுற எடுத்து வைத்துத் தாளத்துக்கு இயைய குதித்தவாறு ஆடுவதே துணங்கை ஆட்டமாகும்."[5] ஒரு குழு மற்றொரு குழுவைத் தாக்கப் படையெடுக்கும் போர்ப் பின்னணியில் அதாவது நிலவுடைமை உணர்வு மலர்ந்த சமுதாய அமைப்பில் முல்லை-மருதப் போர்ப் பின்னணியில் துணங்கைக் கூத்து ஆடப்பட்டிருக்கக்கூடும். இக்கூத்தில் இடம்பெற்ற பாடல்கள் மக்களின் தேவைக்கேற்பவும், சமுதாயப் பொருளாதாரக் கட்டுப்பாடுகளுக்கு இணங்கவும் வடிவம் பெற்றன. இது ஆட்டம் என்றோ துணங்கைக்கூத்து என்றோ சங்க இலக்கியத்தில் குறிக்கப்படவில்லை. மாறாகத் துணங்கை எனக் குறிக்கப்பட்டுள்ளது. துணங்கை ஆட்டம் குறித்துக் கூறுமிடத்து அதனோடு, பாணர், வயிரியர், கண்ணுளர் ஆகியோர் இணைந்துள்ளனர்.

கலித்தொகையில் தலைவியைப் பிரிந்த தலைவன் பரத்தையருடன் சேர்ந்து துணங்கைக் கூத்தாடி மகிழ்கிறான். இதனை மருதனிளநாகனார்,

**"ஈரணி சிதையாது எம்இல் வந்து நின்றதை**

**துணந்தன் தலையும் நீ தளரியலவரொடு**

**துணங்கையாய் என வந்த கவ்வையின் கடப்பன்றோ"**

**(கலித்.66:16-18)**

என்ற பாடலடிகளால் எடுத்தியம்புவர். தலைமகன் தன்னால் கட்டப்பட்ட பெரிய வீட்டில் பரத்தையரை அழைத்து வந்து அவளுடன் துணங்கைக் கூத்தாடி மகிழ்ந்தான். அதனை மதுரை மருதனிளநாகனார்,

**"அகலநீ துறத்தலின் அழுதுலுவா உண்கண் எம்**
**புதல்வனை மெய்தீண்டப் பொருந்துதல் இயைபவால்**
**நினக்கு ஒத்த நல்லாரை நடுநகர்த்தந்து நின்**
**தமர்படும் துணங்கையுள் அரவம் வந்து எடுப்புமே"**

**(கலித்.70:11-14)**

என்ற அடிகளால் புலப்படுத்துவர்.

**யானைப்பாகர்**

யானைப்பாகர், ஆனையாட்கள், ஆனைப்பாகர், குஞ்சரமல்லர், அத்திமல்லர் என்னும் பெயர்களில் அழைக்கப்பட்டனர். அடிக்கடி அரசன் யானைப்படையின் அணிவகுப்பைக் கண்டு களிப்பான். யானைப்படையானது சிறந்த படையாகவும் கருதப்பட்டது. இதனைப் பூதஞ்சேந்தனார்,

**"யானையுடைய படைகாண்டல் மிக வினிதே" (இனியவை)**

என்ற பாடலடியால் குறிப்பிடுகிறார்.[6] அழகிய தந்தங்களை உடைய யானையானது மதம் கொண்டமையால் பாகனின் ஏவலைக் கேட்காமல் அங்குமிங்கும் ஓடியது. யானைப்பாகன் யானையினைப் பணியவைக்க 'அங்குசம்' என்ற கருவியைப் பயன்படுத்தினார். அக்கருவிக்குக் கட்டுக்கடங்காமல் மதமேறிய யானையானது ஓடியுள்ள காட்சியை. நல்லந்துவனார்,

**“எழில் மருப்பு எழில் வேழம் இகுதரு கடாத்தால்**

**தொழில்மாறித் தலைவைத்த தோட்டிகை நிமிர்ந்தாங்கு**

**அறிவும் நம் அறிவு ஆய்ந்த அடக்கமும் நாணொடு**

**வறிதாகப் பிறர் என்னை நகுபவும் நகுபு உடன்**

**மின் அவிர் நுடக்கமும் கனவும் போல் மெய்காட்டி**

**என் நெஞ்சம் என்னொடு நில்லாமை நனிவௌவித்**

**தன் நலம் கரந்தாளைத் தலைப்படுமாறு எவன்கொலோ”**

**(கலித்.138:1-7)**

என்ற அடிகளால் புலப்படுத்துவர். யானைப்பாகர் யானையினைப் பாதுகாக்கின்ற தொழிலைச் செய்துள்ளனர் என்பது இதன் கருத்தாகும். யானைப்பாகர் தழைகளால் வேய்ந்த கூரைவீடுகள் இருந்த தெருவின் நாற்சந்தியின் முற்றத்தில் காவலாக யானையை நிற்க வைத்து இருப்பர். அவைகளுக்கு உணவாக உயர்ந்து நீண்ட கரும்புடன் நெற்கதிர்களையும் இணைத்துக் கட்டியிருப்பர். அவற்றை யானைகளானது உண்ணாமல் தம் நெற்றியில் அவைகளைத் தேய்த்துக் கொண்டு நீண்ட கூர்மையான தம் தந்தங்களால் துதிக்கைகளைப் போட்டுக் கொண்டு நின்றன. கல்லாத இளைஞராகிய பாகர் கூர்மையான குத்துக்கோலால் குத்தி, யானையைப் பழக்கும் வடமொழிச் சொற்களைக்கூறி, சோற்றுத்திரளை அந்த யானைகளின் வாயில் ஊட்டினர். இதனை காவிரிப்பூம்பட்டினத்துப் பொன் வணிகனார் மகனார் நப்பூதனார்,

**“உவலைக் கூரை ஒழுகிய தெருவில்**

**கவலை முற்றம் காவல் நின்ற**

**தேம்படு கவுள சிறுகண் யானை**

**ஓங்குநிலை கரும்பொடு கதிர்மிடைந்து யாத்த**

**வயல்விளை இன்குளகு உண்ணாது நுதல் துடைத்து**

**அயில்நுனை மருப்பில் தன்கையிடைக் கொண்டெனக்**

**கவைமுட் கருவியின் வடமொழி பயிற்றி**

**கல்லா இளைஞர் கவளம் கைப்ப" (முல்லைப்.30-36)**

என்ற அடிகளால் உணர்த்துவர். வடமொழிபேசி யானையைப் பழக்கப்படுத்தும் இளைஞர்கள் புலம்பெயர்ந்து வந்தவராக இருக்கிறார் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**தேர்ப்பாகன்**

இவன் குதிரைப்பாகன்[7], இவுளிமறவர்[8], திண்தேர் வலவன்[9] என அழைக்கப்படுகிறான். ஓர் இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குச் செல்வதற்கு குதிரையும், தேரையும் பயன்படுத்தி இருக்கிறார்கள். தலைவனுக்காக குதிரையைச் செலுத்தும் பணியில் தேர்ப்பாகன் இருந்திருக்கிறான். அவன் குதிரையைப் பற்றியும், பாதையின் தன்மையையும் அறிந்து தேரை விரைவாகச் செலுத்தியிருக்கிறான். வலிமையுடைய கால்களையுடைய தேரினை வேகமாகச் செல்லும் குதிரைகள் இழுத்துச் சென்றுள்ளன. அதனைப் பேயனார்,

**"கடும்பரிப் புரவிக் கால்வல நெடுந்தேர்**

**நெடுங்கொடி முல்லையோடு தளவுமலர் உதிர" (ஐங்.422:1-2)**

என்ற அடிகளால் உணர்த்துவர். விரைந்தோடும் குதிரைகள் பூட்டிய தேரினைத் தேர்ப்பாகன் செலுத்தியுள்ளான். அதனைப் பேயனார்,

"முள்ளிட் டூர்மதி வலவநின்

புள்ளியற் கலிமாப் பூண்ட தேரே" (ஐங்.481:3-4)

"வேனீ னீங்கக் கார்மழை தலைஇ

காடுகவின் கொண்டன்று பொழுது பாடுசிறந்து

கடியக் கடவுமதி பாக" (ஐங்.484:1-3)

"புல்லி யாற்றாப் புரையோட் காண

வள்பு தெரிந்தூர்மதி வலவநின்

புள்ளியற் கலிமாப் பூண்ட தேரே" (ஐங்.486:3-5)

"இதுமற் பிரிந்தோ ருள்ளும் பொழுதே

செறிதொடி யுள்ள முவப்ப

மதியுடை வலவ ஏமதி தேரே" (ஐங்.487:1-3)

"மன்னர் மதிக்கும் மாண்வினைப் புரவி

கொய்ம்மயிர் எருத்தில் பெய்ம்மணி ஆர்ப்பப்

பூண் கதில் பாக நின் தேரே" (நற்.81:3-5)

"கடுமா கடவுமதி பாக" (குறுந்.250:4)

"நன்றுபுரிந் தெண்ணிய மனத்தையாகி

முரம்பகண் ணுடைய வேதிக் கரம்பைப்

புதுவழிப் படுத்த மதியுடை வலவோய்" (குறுந்.400:3-5)

"மதியுடை வலவன் ஏவலின் இகுதுறைப்

புனல் பாய்ந்தன்ன வரிம்மான் திண்டேர்க்" (அகம்.400:11-12)

**“மணிநா ஆர்த்த மாண்வினைத் தேரன்**

**உவக்காண் தோன்றும் குறும்பொறை நாடன்” (அகம்.4:12-13)**

**“…………………….. பெருந்துறை**

**எல்லையும் இரவும் என்னாது கல்லென**

**வலவன் ஆய்ந்த வண்பரி” (அகம்.20:12-16)**

**“ஓடுபரி மெலியாக் கொய்சுவல் புரவித்**

**தாள் தாழ் தார்மணி தயங்குபு இயம்ப**

**ஊர்மதி வலவ தேரே” (அகம்.154:10-12)**

என்ற பாடலடிகளால் சுட்டுவர். தேரினை விரைவாகச் செலுத்தும் ஆற்றலும், வழிமுறைகளும் அறிந்த பாகனின் திறத்தினை ஈண்டு உணரமுடிகிறது.

**ஊர்க்காப்பாளர்**

காவலர்கள் இரவு நேரத்தில் கண் துஞ்சாது காவல் காத்துள்ள திறத்தை உக்கிரப்பெருவழுதி,

**“எந்தை ஓம்புங் கடியுடைவியல் நகர்த்**

**துஞ்சாக் காவலர் இகழ்பதம் நோக்கி**

**இரவின் வரூஉம் அதனினுங்கொடிதே” (நற்.98:8-10)**

என்ற அடிகளால் தெளிவுபடுத்துவர். காவலர்களை ‘வாயில் அடையக் கடவுநர்’[10] எனக் குறுந்தொகைப் புலப்படுத்துகிறது. இவர்கள் “வாயிலின்கண் உள்ளாரை ஒருவர் விடாமல் முற்றிலும் ஆராய்பவராய் வருபவர்கள் உள்ளீரோ” எனக் கேட்டுப் பிறகு வாயிலை அடைத்துள்ளனர். இதனை நன்னகையார்,

“பலர்புகு வாயிலடைப்பக் கடவுநர்

வருவீருளீரோ வெனவும்” (குறுந்.118:3-4)

என்ற அடிகளால் உணர்த்துவர். காவலர்கள் மக்களை விழிப்புணர்வுடன் வைத்திருந்ததை மதுரை மருதனிளநாகனார்,

“ஏதப்பாடு எண்ணிப் புரிசை வியல் உள்ளோர்

கள்வரைக் காணாது, “கண்டேம்” என்பார்போலச்”

(கலி.81:25-26)

என்ற அடிகளால் தெளிவுபடுத்துவர். கள்வர்களைக் காணாத போதும் அவர்களைக் கண்டதாக மக்களிடம் கூறியுள்ளதை இவ்வடிகள் தெளிவுபடுத்தும். கண் துஞ்சாது காவலர்கள் ஊரினைக் காவல் காத்த திறத்தினைப் பரணர்,

“பிணிகோள் அருஞ்சிறை அன்னை துஞ்சின்

துஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவர்” (அகநா.122:5-6)

என்ற அடிகளால் சுட்டுவர். இக்காவலர் அருங்கடிக்காவலர் என அழைக்கப்பட்டுள்ளனர். ‘நடுயாமத்தில் அரிய காவலைச் செய்யும் நகர்க் காவலர்’ என்பதே அதன் பொருளாகும். அதனைப் பரணர்,

“அருங்கடிக் காவலர் இகழ்பதம் நோக்கி

பனி மயங்கு அசைவளி அலைப்ப” (அகம்.162:7-8)

என்ற அடிகளால் விளக்குவர்.

**காலம் கணிப்போர்**

சங்க காலத்தில் பொழுது அறிந்து கூறுவதற்கெனச் சிலர் இருந்துள்ள செய்தியினை முல்லைப்பாட்டின் மூலம் அறியமுடிகிறது. இவர்கள் தம் தொழிலில் பொய்ப்பதில்லை. அரசனைத் தொழுது வாழ்த்தி கடலால் சூழப்பெற்ற நிலவுலகத்தை வெல்லச் செல்வர். இவர்கள் ‘குறுநீர்க்கன்னல்’ என்ற நாழிகை உணர்த்தும் கருவியினைக் கொண்டு காலம் கணிப்பர். அக்கருவியினை ‘நாழிகை வட்டில்’ என அழைத்துள்ளனர். கடாரம் என்ற நீர் பெய்து வைக்கும் பாத்திரத்தில் நீர் நிரப்பி வைத்து அடியில் ஓட்டை போட்டு வைத்து, இவ்வளவு நாழிகைக்கு இவ்வளவு நீர் கசியும் எனக் கணக்கிட்டு வைத்திருப்பர். காலத்தைக் கணிப்பதற்குத் தமிழர் பழங்காலத்தில் கையாண்ட முறைகளுள் இதுவும் ஒன்றாகும். இதனைக் காவிரிப்பூம்பட்டினத்துப் பொன் வணிகனார் மகனார் நப்பூதனார்,

> **“பொழுதறிந்தறியும் பொய்யா மாக்கள்**
> **தொழுதுகாண் கையர் தோன்ற வாழ்த்தி**
> **எறிநீர் வையகம் வெலீஇய செல்வோய்நின்**
> **குறுநீர்க் கன்னல் இனைத்தென்று இசைப்ப” (மு.பா.55-58)**

என்ற அடிகளால் தெளிவுபடுத்துவர்.

**பள்ளியறைக் காவலர்**

அஞ்சாமையுடைய யவனர் (சோனகர்) இயல்பாகவே வலிமையான உடல்வாகு உடையவர்கள். இவர்கள் இடுப்பில் குதிரைச் சவுக்குக் கயிற்றைச் சுற்றிக் கட்டியுள்ளனர். அதன்மேல் செறிவான உடையையும் அணிந்துள்ளனர். சட்டை அணிந்து இருப்பர். பார்த்தாலே பிறர் அஞ்சும்

தோற்றத்தினை உடையவர். இவர்கள் படைவீட்டில் ஒரு பகுதியில் மாணிக்க விளக்குகளைத் தொங்கவிடுவர். இடையே திரைச்சீலையைத் தொங்கவிடுவர். அரசன் தங்குமிடத்தை இரண்டு அறைகளாக ஆக்குவர். உடம்பின் செய்கைகளால் உரைக்கின்ற தன்மையுடைய நாவால் பேசமுடியாத ஊமைமிலேச்சர், சட்டை அணிந்தோர் பள்ளியறைக் காவலராய் இருந்துள்ளனர். இதனை நப்பூதனார்,

**"மத்திகை வளைஇய மறந்துவீங்கு செறிவுடை**
**மெய்ப்பை புக்க வெருவரும் தோற்றத்து**
**வலிபுணர் யாக்கை வன்கண் யவனர்**
**புலித்தொடர் விட்ட புனைமாண் நல்லில்**
**திருமணி விளக்கம் காட்டித் திண்ஞான்**
**எழினி வாங்கிய ஈரறைப் பள்ளியுள்**
**உடம்பின் உரைக்கும் உரையா நாவிற்**
**படம்புகு மிலேச்சர் உழையர் ஆக" (முல்லைப்.59-66)**

என்ற அடிகளால் விளக்குவர்.

**புலைத்தி**

புலைத்தி மருதநிலத்தில் வாழ்ந்துள்ளாள். அவள் ஊரவரின் ஆடைகளைக் கொண்டு சென்று அவற்றைத் துவைத்துக் கொடுத்துள்ளாள். அதனை மதுரை மருதனிளநாகனார்,

**"..................... ஊரவர்**
**ஆடைகொண்டு ஒலிக்கும் நின் புலைத்தி" (கலி.72:13-14)**

என்ற பாடலடியால் தெளிவுபடுத்துவர். புலைத்தி பனை ஓலையினைத் துண்டங்களாக்கி அது கொண்டு 'புட்டில்' முடைந்துள்ளாள். அதனைச் சோழன் நல்லுருத்திரன்,

**"மாதர்ப் புலைத்தி விலையாகச் செய்ததோர்**

**போழில் புனைந்த வரிப்புட்டில்"** **(கலித்.117:7-8)**

என்ற அடிகளால் விளக்குவர். வண்ணாத்தி வெளுத்துப் பூப்போன்று இருந்ததை அஞ்சிலஞ்சியார்,

**"வறன்இல் புலத்தி எல்லித் தோய்த்த**

**புகாப்புகர் கொண்ட புன்பூங்கலிங்க மொடு"** **(நற்.90:3-4)**

என்ற அடிகளால் நவிலுவர். வண்ணாத்தி நல்லியல்புள்ளவள் கஞ்சிப் பசையில் ஆடையினைத் தோய்த்து எடுப்பாள். ஆடையின் தலைப்பக்கத்தை வீசிக் குளிர்ச்சியான நீரினையுடையக் குளத்தினுள் இடுவாள். அவ்வாறு இடும்போது நீரை விட்டுப் பிரியாத பருத்த திரியைப் போல அவ்வாடையானது இருக்கும். இதனைக் கழார்க்கீரடினயிற்றியனார்,

**"நலத்தகைப் புலைத்தி பசைதோய்த் தெடுத்துத்**

**தலைப்புடைப் போக்கித் தண்கயத்திட்ட**

**நீதிற் பிரியாப் பரு உத்திரி கடுக்கும்"** **(குறுந்.330:1-3)**

என்ற அடிகளால் நவிலுவர். அவள் ஆடைகளைத் துவைத்து அவற்றிற்குச் சோற்றின் கஞ்சியை இட்டதை மதுரை மருதனிளநாகனார்,

**"பசைகொல் மெல்விரற் பெருந்தோட் புலைத்தி**

**துறை விட்டன்ன தூமயிரெகினம்"** **(அகநா.34:11-12)**

என்ற அடிகளால் தெளிவுபடுத்துவர்.

**தச்சன்**

மரத்தச்சன் சிறிய தேரினைச் செய்து அதில் மரத்தால் செய்த சிறிய குதிரைகளைப் பூட்டுவான். அச்சிறுதேரினைச் சிறுவர்கள் கையால் இழுத்து இன்புற்றுள்ளதை தும்பிசேர்கீரர்,

> **"தச்சன் செய்த சிறுமா வையம்**
>
> **ஊர்ந்தின் புறாஅ ராயினுங் கையின்**
>
> **ஈர்த்தின் புறூஉ மிளையோர் போல"** **(குறுந்.61:1-3)**

என்ற பாடலடிகளால் விளக்குவர். மரத்தாலான கதவானது ஆணிகளும், பட்டங்களும் கொண்டு பெரிய இரும்பினால் பொருத்தப்பட்டிருந்தது. அக்கதவின் மேலே உத்திரக் கட்டையானது அமைக்கப்பட்டிருந்தது. கதவில் குவளை போன்ற மலர் வடிவங்களும் புதிய பிடிகளும், தாழ்ப்பாவும், பொருத்துவாயும் நன்கு கைத்தொழில் வல்ல கம்மியர் அமைத்திருந்ததை மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார்,

> **"பரு இரும்பு பிணித்துச் செவ்வரக்கு உரீஇ**
>
> **துணைமான் கதவம் பொருத்தி இணைமாண்டு**
>
> **நாளொடு பெயரிய கோளமை விழுமரத்துப்**
>
> **போதுஅவிழ் குவளைப் புதுப்பிடி காலமைத்துத்**
>
> **தாழொடு குயின்ற போரமை புணர்பின்**
>
> **கைவல் கம்மியன் முடுக்களின் புரை தீர்ந்து**
>
> **ஐயவி அப்பிய நெய்யணி நெடுநிலை"** **(நெடுநல்.80-86)**

என்ற பாடலடிகளால் தெளிவுபடுத்துவர்.

**கொல்லன்**

தமிழர்கள் பல தொழில்கள் செய்து வந்துள்ளனர். கொல்லர் ஒரு தொழிலுக்கு மட்டும் உரிமையுடையர் அல்லர். பிற தொழில்களிலும் கொல்லர்களின் பங்கு இருக்கும். கொல்லர் பிறப்புப் பற்றிய தொன்மக் கதையில் நான்முகன் பெற்ற புதல்வர்கள் நான்கு வகையினப் பொருள்களைக் கொண்டு செயல்களைச் செய்ததன் வடிவமுறையிலேயே மயன் (சிற்பி) தச்சன், கொல்லன், பொற்கொல்லன் என்ற பெயரில் சாதி ஏற்பட்டது என்பர். இவற்றில் தொழில்முறை ஒன்று தான். ஆனால் அது வடிவம் பெறும்முறை வேறாகும். இந்நான்கு பேரும் ஓர் இனத்தினர் என விளங்கியிருந்ததைக் காட்டுகிறது. ஆகாய வெளி பல்லணுக்களைக் கொண்டு உயிரினைத் தோற்றுவிக்கும் ஆற்றல் பெற்றதாகும். தொல் தமிழர் அறிவியலின்படி, அவ்வாகாயமே நான்முகன் எனும் பொழுது கொல்லரின் தொன்மைக் கதையில் வரும் நான்முகன் எல்லா உயிர்களையும் படைத்தது.

மீன்பிடிக்கச் செல்லும் பரதவர் ஆற்றல் வாய்ந்த மீனினை வலைக்குள் பிடிக்க முடியாது. மீன் வகைகளில் சுறாமீனை உயிருடன் இரும்பினால் வடிவமைக்கப்பட்ட எறியுளி எறிந்து பிடித்தனர். அந்த மீனெறியும், உளி தமிழ் மக்களில் கொல்லர் பற்றறையில் வடிவமைத்துக் கொடுக்கப்பட்டது. இதனைக் கணக்காயன் தத்தனார்.

**“கொல்வினைப் பொலிந்த கூர்வாய் எறியுளி”** **(குறுந்.304)**

என்ற பாடலடியால் சுட்டுவர்.

“கொல்வினை - கொல்லர்கள் செய்யும் தொழில், கொலைத் தொழிலிலே பொலிவு பெற்ற எனினுமாம்; எறியுளி படகிலிருந்து மீனின் மேல்

எறிதற்குரியதொரு கருவி என்க” என்பதாகும். எனவே உளி என்னும் சொல் ஒன்றன் உள்ளாகச் செல்லும் இயக்கப்பொருளில் வந்தது. எனவே உளி மீனின் உடலை உட்துளைத்து உயிரை நீக்கும் தன்மையுடையது. இவ்வுளி என்னும் கருவியை வடிவமைத்தவர் கொல்லர். உளியின் வடிவமைப்பில் கொல்லர் தொழில் திறனை உணரமுடிகிறது.

கொல்லர் மழைக்காலத்தின் இரவுப்பொழுதில் இரும்பை உலையில் காய்ச்சி அடித்துள்ளனர். அவ்விரும்பிலிருந்து பொறிகள் பறந்துள்ளதை எருமை வெளியனார் மகனார் கடலனார்,

**“இருள்கிழிப் பதுபோல் மின்னிவானம்**
**துளிதலைக் கொண்ட நளிபெயல் நடுநாள்**
**மின்மினி மொய்த்த முரவுவாய்ப் புற்றம்**
**பொன்னெறி பிதிரிற் சுடர வாங்கிக்**
**குரும்பி கெண்டும் பெருங்கை ஏற்றை**
**இரும்புசெய் கொல்லெனத் தோன்றும்” (அகம்.72:1-6)**

என்ற அடிகளால் தெளிவுபடுத்துவர். கொல்லரின் உலை மூக்கானது சூரியனைப் போன்று வெப்பமுடையதாக இருந்ததை மாமூலனார்,

**“ஊதுலைக் குருகின் உள்ளுயிர்த் தசைஇ**
**வேவது போலும் வெய்ய நெஞ்சமொடு**
**கண்படை பெறேஎன் கனவ ஒண்படை” (அகம்.55:7-9)**

என்ற அடிகளால் புலப்படுத்துவர்.

கொல்லன் ஊது உலையில் விசைத்து ஊதும் துருத்தியும் இருந்துள்ளதை ஆவூர் மூலங்கிழார் மகனார் பெருந்தலைச்சாத்தனார்,

**"வல்லோன் அடங்குகயிறமைப்பக் கொல்லன்**

**விசைத்துவாங்கு துருத்தியின் வெய்ய உயிரா"** (அகநா.224:2-3)

**"………………… உரறிக்கொல்லன்**

**ஊதுலைக் குருகு"** (நற்.125:3-4)

என்ற அடிகளால் உணர்த்துவர். இரும்பை உருக்கி அடிக்கின்ற கொல்லன் பழுக்கக் காய்ச்சிய இரும்பின் மீது பனை மடலால் சிறிது நீரினைத் தெளித்துள்ளதை நற்றமனார்,

**"இரும்பு செய் கொல்லன் வெவ்வுலைத் தெளித்த**

**தோய்மடல் சின்னீர் போல**

**நோய்மளி நெஞ்சிற்கு ஏமமாம் சிறிதே"** (நற்.133:9-11)

என்ற அடிகளால் சுட்டுவர். பொன்னால் செய்த அணிகலன்களை பொற்கொல்லர் செய்திருந்ததை தங்கால் பொற்கொல்லன் வெண்நாகனார்,

**"கருங்கால் வேங்கை நாள்உறு புதுப்பூ**

**பொன்செய் கம்மியன் கைவினை கடுப்ப"** (நற்.313:1-2)

என்ற அடிகளால் விளக்குவர்.

**உழவர்கள்**

மருதநிலத்து வயலின்கண் வேலை செய்பவர்கள் உழவர்கள் ஆவர். சோமசுந்தரனார் அவர்கள் "உழவர்கள் கூலிப்பொருட்டு உழுதொழில் செய்யும் வினையாளர்"[11] என்று குறிப்பிடுகிறார். இவர்கள் விதையின் விளைவாகிய

பெரும்பயனைக் கருத்தில் கொள்ளாமல் அன்றைய ஒருநாள் உணவாகிய கூலியை மட்டும் பெற்றுச் சென்றுள்ளதைப் பாரதம் பாடிய பெருந்தேவனார்,

**"வித்திய உழவர் நெல்லொடு பெயரும்**

**பூக்கஞல் ஊரன் தன்மனை**

**வாழ்க்கை பொலிக என வேட்டோமே"** **(ஐங்குறு.3:4-6)**

என்ற அடிகளால் புலப்படுத்துவர்.

எருமை உழவன் மலை போன்ற நெற்கூடுகளிற் நெற்கதிர்களைக் கட்டி வைத்திருப்பான். அவற்றை இரவெல்லாம் கண் விழித்துக் காவல் காப்பான். வைகறைப் பொழுதில் வறால் மீனைச் சோற்றுடன் கலந்து உண்பான். உண்ட மயக்கம் தீர்ந்தபின் உழத்தியரோடு நாற்று முடிகளை நடுவதற்குச் செல்வான். அதனைத் தூங்கலோரியார்,

**"மலைகண்டன்ன நிலைபுணர் நிவப்பின்**

**பெருநெற் பல்கூட்டு எருமை உழவ**

**கண்படை பெறாது தண்புலர் விடியல்**

**கருங்கண் வராஅல் பெருந்தடி மிளிர்வையோடு**

**புகர்வை அரிசிப் பொம்மற் பெருஞ்சோறு**

**கவர்படு கையை கழும மாந்தி**

**நீருறு செறுவின் நாறுமுடி யழுத்தநின்"** **(நற்.60:1-7)**

என்ற அடிகளால் சுட்டுவர்.

விளை நிலத்தில் உழுது விதைத்த நெல்லினை அறுப்பதற்குச் சென்ற உழவர்கள் மீன்களைப் பிடித்துக் கொண்டு வந்துள்ளதை மிளைகிழான் நல்வேட்டனார்,

**“அரிகால் மாறிய அம்கண் அகல்வயல்**

**மறுகால் உழுத ஈரச்செறுவின்**

**வித்தொடு சென்ற வட்டி பற்பல**

**மீனொடு பெயரும் யாணர் ஊர”** **(நற்.210:1-4)**

என்ற அடிகளால் விளக்குவர்.

உழவர்கள் பழங்கொல்லையை உழுவார்கள். அவ்வாறு உழும்பொழுது ஆரவாரமாக ஒலி எழுப்புவர். காலையில் விதைக்கும் பொருட்டு சிறிய வட்டிகளில் விதையை எடுத்துச் செல்வர். விதைப்பினை முடித்து மாலையில் வீடு திரும்பும் பொழுது வட்டி நிறையப்பூக்களைப் பறித்து வருவர். இதனை உரோடகத்துக் கந்தரத்தனார்,

**“முதைப்புனங் கொன்ற வார்கலியுழவர்**

**விதைக்குறு வட்டி போதொடுபொதுளப்**

**பொழுதோ தான்வந்தன்றே மெழுகான்**

**றூதுலைப் பெய்த பகுவாய்த் தெண்மணி**

**மரம்பயி லிறும்பி னார்ப்பச் சுரனிழிபு**

**மாலை நனிவிருந் தயர்மார்**

**தேர்வரு மென்று முரைவாராதே”** **(குறுந்.155:1-7)**

என்ற அடிகளால் சுட்டுவர்.

**உழத்தியர்கள்**

உழத்தியர்கள் நடவுவினையின் காரணமாக விடியற்காலையில் எழுவர். வரால் மீன் குழம்புடன் அரிசிச் சோற்றைக் கையேந்தி வாய்க்கொள்ள

உண்பர். நீர் நிரம்பிய வயலின்கண் நாற்றுக்களை முடியவிழ்த்து நடுதற் பொருட்டு நடுநரோடு செல்வர். இதனைத் தூங்கலோரியார்,

**"……………….. தண்புலர் விடியல்**
**கருங்கண் வராஅற் பெருந்தடிமிளிர் வையொடு**
**புகர்வை அரிசிப் பொம்மற் பெருஞ்சோறு**
**கவர்படு கையை கழுமமாந்தி**
**நீருறு செறுவின் நாறுமுடி அழுத்தநின்**
**நடுநரோடு சேரி"** **(நற்.60:3-8)**

என்ற அடிகளால் உணர்த்துவர்.

உழவர் செய்த தொழில் வருத்தம் நீங்க மாமரத்தின் காய்களை கொத்துக்களிலிருந்து கிள்ளி எடுத்து அவற்றோடு புளிக்கும் பதனைச் சேர்த்தாகிய கள்ளைப் பருகுதலை விற்றூற்று மூதெயினனார்,

**"வளியொடு சினைஇய வண்தளிர் மாஅத்துக்**
**கிளிபோல் காய கிளைத்துணர் வடித்து**
**புளிப்பதன் அமைத்த பதுக்குடமலிர் நிறை**
**வெயில் வெரிந் நிறுத்த பயில் இதழ்ப் பசுங்குடை**
**கயம் மண்டு பகட்டின் பருகிகாண் வர"** **(அகநா.37:7-11)**

என்ற அடிகளால் புலப்படுத்துவர்.

உழத்தியர் பூஞ்செடிகளை நட்டுப் பயிர் செய்வர். இவர்களது இளமகளிர் குருக்கத்திப்பூவுடன் பித்திகைப்பூ விரவிய பூக்களைத் தெருவில் விலைகூறி விற்றுத் திரிவர். இதனை மாறன்வழுதி,

**“துய்த்தலை இதழ பைங் குருக்கத்தியொடு**

**பித்திகை விரவுமலர் கொள்ளீரோ? என**

**வண்டுசூழ் வட்டியள் திரிதரும்**

**தண்டலை உழவர் தனிமடமகளே”** **(நற்.97:6-9)**

என்ற அடிகளால் நவிலுவர்.

பூவிற்கும் பெண், பாதிரியின் மலர்களை வண்டுகள் மொய்க்கும்படி வட்டியிலேந்தித் தெருக்களில் விலைகூறிச் செல்லுவாள். இதனைப் பெருங்கடுங்கோ,

**“……………….. துய்த்தலைப் பாதிரி**

**வாலிதழ் அலரி வண்டுபட ஏந்தி**

**புதுமலர் தெருவுதொறும் நுவலும்**

**நொதும லாட்டிக்கு”** **(நற்.118:8-11)**

என்ற அடிகளால் விளக்குவர்.

உழத்தியர் கொள்ளும், பயறும் பாலுடன் கலந்து சமைத்த அவிழ்க்கஞ்சியை உண்பர். இதனை விற்றூற்று மூதெயினனார்,

**“கொள்ளொடு பயிறுபால் விரைஇ வெள்ளிக்**

**கோல் வரைந்தன்ன வால் அவிழ் மிதவை”** **(அகநா.37:12-13)**

என்ற அடிகள் சுட்டும்.

**அரிநர்**

நெற்கதிர்களை அறுக்கும் அரிநர், தம் கூரிய அரிவாளினால் மலரையும், கதிரையும் தனித்தனியாக அறுத்தனர். இதனை அம்மூவனார்,

**“செந்நெல் அரிநர் கூர்வாட் புண்ணுறக்**

**காணார் முதலொடு போந்தெனப் பூவே**

**படையொடும் கதிரொடும் மயங்கிய படுக்கைத்**

**தன்னுறு விழுமம் அறிய மென்மெல**

**தெறுகதிர் இன்துயில் பசுவாய்திறக்கும்” (நற்.275:1-5)**

என்ற அடிகளால் தெளிவுபடுத்துவர். அவர்கள் நெற்கதிர்களைக் களத்திற்குக் கொண்டு சென்றுள்ளதை ஆலங்குடிவங்கனார்,

**“நெல்விளை கழனி நேர்கண் செறுவின்**

**அரிவனர் இட்ட சூட்டயல் பெரிய**

**இருஞ்சுவல் வாளை பிறழும் ஊரே” (நற்.400:2-4)**

என்ற அடிகளால் உணர்த்துவர்.

**களைஞர்**

உழவுத் தொழிலில் களைபறித்தல் என்பது முக்கியமானதாகும். “மருத நிலத்தில் வயல்களில் நெற்பயிர்களின் இடையே முளைத்திருக்கும் களையினைப் பறிப்பவர்கள்”[12] களைஞர் எனப்படுகின்றனர். இவர்கள் பயிரிடத்தேயுள்ள களையினை நீக்கியுள்ளனர். அதனைக் கருவூர் கண்ணம்பாளனார்,

**“கோடுடைக் கையர் துளர்எறி வினைஞர்**

**அரியல் ஆர்கையர் விளைமகிழ் தூங்க” (அகநா.184:13-14)**

என்ற பாடல் அடிகளால் சுட்டுவர். அவர்கள் களைபறிக்கும் போது பறையோசை போல ஆரவாரித்துள்ளனர். அதனை இடைக்காடனார்,

**"இரலை நன்மான் இனம் பரந்தவை போல்**

**கோடுடைத் தலைக்குடை சூடிய வினைஞர்**

**கறங்குபறைச் சீரின் இரங்க வாங்கி**

**களைகால் கழீஇய"** **(அகநா.194:6-9)**

என்ற அடிகளால் நவிலுவர்.

**களமர்**

நெற்களங்களில் நெற்போரைக் குவிப்பவர்களே களமராவர். இவர்கள் குறித்துக் குடவாயிற் கீரத்தனார்,

**"நீர்சூழ் வியன்களம் பொலியப்போர் பழித்துக்**

**கள்ளார் களமர் பகடுதலை மாற்றி**

**கடுங்காற் றெறியப் போகிய துரும்புடன்**

**காயற் சிறுதடி கண்கெடப் பாய்தலின்"** **(அகநா.366:2-5)**

என்ற அடிகளால் உணர்த்துவர்.

**பருத்திப்பெண்டிர்**

சங்ககாலத் தமிழர்கள் பருத்திநூல் நெசவில் சிறந்திருந்தனர். நெசவுத் தொழிலுக்கு அடிப்படையான பருத்தி தமிழகத்தில் மிகுதியாகக் கிடைத்தது. ஆடவர் நெசவினை மிக நேர்த்தியாகச் செய்யப் பெரிதும் உதவியவர்கள் பெண்களேயாவர். ஆடை நெய்யப் பயன்பட்ட பருத்தியை வில்லால் அடித்து அதிலுள்ள கொட்டையும், கோதும் நீக்கித் தூய்மை செய்வர். அதனைப் பரணர், வடமவண்ணக்கன் பேரிசாத்தனார்,

**"எஃகுறு பஞ்சிற்றாகி"** **(நற்.247:4)**

**"வில்லெறி பஞ்சி"** **(நற்.299:7)**

என்ற பாடலடிகளால் விளக்குவர். இத்தொழிலினைச் செய்த பெண்டிர் பருத்திப் பெண்டிர் எனப்பட்டனர். இங்ஙனம் நூல் நூற்பது பெண்களுக்குரிய தொழிலாய் அமையினும், கைம்பெண்களே பெரிதும் இத்தொழிலைச் செய்துள்ளனர் என்பதை மதுரைக் கண்ணத்தனார்,

**"ஆளில் பெண்டிர் தாளில் செய்த**

**நுணங்கு நுண் பனுவல்"** **(நற்.353:1-2)**

என்ற அடிகளால் தெளிவுபடுத்துவர். இதிலுள்ள 'ஆளில் பெண்டிர்' என்ற தொடர் பொருள்தேடி வந்து பாதுகாக்கும் கணவனை இழந்த கைம்மை மகளிரைக் குறிக்கும். இவர்கள் தனது அன்றாட வாழ்வாரத்திற்குப் பஞ்சினை நூற்றுள்ளனர்.

**பரத்தையர்**

'பர' என்ற வடசொல்லின் பொருள் 'மரபுக்கு மாறான' என்பதாகும். மரபுப்படி காதலித்துத் தலைவனை மணந்தாள் தலைவி. அந்நெறிக்கு மாறாக தலைவிக்குரிய தலைவனைக் காதலித்துக் கூடுபவள் பரத்தை ஆவாள். பொதுமகளைக் குறிக்கும் 'பரத்தை' என்ற சொல் சங்க அகப்பாடல்களில் பயின்று வந்துள்ளது. அச்சொல்லுக்கு 'அயலுறவு' என்ற பொருளைக் கூறமுடியும்.

திருமணம் என்ற நெறியின்றிக் கற்பு என்னும் கட்டுப்பாடு இன்றி ஒருவரையோ, பலரையோ நாடுகின்ற பெண்ணே 'பரத்தை' என்ற முடிவுக்கு

வர இயலும். இவர்கள் பலருக்கும் பொதுவாக இருப்பதால் ‘பொதுமகளிர்’ என்றும், திருமணம் மேற்கொள்ளாத காரணத்தால் ‘வரைவில் மகளிர்’ என்றும், பொருளையே பெரிதும் நாடுவதால் ‘பொருட்பெண்டிர்’ என்றும் பலவாறாகப் பெயரும் விளக்கமும் பெற்றுள்ளனர்.

‘பரத்தை’ என்பதற்குரிய ஆங்கிலச் சொல்லாகிய ‘prostitute’ என்பதற்கு வரையறை கூறும்பொழுது பொருள் கருதியோ அல்லது வேறு ஏதேனும் பயன் கருதியோ ஒன்றுக்கு மேற்பட்டவரோடு உடலுறவு கொண்டு வாழ்பவளே பரத்தை என்று கூறக்காணலாம்.

“முறையற்ற உடலுறவு, பொருட்பயன், அன்பின்மை போன்ற காரணங்களால் இப்பரத்தமை சமூகத்தில் நிகழ்கிறது. பொருள் ஒன்றே கருதிப் பலரையும் மருவி வாழ்ந்துள்ள சேரிப்பரத்தையையும், தலைவன் அன்பு கருதி அவனிடமே வாழும் இற்பரத்தையையும் சங்க காலத்தில் காணமுடிகிறது. ஆடவர் பலர்பால் பரந்து சென்று ஒழுகினைமயின் அவர் பரத்தையர் எனப்பட்டனர். பரத்தைமை என்பதற்கு ‘அயன்மை’ என்ற பொருளைக் கொண்டு திருமணத்திற்குப் புறம்பான உறவு (Extra marital relations) என்று பொருள் கொள்வதே பொருத்தமாகும்.”

பொருள் வறுமை மற்றும் பிற காரணங்களால் பரத்தையர் குலம் சங்கச் சமுதாயத்தில் தோன்றுவதற்கான, இன்னும் நீடிப்பதற்கான சூழல் இருந்துகொண்டே உள்ளது. சங்க காலத்தில் பரத்தையர் ஒழுக்கம் என்பது ஏற்பதும் மறுப்பதுமான நிலையைப் பெற்றிருந்தது. தலைவியர் பரத்தை ஒழுக்கத்தைக் கடிகின்றனர். மருதத்துறைப் பாடல்கள் அனைத்தும்

இச்சாயலுடையவை. இதன் காரணமாக குடும்ப மகளிர், பரத்தையர் ஆகிய இருவரும் ஆண்களால் புறந்தள்ளப்பட்டு சமுதாய மதிப்பு குறைவுபட்டவர்களாக இருந்துள்ளனர். இதனை அம்மூவனார்,

**"ஈண்டுபெருந் தெய்வத்து யாண்டுபல கழித்தென**
**பாரத்துறைப் புணரி அலைத்தபின் புடைகொண்டு**
**முத்துவிளைபோகிய முரிவாய் அம்பி**
**நல்எருது நடைவளம் வைத்தென உழவர்**
**புல்லுடைக் காலில் தொழில்விட்டாங்கு**
**நறுவிரை நன்புகை கொடாஅர் சிறுவீ**
**ஞாழலொடு கெழீஇய புன்னைஅம் கொழுநிழல்**
**முழவு முதற்பிணிக்கும் துறைவர நன்றும்**
**விழுமிதின் கொண்ட கேண்மை நொவ்விதின்**
**தவறு நற்கு அறியாய் ஆயின் எம்போல்**
**ஞெகிழ்தோள், கலுழ்த்த கண்ணர்**
**மலர்தீய்ந்த தனையர் நின்நயந்தோரே"** **(நற்றிணை.315:1-12)**

என்ற பாடலடியால் சுட்டுவர். தெய்வங்களின் பெயர்களால் அமைந்த ஆண்டுகள் வரிசையாக ஒன்றன்பின் ஒன்றாகக் கழிந்தன. நீராடு துறையைச் சார்ந்த கடல் நீரின் அலைகளால் அலைக்கப்பெற்றுப் பழையதாகிப் போன தொழில் செய்ய முடியாத முரிந்த வாயையுடைய தோணியை அது பயனற்றது என விட்டுவிடுவர். அது உழவுக்குப் பயன்படுத்திய எருதினை உழவுத் தொழில் செய்வோர் புல்லுடைய தோட்டத்தில் தன் தொழிலைச் செய்ய விடாதபடி விட்டுவிட்டதைப் போல் இருந்தது. இவ்வாறு

கடற்பயணத்திற்கு தன் முதுமை கருதி உதவாத தோணியை நல்ல மணத்தை உடைய புகை முதலியவற்றைக் காட்டி, ஞாழல் மரத்துடன் புன்னை மரநிழலும் கூடிய பகுதியில் கட்டி வைத்திருக்கும் துறையை உடைய தலைவன் என்பது இப்பாடலின் பொருளாகும்.

ஆண்டுபல ஆனதால் தோணியும் எருதும் அதன் முதுமை கருதி விலக்கி வைக்கப்பெற்றுள்ளது. இத்துறையை உடையவன் தலைவன் என்று பரத்தை குறிப்பிடுகிறாள். முதுமை கருதி சிலவற்றை விலக்கும் போக்கும் சங்க காலத்தில் இருந்து வந்துள்ளது. இப்பாடலின் வழியாக சங்க காலத்தில் பரத்தை விலக்கப்படுவதும் அதிலும் குறிப்பாக வயது ஏறஏறப் பரத்தை என்ற குலத்தவர் சமுதாயத்தில் விலக்கத்திற்கு ஆளாக்கப்பெறுகிறார்கள். இதன் காரணமாக இவர்கள் சங்க காலத்தில் விளிம்புநிலையில் வாழ்ந்துள்ள செய்தியினை அறியமுடிகிறது.

பரத்தை மரபினர் தலைவர்களை அபகரித்துத் தன்னை வளப்படுத்திக் கொள்ளும் வழியினர். இவர்கள் விளிம்புநிலை மக்களாக சங்க காலத்தில் வாழ்ந்துள்ளனர். இதனைக் கபிலர்,

**“விழவும் மூழ்த்தன்று முழவும் தூங்கின்று**
**எவன் குறித்தனள் கொல்? என்றிஆயின்**
**தழை அணிந்து அலமரும் அல்குல் தெருவின்**
**இளையோல இறந்த அனைத்தற்கு பழவிறல்**
**ஓரிக்கொன்ற ஒரு பெருந்தெருவில்**
**காரி புக்க நேரோர் புலம்போல்**
**கல்லென்றன்றால் ஊரே அதற்கொண்டு**

**காவல் செறிய மாட்டி ஆய்தொடி**

**எழில்மா மேனி மகளிர்**

**விழுமாந்தனர் தம் கொழுநரைக் காத்தே" (நற்றிணை.320:1-10)**

என்ற பாடலடியால் விளக்குகிறார். இதேபோன்று குறுந்தொகையில் 8, 80, 164, 370, 364 ஆகிய பாடல்களிலும் கலித்தொகையில் பாலைக்கலி 35வது பாடலிலும், ஐங்குறுநூற்றில் 24, 31, 37, 38, 40, 42, 44, 45, 46, 48, 49, 50, 53 போன்ற பாடல்களிலும் பரத்தையர் பற்றிய செய்தியானது இடம் பெற்றுள்ளது.

**பரதவர்**

நெய்தல் நிலத்தை வாழிடமாகக் கொண்டவர்கள் பரதவராவர். இவர்களைக் குறித்து தமிழ்ச்சொற்களஞ்சியம் "கடலும் கடல் சார்ந்த பகுதியும் நெய்தலாகும். இங்கு வாழும் மக்கள் பரதவர் எனப்படுவர். தென்றிசைக்கணாண்ட ஒருசார் குறுநில மன்னர்"[13] என்று குறிப்பிடுகின்றது. இன்று இவர்கள் மீனவர் என்றே அழைக்கப்படுகின்றனர். இவர்கள் கடலை வாழ்வாதாரமாகக் கொண்டு வாழ்பவர்கள். "பரதவர் என்ற சொல் 'பர' என்ற பகுதி அடியாகப் பிறந்தது. பரவை (கடல்) என்ற சொல்லோடு தொடர்புடையது. பரவை, பரப்பு என்ற சொற்கள் 'விரிதல்' என்ற பொருளைத் தரும். பொருட்சிறப்புக் குறிக்கும் 'து' என்ற உறுப்பு 'பர' என்றும் அடிச்சொல்லோடு சேரப்'பரது' என்னும் சொல் பிறக்கும். இதனோடு 'அர்' விகுதி சேர்ந்தமையால் 'பரதர்' என்னும் சொல் பிறந்திருக்கலாம் என்று கே.ஜெரார்டுராமன்"[14] குறிப்பிடுவார்.

வி.கனகசபை "பரதவர்கள் இராமநாதபுரம், தூத்துக்குடி, திருநெல்வேலி கன்னியாகுமரி ஆகிய மாவட்டங்களின் கடற்கரைப் பகுதிகளில் வாழ்கின்றனர். இப்பகுதியில் வாழும் பரதவர்களை நாக வகுப்பினர் என்று அறிஞர்கள் கருதுகின்றனர். அதனைப் 'பரதவர்' கடற்கரையில் வாழ்ந்து மீன் பிடிப்பதாலோ, கடல் வணிகத்தாலோ வாழ்க்கை நடத்திய நாக வகுப்பினர் ஆவர். அவர் முத்தும், சங்கும் எடுக்கக் கடலில் மூழ்கினர். அத்துடன் மூழ்குமிடத்தில் சுறாக்கள் வராமல் தடுப்பதற்குரிய மந்திரமும் அவர்கள் அறிந்திருந்தனர். அவர்கள் தென்பாண்டி நாட்டில் கொற்கையைச் சூழ்ந்த இடத்திலேயே மிகவும் வலிமை மிக்கவர்களாய் இருந்தார்கள். மீனும், ஊனும் உண்டு அவர்கள் வலிமை வாய்ந்தவர்களாய் இருந்தனர். விற்படை ஏந்தி அஞ்சாத தீரங்காட்டிப் போரிட்டதனால், எதிரிகளுக்கு அவர்கள் அச்சமூட்டினர்"[15] என்று குறிப்பிடுகிறார். மேலும் 'பரதர் மலிந்த பயங்கெழு மாநகர்' (சிலம்பு.2:2) என்ற தொடரில் வரும் 'பரதர்' என்ற சொல்லுக்குக் 'கடலோடிகள்' என்ற பொருளை அரும்பத உரை தருகிறது. "சிந்துசமவெளிப் பகுதியில் வாழ்ந்த மக்கள் ஆரியர்களின் (இமயமலை, விந்தியமலை இடைப்பட்ட பகுதியில் வாழ்ந்த மக்கள்) வருகைக்குப் பின்னர் அப்பகுதியிலிருந்து நகர்ந்து கடல் வழியாகவும், நிலத்தின் வழியாகவும் பல இடங்களில் பரவி வாழ்வை மேற்கொண்டனர். அவர்களில் கடலின் வழியாகப் பரவிக் கடலோரங்களில் வாழ்ந்தவர் பரதவர் என அழைக்கப்பட்டிருக்கலாம்"[16] என்பர் ஐ.அல்பேரிஸ். "'பரவர்' அல்லது 'பரதர்' எனப் பரதவர் அழைக்கப் பெறுகின்றனர். இவர்கள் பாண்டிய வம்சத்தைத் தோற்றுவித்தவர்கள். மீன் கொடியினைக் கொண்டு முதல் தமிழ் அரசைத் தோற்றுவித்தவர்கள்

இயற்கைச் சீற்றங்களால் எல்லைகள் மாறுதல் ஏற்பட்டு போர் மறவர்களாக மாறினர்."[17]

"தென்தமிழ்நாட்டின் கிழக்குக் கடற்கரையிலமைந்த காவிரி நதிப்படுகைக்கும், தாமிரபரணி ஆற்றிற்கும் இடைப்பட்ட பகுதியில் இச்சமூகத்தினர் (பரதவர்) வாழ்ந்ததை அடையாளம் காணமுடிகிறது. இவை தற்கால திருநெல்வேலி, இராமநாதபுரம் மாவட்டங்களை உள்ளடக்கிய பகுதி எனலாம்."[18]

பரதவர் குடியிருப்புகள் பாக்கம் என வழங்கப்பெறும். இதனை சாகலாசனார்,

**"புலாஅல் மறுகின் சிறுகுடிப் பாக்கத்து**
**இனமீன் வேட்டுவர்"** **(அகநா.270:2-3)**

என்ற அடிகளால் உணர்த்துவர். பரதவர்சேரி புலால் நாறும் தன்மையுடையது. அதனை உலோச்சனார்,

**"புலாலஞ் சேரிப் புல்வேய் குரம்பை"** **(அகநா.200:2)**

என்ற அடிகளால் விளக்குவர். இவர்கள் புல்லால் வேயப்பட்ட குறிய இறப்பினையுடைய (தாழ்வாரம்) குடிசைகளில் வாழ்ந்துள்ளதை உலோச்சனார்,

**"குறியிறைக் குரம்பைக் கொலைவெம் பரதவர்"**
**(அகநா.210:1)**

என்ற அடிகளால் புலப்படுத்துவர். பரதவர் வேழக்கோலை நிரைத்து மரக்கொம்புகளை இடையிடையே கலந்து தாழை நாரால் கட்டித் தருப்பைப்

புல் வேயப்பட்டக் குறிய தாழ்வாரமுடைய குடிலில் வாழ்வர். முள்ளிகளால் வேயப்பட்டக் குறிய கூரையை உடைய வீடுகளிலும் வாழ்வர்.

பரதவர் வாழ்க்கை முழுவதும் கடலோடு தொடர்புடையதாகும். கடல் அலையின் தன்மை, காற்று, தட்பவெட்பநிலை இவற்றிற்கேற்பக் கடலுக்குச் செல்வர். அதனால் காலை, பகல், இரவு ஆகிய எல்லாக் காலங்களிலும் மீன் பிடிக்கச் செல்வது நடைமுறையாகக் கொண்டிருந்தனர்.

நாட்காலையிலும், பகலிலும் மீன் பிடிக்கச் செல்வோர் மாலையில் கரை திரும்புவர். இரவில் மீன் பிடிக்கச் செல்வோர் நாட்காலையில் கரை திரும்புவர். பரதவர் மீன்பிடித்தலோடு உப்பு விளைவித்தல், முத்தெடுத்தல் போன்ற செயல்களிலும் ஈடுபடுவர். கடலையே நம்பி வாழும் பரதவர் பொழுது போக்காகப் பல விளையாட்டுக்களை ஆடிமகிழ்வர்.

பரதவர் நாட்காலையில் தோணியில் சென்று மீன் வேட்டையாடுவர். அதனை மாமூலனார்,

**"வாள்வாய்ச் சுறவின் பனித்துறை நீந்தி**
**நாள் வேட்டு எழுந்த நயனில் பரதவர்**
**வைகு கடல் அம்பி"** **(அகநா.187:21-23)**

என்ற அடிகளால் விளக்குவர்.

காலை வேட்டத்திற்குச் சென்ற புற்கென்ற தலையினையுடைய பரதவச் சிறுவர் நுண்ணிய கயிற்றாலாகிய வலையில் மீன் வேட்டையாடுவர். அதனை நக்கீரர்,

**“……………….. நாட்புலம் போகிய**

**கொழுமீன் வல்சிப் புன்தலைச் சிறாஅர்**

**நுண் ஞாண் அவ்வலை”** **(அகநா.290:2-3)**

என்ற அடிகளால் சுட்டுவர்.

இளைஞரும், முதியவருமாகிய நுளையர் சுற்றத்துடன் சேர்ந்து கடலில் மீன் பிடிக்கச் செல்வர். வலையில் மீன்களைப் பிடித்து ஆரவாரம் பெருகக் கரைக்கு இழுத்து வருவர். பெரிய மீன்களை எறியுளி கொண்டு தாக்கிப் பிடிப்பர். மீன்களை அதிகமாகப் பிடித்த பரதவர் அவற்றை நுண்ணிய மணலிடத்தே புலர்த்துவர். தம்மிடம் வந்து இரப்போர்க்குக் கலன்கள் நிறைய மீன்களைக் கொடுப்பர்.

‘பரதவர் மீன்களைப் பல கூறாகச் செய்து விலை கூறி விற்பர்.’ பரதவர் பிடித்து வந்த மீன்களைத் தங்கைமார் தெருக்களில் இன்ன விலையின என்று கூறி விற்பர். பசிய மீனை விற்று அதற்கு ஈடாக வெண்ணெல்லைப் பெற்றுள்ளதனை நக்கீரர்,

**“பசுமீன் நொடுத்த வெண்ணெல்”** **(அகநா.340:14)**

என்ற அடிகளால் புலப்படுத்துவர். பரதவர் புன்னை மரத்தின் நிழலில் தங்கிக் கடலில் புகுவதற்கான செவ்வியை எதிர்நோக்கியிருப்பர். அப்பொழுது சிக்குண்டு கிடக்கும் வலையை மணலில் பரப்பிச் செம்மைப்படுத்துவர். அவ்வாறு செவ்வியை எதிர் நோக்கியிருத்தலை ‘ஒண்பதம் நோக்கி’ என்பர் அம்மூவனார்.

பரதவர் தோணியில் வலிய நூற்கயிற்றால் செய்யப்பட்ட வலையைக் கொண்டு மீன் பிடிக்கச் செல்வர். பரதவர் இனத்து இளையர் படகின்மேல் ஏறிக் கடலகத்தே சென்று வலைவீசிச் சுறாமீன்களோடு வலிய பெருமீன்களையும் பிடித்துள்ளனர். அம்மீன்களைத் துண்டங்களாக்கிப் படகில் ஏற்றி வந்துள்ளதை நக்கீரர்,

**"……………………… திண்திமில்**

**எல்லுத் தொழில் மடுத்த வல்வினைப் பரதவர்" (அகநா.340:18-19)**

என்ற அடிகளால் விளக்குவர். அவர்கள் சில தருணங்களில் பகலில் மீன்பிடிக்கச் செல்லாதிருந்துள்ளனர். (அகநா.260:5-10)

பரதவர் மீன் வேட்டை நன்கு கை கூடியதனால் தம் கடற்கரையூரில் வலையின் பயனைப் பாராட்டிக்கூறி, அயிரை மீனை அனைவருக்கும் பகுத்துக் கொடுப்பர். வேட்டையாடி வந்த சுறாமீன் கொள்ளையினைப் பாக்கத்தில் பலருக்கும் பகுத்து வழங்குவர்.

பரதவர் விளைவித்த உப்பினை உப்பு வணிகரிடம் விற்பர். அதற்காக அவ்வணிகரது வரவு நோக்கி உப்பினைத் தொகுத்துக் குவித்து வைத்திருப்பர். இவ்வுப்பினை விற்று, மாறாக வெண்ணெல் பெறுவர்.

பரதவர் பகலில் பெரிய கடற்பரப்பில் சுறாமீனை ஒதுக்கி முத்தினை மூழ்கி எடுத்து அதனை விலை கூறி விற்றுள்ளதை அம்மூவனார்,

**"வலைபடு முத்தம் பரதவர் பகரும்" (ஐங்.195:1)**

என்ற அடிகளால் விளக்குவர்.

பரதவர் மாலைப்பொழுதில் மீன்களின் கொழுப்பைக் காய்ச்சிப் பெற்ற நெய்யினைக் கொண்டு விளக்குகளை மனைகளில் ஏற்றியுள்ளதை மதுரைச் சுள்ளம் போதனார்,

**"……………….. புன்கண் மாலை**

**……………………………………..**

**மீன்நிணம் தொகுத்த ஊன்நெய் ஒண்சுடர்"** (நற்.215:3-5)

என்ற அடிகளால் உணர்த்துவர். மீன் எண்ணெயை ஊற்றிய கிளிஞ்சல்களை மாலை நேரத்தில் விளக்காகக் கடற்பரப்பில் பயன்படுத்தியுள்ளதை,

**"மீன்நெய் அட்டிக் கிளிஞ்சல் பொத்திய**

**சிறுதீ விளக்கில்"** (நற்.175:3-4)

என்ற அடிகளால் சுட்டுவர். பரதவர்கள் கடலில் மீன் பிடிக்கச் சென்ற போது படகில் பல விளக்குகளைக் கொண்டு சென்றுள்ளதை மாமூலனார், பேரிசாத்தனார்,

**"மீன்கொள் பரதவர் கொடுந்திமில் நளிசுடர்"** (அகநா.65:11)

**"எல்லிமிழ் பனிக்கடல் மல்குசுடர்க் கொளீஇ**

**எமரும் வேட்டம் புக்கனர்"** (நற்.67:8-9)

என்ற அடிகளால் உணர்த்துவர். இரவில் மீன் பிடிக்கச் செல்லும் பொழுது விரைவாகச் சென்று தைக்கக்கூடிய எறியூசிகளைப் படகுகளில் கயிற்றினடியில் சேர்த்துக் கட்டியிருப்பர். அதில் ஒள்ளிய விளக்குகளை ஏற்றி நள்ளிரவில் மீன் வேட்டைக்குச் செல்வது பரதவர்களின் வழக்கமாக இருந்துள்ளது.

நெய்தல் நில மகளிர் நுளைத்தியர், பரத்தியர் எனப்படுவர். இவர்கள் மீன்விற்றல், மீன் உணக்கல், உப்பு விற்றல், கள் காய்ச்சுதல், உணவு சமைத்தல் ஆகிய பணிகளைச் செய்துள்ளனர். பரதவர்கள் நாட்காலையில் பிடித்து வந்த மீன்களைப் பரதவ மகளிர் பல கூறுகளாகச் செய்து விலை கூறி விற்றுள்ளதை முடங்கிக் கிடந்த நெடுஞ்சேரலாதன்,

**"பாடுபல அமைத்து கொள்ளை சாற்றி"** **(அகநா.30:10)**

என்ற அடிகளால் உணர்த்துவர். பரத்தியர்கள் தெருக்களில் மீனினை விலைகூறி விற்றலை மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச்சாத்தனார்,

**"ஓங்கு திரைப் பரப்பின் வாங்கு விசைக் கொளீஇ**
**திமிலோன் தந்த கடுங்கண் வயமீன்**
**தழைஅணி அல்குல் செல்வத் தங்கையர்**
**விழவு அயர் மறுகின் விலை எனப் பகரும்"** **(அகநா.320:1-4)**

என்ற அடிகளால் புலப்படுத்துவர்.

பரதவ மகளிர் பரதவர்கள் பிடித்து வந்த மீன்களுள் விற்றது போக எஞ்சியவற்றையும், விற்பனைக்குரிய காலங்கடந்து பிடித்தவற்றையும் உப்பிட்டு உலரவைப்பர். பரதவ மகளிர் பகற்பொழுதுகளில் மீன் விற்றலை உணக்குவர். அதனைக் கவரவரும் புள்ளினங்களை விரட்டும் பொருட்டு அங்கேயே தங்குவர். சுறா மீன்களில் அறுத்தத் தசைகளை உணக்குவது குறித்து அவற்றைக் கவரவரும் புள்ளினங்களை ஓட்டிக் காவல் புரிபவர். அதனை நெய்தல் தத்தனார், மருங்கூர்கிழார், பெருங்கண்ணனார் போன்றோர்,

**“நிணச்சுறா அறுத்த உணக்கல் வேண்டி**

**இனப்புள் ஒப்பும்”   (நற்.45:6-7)**

**“படுபுள் ஓப்பலின் பகல் மாய்ந்தன்றே”   (நற்.49:4)**

**“.................................... எந்தை**

**புணர்ந்திரைப் பரப்பகம் துழைஇத் தந்த**

**பன்மீன் உணங்கற் படுபுள் ஒப்பதும்”   (அகநா.80:4-6)**

என்ற அடிகளால் புலப்படுத்துவர். “பரதவ மகளிர் உப்பினை விற்று மாறாக வெண்ணெல் பெற்றுள்ளதைக் கல்லாடனார்,

**“நீல்நிறப் பெருங்கடல் புக்கனன்யாயும்**

**உப்பை மாறி வெண்ணெல் தரீஇ”   (குறுந்.269:4-5)**

என்ற அடிகளால் தெளிவுபடுத்துவர். பரதவ மகளிர் உப்பு விற்றுப் பெற்ற நெல்லினில் சமைத்த வெண்சோற்றை அயிலை மீன் குளம்புடன் தன் தந்தைக்குக் கொடுத்துள்ளதைக் குடவாயிற் கீரத்தனார்,

**“கொடுந்தொழில் முகந்த செங்கோல் அவ்வலை**

**நெடுந்திமிழ் தொழிலொடு வைகிய தந்தைக்கு**

**உப்பு நொடை நெல்லின் மூரல் வெண்சோறு**

**அயிலை துழந்த அம்புளிச் சொரிந்து**

**கொழுமீன் தடியொடு குறுமகள் கொடுக்கும்”   (அகநா.60:2-6)**

என்ற அடிகளால் விளக்குவர்.

**உமணர்கள்**

கடற்பரப்பின் கண் விளையும் 'உப்பினை விற்பார்'[19] உமணர் என்றழைக்கப்படுகின்றனர். உமணர்கள் வண்டிகளில் உப்பை ஏற்றிச் செல்லும் போது அவை மணலில் மடுத்து ஏற்படுத்தும் ஓசையினைக் கேட்ட நாரைகள் அஞ்சியுள்ளதை அம்மூவனார்,

> **"……………….. உமணர்**
> **வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றிக்**
> **கணநிரை கிளர்க்கும் நெடுநெறிச் சகடம்**
> **மணல் மடுத்து உரரும் ஓசை கழனி"** (நற்.4:7-10)

என்ற அடிகளால் உணர்த்துவர். உமணர்கள் குன்றைப்போல உப்பின் குவியலை மலை நாட்டகத்தே கொண்டு போய் விலைகூறி விற்கின்றனர். இவர்கள் நிலை இல்லாத வாழ்க்கையை உடையவர்கள். அவர் உப்பு ஏற்றிச் சென்ற வண்டி, உடைந்து போனதால் அவ்விடத்திலேயே அவ்வண்டியை விடுத்துச் சென்றுள்ளதை அம்மூவனார்,

> **"உவர்விளை உப்பின் குன்றுபோல் குப்பை**
> **மலையுய்த்துப் பகரும் நிலையா வாழ்க்கைக்**
> **கணங்கொள் உமணர் உயங்குவயின் ஒழித்த**
> **பண்அழி பழம்பார் வெண்குருகு ஈனும்"** (நற்.138:1-4)

என்ற அடிகளால் விளக்குவர். அவர்கள் வண்டியில் வலிய எருதுகளைப் பூட்டிச் சென்றுள்ளதை முடங்கிக்கிடந்த நெடுஞ்சேரலாதன்,

**“உப்பொய் உமணர் அருந்துறை போக்கும்”** **(அகநா.30:5)**

என்ற அடிகளால் உணர்த்துவர். உமணர்கள் பெரிய கோலைக் கையில் வைத்திருப்பர். உப்பின் விலையைக் கூறிக்கொண்டு வெடிப்புகளுடைய குன்றுகள் கிடக்கும் வழியிற் செல்வர். இவ்வியல்பினராகிய உமணரது பெண் அழகியவளாக விளங்குவர். இவர்கள் வளைகள் ஒலிக்கக் கைவீசி நடந்து ‘நெல்லுக்கு வெள்ளுப்பு’ எனச் சேரியிடத்தே விலை கூறுவாள். அதனை அம்மூவனார்,

**“கதழ்கோல் உமணர் காதல் மடமகள்**
**சில்கோல் எல்வளை தெளிர்ப்ப வீசி**
**நெல்லின் நேரே வெண்கல் உப்பெனச்**
**சேரி விலைமாறு கூறலின் மனையா”** **(அகநா.140:5-8)**

என்ற அடிகள் புலப்படுத்தும். உமணர், மறவர் விட்டுச் சென்ற தடியினை சோறு சமைப்பதற்கு விறகாகப் பயன்படுத்திக் கொண்டதைத் தொண்டியாமூர்ச் சாத்தனார்,

**“ஞெலிகோல் சிறுதீ மாட்டி ஒலி திரைக்**
**கடல்விளை அமிழ்தின் கணஞ்சால் உமணர்**
**சுனைகொள் தீநீர்ச் சோற்றுலைக் கூட்டும்”** **(அகநா.169:5-7)**

என்ற அடிகளால் விளக்குவர். உமணர்கள் செருப்பணியும் வழக்கம் உடையவர்கள். பாதிரி மரத்தின் பூவை அலரியோடு இடையே வைத்து ஓலையினால் மாலையாகத் தொடுப்பர். அவ்வாறு தொடுத்த மாலையை அணிந்திருப்பர். இவர்கள் கூட்டமாக ஓர் ஊர் குடிஎழுந்து செல்வதைப் போலச் செல்வர். உப்பைச் சுமந்து அரிய சுரத்தைக் கடக்கும் வலிய

தாளுடைய நல்ல மாடுகளின் கழுத்திற் கட்டிய வளைந்த மணிகள் விடும் ஓசை, உமணர் இதழை மடித்து விடும் சீழ்க்கை ஓசையோடு சேர்ந்து செல்லும். அதனை ஒரோடோகத்துக் கந்தரத்தனார்,

**"அத்தப் பாதிரித் துய்த்தலைப் புதுவீ**
**எரியிதழ் அலரியொடு இடைபட விரைஇ**
**வண்தோட்டுத் தொடுத்த வண்டுபடு கண்ணித்**
**தோல்புதை சிரற்றடிக் கோலுடை உமணர்**
**ஊர் கண்டன்ன ஆரம் வாங்கி**
**அருஞ்சுரம் இவர்ந்த அசைவில் நோன்தாள்**
**திருந்து பகட்டியம்பும் கொடுமணி புரிந்தவர்**
**மடிவிடு வீளையொடு கடிதெதி ரோடி**
**ஓமையம் பெருங்காட்டு உரூஉம்"** **(அகம்.191:1-9)**

என்ற அடிகளால் தெளிவுபடுத்துவர். உமணர்கள் ஓரிடம்விட்டு மற்றோரிடம் புறப்படும் பொழுது, புள் சகுனம் பார்த்துள்ளதை மதுரை எழுத்தாளன் சேந்தம்பூதனார்,

**"அணங்குடை முந்நீர் பரந்த செறுவின்**
**உணங்குதிறம் பெயர்ந்த வெண்கல் அமிழ்தம்**
**குடபுல மருங்கின் உய்ம்மார் புள்ளோர்த்துப்**
**படையமைத் தெழுந்த பெருஞ்செய் ஆடவர்"** **(அகம்.207:1-4)**

என்ற அடிகளால் விளக்குவர். உமணர்கள் வழியிடைக் கூவலைத் தோண்டி நீர் அருந்தியுள்ளனர். அக்கூவலில் ஊறிய நீரை அவ்வழியிடை வரும் புதிய மாக்கள் உண்டுள்ளதை மாமூலனார்,

**“கல்லுடை அதர கானம் நீந்தி**

**கடனீர் உப்பின் கணஞ்சால் உமணர்**

**உயங்கு பக டுயிர்ப்ப அசைஇ முரம் பிடித்து**

**அகலிடங் குழித்த அகல்வாய்க்கூவல்**

**ஆறு செல்வம்பலர் அசைவிட ஊறும்”** (அகம்.295:8-12)

என்ற அடிகளால் விளக்குவர்.

உமணர்கள் வண்டிகளில் உப்பு ஏற்றிச் செல்லும் போது குரங்குகளைக் கொண்டு சென்றதை நக்கீரனார்,

**“உப்பொய் உமணர் ஒழுகையொடு வந்த**

**இளைப்படு பேடை யிரியக் குரைத்தெழுந்து**

**உருமிசைப் புணரியுடைதரும்**

**பெருநீர் வேலியெஞ் சிறுநல்லூரே”** (அகம்.310:14-17)

என்ற அடிகளால் விளக்குவர்.

உமணர் தாம் கொண்டு சென்ற உப்பினைப் பண்டமாற்றில் விற்றுள்ளதை உலோச்சனார்,

**“உமணர் தந்த உப்புநொடை நெல்லின்**

**அயினிமா இன்று அருந்த”** (நற்.254:6-7)

**“தம்நாட்டு விளைந்த வெண்ணெல் தந்து**

**பிறநாட்டு உப்பின் கொள்ளைச் சாற்றி**

**நெடுநெறி ஒழுகை நிலவு மணல் நீந்தி**

**அவணுறை முனிந்த ஒக்கலொடு புலம்பெயர்ந்து**

**உமணர் போகலும் இன்னாதாகும்"** **(நற்.183:1-5)**

என்ற பாடலடியால் எடுத்துரைக்கின்றனர்.

**வலைஞர்**

வலைஞர் குறித்த செய்தி பட்டினப்பாலையில் உள்ளது. அவர்கள் மீன்பிடித்து வாழ்ந்துள்ளதைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

**"நீர்நாப் பண்ணும் நிலத்தின் மேலும்**

**ஏமாப்ப இனிது துஞ்சி**

**கிளை கலித்துப் பகை பேணாது**

**வலைஞர் முன்றிலில் மீன் பிறழவும்"** **(ப.பா.194-197)**

என்ற பாடலடிகளால் உணர்த்துவர்.

**கள்அடு மகளிர்**

கள் உள்ள பானையினை இடையில் சுமந்து வந்த கள் விற்கும் மகளிர் தான் சுமந்து வந்த பானையிலுள்ள கள்ளினைப் போர் வீரர்களுக்குக் கொடுத்துள்ளதை வேம்பற்றூர்க்குமரனார்,

**"அரியல் பெண்டிற் அல்குற் கொண்ட**
**பகுவாய்ப் பானைக்குவிமுளை சுரந்த**
**அரிநிறக் கலுழி ஆரமாந்தி**
**செருவேட்டுச் சிலைக்கும் செங்கண் ஆடவர்"** **(அகம்.157:1-4)**

என்ற அடிகளால் உணர்த்துவர். சங்க காலத்தில் இருந்த பெண்களில் ஒரு சாரார் 'கள்' தயாரித்து விற்கும் தொழிலிலும் ஈடுபட்டிருந்ததை இதனால் உணரமுடியும்.

**எயினர்**

பாலை நிலத்தில் வாழும் மக்களாக எயினர், எயிற்றியர் குறிக்கப்படுகின்றனர். எயினரின் முக்கியத் தொழில் வழிப்பறி செய்வதாகும். எயினர் என்ற சொல் வழக்கொழிந்துவிட்டது. கள்ளர் என்ற சொல் சங்க காலம் தொடங்கி இன்றுவரை வழக்கில் உள்ளது. இவர்களின் தொழிலாக வழிப்பறி செய்வதை சங்க இலக்கியங்கள் குறிப்பிட்டுள்ளது.

"கள்ளர் ஒருவகை சாதியார். இவர்களுக்கு இப்பெயர் தொழிலால் வந்ததாம். இவர்கள் தலைவன் அம்பலக்காரன். இவன் சொற்படியே மற்றவர் நடக்க வேண்டும் என அபிதான சிந்தாமணி குறிப்பிடுகிறது. இவர்கள் மேலூர், வெள்ளானூர், சேற்றுக்குடி, கீழ்நாடு முதலிய இடத்தில் உள்ளனர் என எட்கர் தர்ட்ஸன் கூறுகிறார். தமிழக அரசு வெளியிட்ட சாதிப்பட்டியலில் வரிசை எண் 64-இல் கள்ளர் மட்டுமின்றி அவர்களை ஈசநாட்டுக்கள்ளர், கந்தர்வக்கோட்டை கள்ளர், கட்டப்பால் கள்ளர், பிறமலைக்கள்ளர், பெரியகுரியூக்கள்ளர், கள்ளர்குலத் தொண்டைமான் என்ற பிரிவுகளும் இருப்பதாகத் தெரிவிக்கிறது. கள்ளர், மறவர், கணத்ததோர் அகமுடையார் மெல்ல மெல்ல வெள்ளாளரானார் என்ற பழமொழியும் உண்டு. தொடக்கத்தில் இவர்கள் காவல் தொழில் செய்ததாகவும் கொங்குக் களஞ்சியம் கூறுகிறது. பெரும்பாலும் சங்க இலக்கியத்திலுள்ள பாலைநில மக்கள் வேட்டையாடுதல், ஊன் உலர்த்தல், பூவிற்றல், கள்விற்றல், உணவு சேகரித்தல் போன்ற தொழில்களை மேற்கொண்டுள்ளனர்."[20]

**எயிற்றியர்**

எயிற்றியர்கள் ஊன் உலர்த்தல், பூவிற்றல், கள்விற்றல், உணவு சேகரித்தல் போன்ற தொழிலை மேற்கொண்டுள்ளனர். எயிற்றியர் ஊன் உலர்த்திய செய்தி ஐங்குறுநூற்றில் ஒரு பாடலில் காணப்படுகின்றது.

எயிற்றியர், பகற்பொழுதில் விலங்குகளைக் கொன்று தன் தமையன்மார் கொணர்ந்த நிணமுடைய ஊனை வெயிலில் காயவைப்பர். அவ்வூனை உண்ண வரும் பறவைகளை ஓட்டுவர். இதனை ஓதலாந்தையார்,

**"கணமா தொலைச்சித் தன்னையர் தந்த**

**நிணவூன் வல்சிப் படுபுள்ளோப்பும்**

**நலமா ணெயிற்றி" (ஐங்.365:1-3)**

என்ற அடிகளால் புலப்படுத்துவர். எயினர் மகளிர் பூவிற்றல் தொழிலை மேற்கொண்டதை மாமூலனார்,

**"பைங்குழைத் தழையர் பழையர் மகளிர்**

**கண்திரள் நீள் அமைக்கடிப்பின் தொகுத்து**

**குன்றகச் சிறுகுடி மறுகுதொறும் மறுகும்" (அகம்.331:5-7)**

என்ற அடிகளால் தெளிவுபடுத்துவர். இலுப்பை மரங்களின் பூக்களை பெண் கரடிகளின் கூட்டம் தின்றதுபோக எஞ்சிய மரங்களின் பூக்களை எயினர் மகளிர் மூங்கில் குழாயில் திரட்டிச் சீறூரின் தெருக்கள் தோறும் சென்று விற்றுள்ளனர்.

**கள் விற்றல்**

போதைதரும் கள்ளை பாகுபாடில்லாமல் அனைவரும் உண்டு மகிழ்ந்துள்ளனர். பொழுது சாய்ந்துவிட்டால் மறவர் கள்ளுண்டு களிப்பர். இருள்வரக் கள் விற்கும் மகளிர் மனையகத்தே நிற்பர். கள்ளிற்கு உரிய விலைப் பொருளுக்காக யானைக் கோட்டினைக் கொடுத்துள்ளதை மதுரை மருதனிளநாகனார்,

**"வல்வில் இளையர் தலைவர் எல்உற**
**வரிகிளர் பணைத்தோள், வயிறு அணிதிதிலை**
**அரியலாட்டியர் அல்குமனை வரைப்பில்**
**மகிழ்நொடை பெறாஅ ராகிநனை கவுள்**
**கான யானை வெண்கொடு சுட்டி**
**மன்று ஓடு புதல்வன் புன்தலை நீவும்"** (அகம்.245:7-12)

என்ற அடிகளால் சுட்டுவர். மனையிடத்துக் கள் விற்ற நிலையினை இதனால் உணரமுடிகிறது.

**ஆறலைக் கள்வர்**

பாலை நிலத்தில் வழிப்பறி செய்து வாழ்பவர்கள், மனிதநேயமற்றவர்கள், இரக்கமற்று வழியிடை வருபவர்களைக் கொன்று குவிப்பவர்கள். அவ்வாறு கொன்று குவிப்பவரின் உடல்களைப் பிறர் காணாது கல்லை அடுக்கி மறைத்து வைப்பார்கள் அவ்வாறு மறைத்து வைக்கும் கல்லடுக்களுக்குப் பதுக்கை என்று பெயர். இதனைப் பெருங்கருங்கோ,

**"மரையா மரல்கவர மாரி வறப்ப**
**வரையோங்கு அருஞ்சுரத்து ஆரிடைச் செல்வோர்**

**சுரையம்பு மூழ்கச் சுருங்கிப் புரையோர்தம்**

**உண்ணீர் வறப்பப் புலர்வாடு நாவிற்கு**

**தண்ணீர் பெறாஅத் தடுமாற்றருந் துயரம்**

**கண்ணீர் நனைக்கும் கடுமைய காடு"** (கலித்.6:1-6)

என்ற பாடலடிகளால் எடுத்துரைக்கின்றார். அவர்கள் அடுத்தவர்களின் பொருளைப் பறித்து வாழ்ந்தும் கையில் அம்பினை வைத்தும் தண்ணீர் அற்ற அப்பாலை நிலத்தில் திரிந்ததும், இதனால் அறியமுடிகிறது. ஆறலைக் கள்வர்கள் கொலை செய்வதற்கு அஞ்சாதவர்கள் என்பதை பாலைக்கலிப்பாடல் உணர்த்துவதைப் பெருங்கடுங்கோ,

**"அலவுற்றுக் குடிகூவ ஆநின்றிப் பொருள்வெ.்.கி**

**கொலை அஞ்சா வினைவரால்"** (கலித்.10:5-6)

என்ற அடிகளால் உணர்த்துவர்.

**கிணறு தோண்டுபவர்**

சங்க காலத்தில் கிணறு தோண்டுபவர் இருந்துள்ளனர். அவர்கள் கற்பாறைகளை உடைத்துக் கிணறு தோண்டியுள்ளனர். அதனை குடவாயிற்கீரத்தனார்,

**"தோட்பதன் அமைந்த கருங்கை ஆடவர்**

**கனைபொறி பிறப்ப நூறிவினைப் படர்ந்து**

**கல்லுறுத் தியற்றிய வல்லுவர்ப் படுவில்**

**பாருடை மருங்கின் ஊறல் மண்டிய"** (அகம்.79:1-4)

என்ற அடிகளால் விளக்குவர். மேலும் மாமூலனார், நப்பாலத்தனார், காவன் முல்லைப்பூதனார், பெருங்கடுங்கோ, கபிலர் போன்றோர்,

**“…………………….. முரம்பிடித்து**

**அகலிடங்குழித்த அகல்வாய்க் கூவல்”** **(அகம்.295:10-11)**

**“கணிச்சியில் குழித்த கூவல்”** **(நற்.240:7)**

**“வால்வாய்க் கணிச்சி கூழார் கூவலர்**

**ஊறா திட்ட ஊவலைக் கூவல்”** **(அகம்.21:22-23)**

**“கொடுவாய்ப் பத்தல்”** **(அகம்.155:9)**

**“அவர்நாட்டு உவலைக் கூவல்கீழ்**

**மானுடெஞ்சிய கலுழி நீரே”** **(ஐங்.203:4)**

என்ற பாடலடிகளால் எடுத்துரைக்கின்றனர்.

உமணர் தாம் செல்லும் வழியில் கல் நிலத்தை இடித்து அகன்ற இடத்திலே அகலமான விரிந்தவாயை உடைய கூவல் தோண்டுவர். இது வழிப்போக்கராகிய புதியவர் நீருண்டு இளைப்பாறுவதற்கு இடமாய் அமையும். சங்க காலத்தில் கூவல் அதிகமாக இருந்ததையும், அவற்றிலுள்ள நீரை இறைப்பதற்கு ‘கொடுவாய்ப்பத்தல்’ என்ற கருவியைப் பயன்படுத்தி உள்ளதையும் அறியமுடிகிறது. அதனை மாமூலனார்,

**“…………………….. முரம்பிடித்து**

**அகலிடங் குழித்த அகல்வாய்க் கூவல்”** **(அகம்.295:10-11)**

என்ற அடிகளால் புலப்படுத்துவர். கிணறு வெட்டுவதற்கு அவர்கள் குந்தாலியைப் பயன்படுத்தி உள்ளனர். அக்கருவியைப் பயன்படுத்தித் தோண்டிய கூவலில் நீர் ஊறவில்லையெனின் அக்கூவலைத் தழைகளை நிறைத்து மூடியுள்ளனர். அதனைக் காவன் முல்லைப்பூதனார்,

**“பரல்மண் சுவல முரணிலம் உடைத்த**

**வல்வாய்க் கணிச்சிக் கூழார், கோவலர்**

**ஊறாதிட்ட உவலைக் கூவல்”** **(அகம்.21:22-23)**

என்ற அடிகளால் விளக்குவர். கிணறு தோண்டுபவர்கள் திண்மையான வன்னிலத்தை இரும்பினால் செய்த கோடரியால் உடைத்து கிணற்றினைத் தோண்டுவர். அவ்வாறு தோண்டப்படும் கிணற்றில் நீண்ட கயிறு கொண்டு குறுமுகவையால் நீரினை இறைப்பர். நீரிறைக்கப் பயன்படும் கருவி ‘கயிறுகுறுமுகவை’ எனப்படும். இவை ‘பத்தல்’ எனவும் அழைக்கப்படுகிறது. ஆனிரைகளுக்கு நீருட்டக் கோவலர் தாம் தோண்டிய கூவலினின்றும் பத்தலால் நீர் இறைத்துப் பல சிறு குழிகளில் நிரப்புவர். அதனை பெருங்கடுங்கோ,

**“நெடுவிளிக் கோவலர் கூவல் தோண்டிய**

**கொடுவாய்ப் பத்தல் வாந்துகு சிறுகுழி நீர்”** **(அகம்.155:8-9)**

**“விடுநிலம் உடைத்த கலுழ்கட்கூவல்”** **(அகம்.321:8)**

என்ற அடிகளால் விளக்குவர்.

**மறவர்**

போர்த்தொழில் செய்கின்ற அனைவரும் மறவர்கள் ஆவர். இவர்கள் வீரர்கள் என்றழைக்கப்பட்டனர். “தமிழக அரசு வெளியிட்ட பிற்படுத்தப்பட்ட வகுப்பினர் பட்டியலில் வரிசை எண்.108-இல் மறவர் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் கரும்மறவர், ஆப்பநாடு மறவர், கொண்டையம் கோட்டை மறவர், செம்பிநாட்டு மறவர் எனவும் வகைப்படுத்தியுள்ளது. இவர்கள் மதுரை, திருநெல்வேலி, கன்னியாகுமரி, இராமநாதபுரம்

மாவட்டங்களில் அதிகளவில் உள்ளனர். இவர்கள் இராமனுக்குத் துணை புரிந்ததால் மறவன் என அழைக்கப்பட்டார்கள் என அபிதான சிந்தாமணி குறிப்பிடுகிறது. மேலும் அகலிகைக்கும், இந்திரனுக்கும் பிறந்த மூன்று குமாரர்கள் கள்ளர், மறவர், அகமுடையர் எனவும் கூறுகிறது."[21] மறவர்கள் கையில் 'வேல்' என்னும் கருவியினை வைத்திருந்ததை நக்கீரர்,

**"…………………… மறவர்**

**வேலெனெ விரிந்த கதுப்பின் தோல"** **(நற்.86:1-2)**

என்ற அடிகளால் விளக்குவர். மறவர்கள் போரினால் இறந்துபட்டால், அவர்களுக்கு 'நடுகல்' வழிபடும் முறை பண்டைய மக்களிடையே அமைந்திருந்தது. இவர்கள் நடுகல்லுக்கு, மயிலிறகு சூட்டித் துடிகொட்டி, வழிபடுவர். அவர் வழிபாட்டில் நெல்லினால் சமைத்த கள்ளும், செம்மறிக்குட்டியைப் பலியிடுதலும் இருந்ததைக் குடவாயிற்கீரத்தனார்,

**"வில்லோர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்**

**வல்லாண் பதுக்கைக் கடவுட் பேண்மார்**

**நடுகற் பீலி சூட்டித் துடிப்படுத்துத்**

**தோப்பிக் கள்ளொடு துரூஉப்பலி கொடுக்கும்"** **(அகம்.35:6-9)**

என்ற அடிகளால் சுட்டுவர். மறவர் புல்லிய நிலத்தில் உள்ள சிறுகுடியில் தங்கியிருப்பர். திணையினால் செய்த கள்ளினை உண்பர். கையில் வில்லுடன் வேட்டையாடச் செல்வர், வேட்டையாடிய மான் முதலிய விலங்குகளின் இறைச்சியை உண்பர். அதனை இடைக்காடனார்,

**“புன்புலந் தழீஇய பொறைமுதற் சிறுகுடித்**

**தினைக் கள்ளுண்ட தெறிகோல் மறவர்**

**விசைத்த வில்லர் வேட்டம் போகி”** **(அகம்.284:7-9)**

என்ற அடிகளால் உணர்த்துவர்.

**காரோடன்**

‘காரோடன்’ என்பான் படைக்கலங்கட்குத் தோலினால் உறை தைத்துக் கொடுப்பவன். சிறுமையுடைய தோல் தைக்கும் சக்கிலியன். உறை துன்னுதலின் உறைகாரன் எனப்பட்டான். இவ்வுரைகாரரே ஆயுதங்களைக் கூர்மைப்படுத்தும் சாணைக்கல்லும் செய்வர். காரோடன் பற்றிய குறிப்பு சங்க நூல்களில் அகநானூற்றில் மட்டும் காணப்படுகிறது. இவர்கள் அரக்கொடு சேர்த்துச் செய்யப்பட்ட சாணைக்கல்லை உடையவர்களாக விளங்கியதை மாமூலனார்,

**“சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய**

**கல்”** **(அகம்.1:5-6)**

என்ற அடிகளால் புலப்படுத்துவர்.

**கழைக்கூத்து ஆடுபவர்கள்**

தற்காலத்தில் தெருக்களில் பொதுமக்கள் அரங்கில் சாகச நிகழ்வுகளைச் செய்து காட்டும் கழைக்கூத்துக்கள் நடைபெற்று வருகின்றன. இந்நடைமுறையானது சங்க இலக்கியமான நற்றிணையில் கழைக்கூத்து என்ற பெயரிலேயே நடைபெற்றுள்ளது. இக்கூத்து ஆடுவோரின் நிலை அவர்களுக்கு உரிய சமுதாய மதிப்பினை உணவு, இருப்பிடம், உடை ஆகியவற்றை

சரிசமமாகப் பெறமுடியாத நிலையில் இருந்தனர் என்பதும் அறியமுடிகிறது. இதனைக் கொட்டம்பலவனார்,

**“கழைபாடு இரங்க பல்லியம் கறங்க**
**ஆடுமகள் நடந்த கொடும்புரி நோன்கயிற்று**
**அதவத் தீங்கனி அன்ன செம்முகத்**
**துய்த்தலை மந்தி வன்பறழ் தூங்கக்**
**கழைக்கண் இரும்பொறை ஏறிவிசைத்தெழுந்து**
**குறக்குறு மாக்கள் தாளம் கொட்டுமக்**
**குன்றகத் ததுவே கொழுமிளைச் சீறூர்**
**சீறுரோனே நாறுமயிர்க் கொடிச்சி**
**கொடிச்சி கையத் ததுவே பிறர்**
**விடுத்தற்காகாது பிணித்தவென் நெஞ்சே”** **(நற்.95:1-10)**

என்ற அடிகளால் விளக்குவர். கழை என்றால் ஊதுகுழல் என்று பொருள்படும். ஊதுகுழல் ஒரு பக்கம் இசைக்க, பல இசைக் கருவிகள் முழங்கி, முருக்குண்ட கயிற்றின்மீது ஆடுமகள் ஆடும் நிகழ்ச்சி நடந்து முடிந்த நிலையில் ஆட்கள் இன்றிக்கிடக்கும் கயிற்றின்மீது அத்திப்பழம் போன்ற சிவந்த முகத்தையும், பஞ்சு போன்ற தலையையும் உடைய குரங்கு ஏறி ஆடுகின்றது. இவ்வாட்டத்திற்கு மலைப்பகுதியில் வாழும் சிறுவர்கள் பெரிய பாறையின் மீது ஏறி நின்று தாளங்களை இசைத்தனர். மீளவும் ஒரு கழைக்கூத்து அங்கு நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.

சங்க காலக் கூத்து முறைகளில் இதுவும் ஒருவகைக் கூத்தாகும். கழைக்கூத்து இன்னமும் தமிழகத்தில் நடைபெற்று வருவது என்பது சங்க

காலத்தின் தொடர்ச்சி என்றே கருத வேண்டும். இவர்களுக்கு என்று நினைத்த வாழ்விடம் இல்லை என்பது தெளிவாகின்றது. தனக்கென ஒரு நிலைத்த வாழ்வை, வாழ்க்கையைப் பெறாமல் நாடோடிகளாகவே இக்காழைக் கூத்தினர் இன்றுவரை இருக்கின்றனர் என்று காணும்போது அவர்களின் நிலை இரங்கத்தக்கதாக இருக்கின்றது.

**கொண்டி மகளிர்**

போரில் வெற்றிபெற்ற மன்னர்கள் தோற்ற மன்னர்களின் மனைவியரையும், பிற பெண்டிரையும் சிறை பிடித்து வந்ததைச் சங்க அக நூலான பட்டினப்பாலை குறிப்பிடுகிறது. இவ்வாறு சிறைபிடித்துக் கொண்டு வரப்பட்ட பெண்கள் காவிரிப்பூம்பட்டினத்திலுள்ள அம்பலங்களில் விளக்கேற்றி நிற்பதனைக் கூறும்பொழுது ‘கொண்டி மகளிர்’ என்று ஆசிரியர் குறிப்பிடுகிறார். இதனை,

> **“கொண்டிமகளிர், உணதுறை மூழ்கி**
> **அந்தி மாட்டிய நந்தா விளக்கின்”** **(பட்டினப்.246-247)**

என்ற பாடலடியால் அறியலாம். “கொண்டி என்பதற்கு கொள்ளை என்று பொருள். பிறர்நாட்டில் கொள்ளையிட்டுக் கொணர்ந்த பெண்டிர் என்று கொண்டிமகளிர் என்ற சொல்லிற்கு உரையாசிரியர்கள் விளக்கம் தருகின்றனர். பிறர்நாடு என்பது தமிழகத்தின் ஏதாவது ஒரு பகுதியினையே குறிக்கும். எனவே போரில் தோற்ற தமிழ் மன்னர்களின் மனைவியரும் அந்நாட்டு மகளிரும் அடிமைகளாகப் பகைவர் நாட்டில் பணிபுரிந்துள்ளனர் என்பது புலனாகிறது”[22] எனக் கொண்டிமகளிர் பற்றி ஆ.சிவசுப்பிரமணியன் குறிப்பிடுகிறார்.

## தொகுப்புரை

- ❖ கூத்தர்கள் கோடியர், வயரியர், கண்ணுளர் எனப் பல பெயர்களில் அழைக்கப்பட்டுள்ளனர்.
- ❖ தொடக்க காலத்தில் இசைக் கலைஞர்களாக வாழ்ந்த பாணர்கள் பிற்காலத்தில் மீன்பிடிக்கும் நிலைக்கு மாறியுள்ளனர். அதற்கு அவர்களின் வறுமையே காரணமாக அமைந்துள்ளது.
- ❖ வேடமிட்டு ஆடுபவர்கள் பொருநர்கள் என்றழைக்கப்பட்டனர். இவர்கள் பறையை இசைக்கும் கலைஞராவர். இவர்கள் அரசவைக்குச் சென்று இசைப்பது மட்டுமின்றி இசையால் ஆறலைக் கள்வரை மனம் திருந்தச் செய்யும் ஆற்றலுடையவர்களாக விளங்கியுள்ளதை அறியமுடிகின்றது.
- ❖ ஊர்தோறும் சென்று கலைக்கூத்து நிகழ்த்திய ஆடு மகளிர் சங்க காலத்தில் வாழ்ந்துள்ளனர்.
- ❖ இளமையுடைய ஆடுமகள் ‘அரிக்கோல்’ என்னும் பறை ஒலிக்க ஆடியுள்ளாள். இவளது வாழ்வும் விளிம்புநிலையிலேயே அமைந்திருந்ததை உணரமுடிகிறது.
- ❖ பாணரின் மனைவியராகக் கருதப்படும் பாடினி வறுமையின் பொருட்டு மீன்பிடித்து விற்கும் தொழிலை மேற்கொண்டுள்ளாள். அவள் மீனினைக் குறைவாகக் கொடுத்து நெல்லினை நிறைவாகப் பெற்றுள்ளாள்.
- ❖ குறவர்கள் தினைத்தாளால் வேய்ந்த கட்டையான குடில்களில் வாழ்ந்தனர், விலங்குகளை வேட்டையாடினர், கிழங்குகளை அகழ்ந்தெடுத்தனர்.

❖ தேன், மா, பலா ஆகியவற்றால் சமைத்த கள்ளினை உண்டனர். குரவையாடி மகிழ்ந்தனர். அவர்கள் வேட்டையாடுவதற்கு, அம்பு, தட்டை, கவண் முதலிய கருவிகளைப் பயன்படுத்தினர். தோலால் செய்த செருப்பினை அணிந்திருந்தனர்.

❖ தினைப்புனம் காப்பவர் 'கொடிச்சி' என்றும், 'புனவன்' என்றும் அழைக்கப்பட்டனர்.

❖ புனவன் தினைப்புனத்தில் புகுந்த யானையை விரட்ட அம்பு, கிணை, கவண் ஆகிய கருவிகளைப் பயன்படுத்தியுள்ளான்.

❖ தினையை அறுத்தபின் தினைப்புனத்தைச் சுட்டழிப்பது புனவர்களின் வழக்கமாக இருந்துள்ளது.

❖ தினைப்புனத்தை அழிக்க வரும் பன்றியைப் பிடிக்கப் பொறியினைப் புனவர்கள் பயன்படுத்தியுள்ளனர்.

❖ தினைப்புனம் காக்கும் காவலர்கள் குறிஞ்சிப் பண்ணைப் பாடியுள்ளனர்.

❖ குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த அகவன் மகள், பிறரின் வாழ்வில் ஏற்படும் நன்மை தீமைகளை ஆராய்ந்து சொல்பவளாக விளங்கியுள்ளாள். அவள் குறி சொல்லும் போது தெய்வங்களையும், தம் முன்னோரையும் அழைத்துப் பாடியுள்ளாள்.

❖ நற்சொல் கூறும் பெருமுது பெண்டிர் சங்க காலத்தில் வாழ்ந்துள்ளனர். அவர்களை நாடிப் பலர் நற்சொல் கேட்டுள்ளனர்.

* யானைப்பாகர் கல்லாதவர்கள். யானையை வடமொழிச் சொற்கள் கூறி கூர்மையான குத்துக்கோலால் குத்திப் பழக்கி அடக்கினர். யானையின் வாயில் சோற்றுத்திரளை ஊட்டினர்.
* 'குதிரைப்பாகன்', 'இவுளிமறவர்' எனத் தேர்ப்பாகன் அழைக்கப்பட்டுள்ளான். இவன் போரின் காரணமாகப் பிரியும் போதும், தூது காரணமாகப் பிரியும் போதும் தேரினை ஓட்டியுள்ளான்.
* ஊர்க்காவலர்கள், ஊரில் கள்வர்கள் களவு செய்யாதபடிக் காத்துள்ளனர். இச்செயலால் இவர்கள் 'அருங்கடிக்காவலர்' என அழைக்கப்பட்டனர்.
* பள்ளியறைக் காவலராக யவனர்கள் இருந்துள்ளனர். இவர்கள் படைவீட்டின் ஒரு பகுதியில் மாணிக்க விளக்குகளைத் தொங்க விட்டுள்ளனர். மிலேச்சர்கள், பள்ளியறைக் காவலராக இருந்துள்ளனர்.
* புலைத்தி என்பவள் வண்ணாத்தி ஆவாள். அவள் அழுக்கேறிய ஆடைகளை உவர் மண்ணிலே இட்டு வெளுத்தும், வெளுத்த ஆடைகளைக் கஞ்சிப்பசையில் தோய்த்து எடுத்தும் காயவைத்துள்ளாள். புலைத்தி என்ற பெயருக்கு ஆண்பாற் பெயரான புலையன், வண்ணாரைக் குறிக்காமல் பறையரைக் குறிப்பது ஈண்டு சிந்திக்கத்தக்கது.
* மரத்தாலான தேர், கருவி முதலியவற்றைச் செய்யும் தச்சர் சங்க காலத்தில் விளிம்புநிலையில் வாழ்ந்துள்ளனர்.

- கொல்லர்கள் பல்வேறு தொழிற்கருவிகளை வடிவமைத்துக் கொடுத்துள்ளனர்.
- உழவர்கள் உழவுத் தொழிலை மேற்கொண்டு வாழ்ந்துள்ளனர். உழத்தியர் நடவுத் தொழிலைச் செய்துள்ளனர். பூஞ்செடிகளை நட்டுப் பயிர் செய்துள்ளனர்.
- நெற்கதிர்களை அறுக்கும் தொழிலைச் செய்பவர்கள் ‘அரிநர்’ என அழைக்கப்பட்டுள்ளனர்.
- வயல்களில் நெற்பயிர்களின் இடையே முளைத்திருக்கும் களையினைப் பறிப்பவர்கள் ‘களைஞர்’ என அழைக்கப்பட்டுள்ளனர். இவர்கள் மருதநிலத்தில் வாழ்ந்த உழவர்குடியில் பிறந்தவர்களாக இருந்திருக்க வேண்டுமென்பது கருத்து.
- மருதநிலத்தில் வாழ்ந்த களமர் நெற்களங்களில் தொழில் ஆற்றியுள்ளனர்.
- பருத்திப் பெண்டிர் பருத்தியை வில்லால் அடித்து அதிலுள்ள கொட்டையும், கோதும் நீக்கித் தூய்மை செய்துள்ளனர்.
- பொருள் வறுமை காரணமாக சங்க காலத்தில் பரத்தையர்கள் விளிம்புநிலை மக்களாக வாழ்ந்துள்ளனர்.
- பரதவர்கள் மீன்களைப் பிடிக்க ‘எறியுளி’ என்னும் கருவியைப் பயன்படுத்தியுள்ளனர்.
- மீன்களின் கொழுப்பிலிருந்து காய்ச்சிப் பெற்ற நெய்யினால் பரதவர் மாலைக் காலத்தில் விளக்கெறிப்பதற்கு மீன்களின் கொழுப்பிலிருந்து காய்ச்சிய நெய்யினைப் பயன்படுத்தி உள்ளனர்.

- நுளைத்தியர், பரத்தியர் என அழைக்கப்பட்ட நெய்தல்நில மகளிர், மீன் விற்றல், மீன் உணக்கல், உப்பு விற்றல், கள் காய்ச்சுதல், உணவு சமைத்தல் ஆகியவற்றைச் செய்துள்ளனர்.

- கடற்கரைப் பகுதியில் உப்பு விளைவிக்கும் தொழில் நடைபெற்றுள்ளது. கடல் நீரினைச் சிறுசிறு பாத்திகளாகக் கட்டி உப்பு விளைவிக்கும் தொழிலை அப்பகுதியில் வாழ்ந்த ‘அளவர்’ செய்துள்ளனர். இவர்கள் எருதுகள் பூட்டப்பட்ட வண்டிகளில் உப்பினை ஏற்றிக் கொண்டு ஊர் ஊராகச் சென்றுள்ளனர்.

- மீன் பிடிப்போராக ‘வலைஞர்’ விளங்கியுள்ளனர்.

- கள் விற்கும் தொழிலினை அக்காலப் பெண்டிர் செய்துள்ளனர். அத்தொழில் செய்யும் பெண்களை ‘கள்ளடு மகளிர்’ என அழைத்துள்ளனர்.

- பாலை நிலத்தில் வழிப்பறி செய்து வாழும் மக்கள் எயினர் எனப்பட்டனர். அந்நிலத்தில் வாழ்ந்த எயிற்றியர் ஊன் உலர்த்தல், பூவிற்றல், கள்விற்றல், உணவு சேகரித்தல் போன்ற தொழிலை மேற்கொண்டுள்ளனர்.

- கிணறு தோண்டுகிற தொழிலைச் செய்பவர்கள் அக்காலத்தில் வாழ்ந்துள்ளனர்.

- படைக்கலங்களுக்குத் தோலினால் உறை தைத்துக் கொடுப்பதற்கென்று சிலர் இருந்துள்ளனர். அவர்கள் ‘காரோடன்’என அழைக்கப்பட்டுள்ளனர்.

## சான்றெண் விளக்கம்


1. மா.இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப.621.
2. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் (உ.ஆ.), அகநானூறு, ப.391.
3. சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம், தொகுதி-2, ப.279.
4. சீ.பக்தவச்சலபாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.211.
5. உ.வே.சாமிநாதையர் (உ.ஆ.), குறுந்தொகை, ப.156.
6. மேது.ராசுகுமார், செவ்வியல் காலச் சமூகப் பின்புலத்தில் விளிம்புநிலை மக்களின் வாழ்வியல், ப.18.
7. தேவநேயப்பாவாணர், பழந்தமிழர் அரசியல் கோட்பாடுகள், ப.61.
8. மேலது, ப.61.
9. மேலது, ப.61.
10. மேலது, ப.61
11. பொ.வே.சோமசுந்தரனார் (உ.ஆ.), ஐங்குறுநூறு, ப.12.
12. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் (உ.ஆ.), அகநானூறு, ப.299.
13. தமிழ் சொற்களஞ்சியம், சென்னைப் பல்கலைக்கழகம், ப.2496.
14. கே.ஜெரார்டுராமன், வெகுசனக் கத்தோலிக்கம், ப.18.
15. வி.கனகசபை, ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம், ப.84.
16. ஜ.அல்பேரிஸ், கலந்துரையாடல், அழகப்பா அரசு கலைக்கல்லூரி, காரைக்குடி.
17. http://sandhan.com.
18. http://vankalai mannar.com.

19. ம.இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப.38.
20. மேலது, ப.621.
21. செ.காளிமுத்து, ஐந்திணை எழுபதில் விளிம்புநிலை மக்களின் வாழ்வியல், (ஆ.கோ.), ப.3.
22. ஆ.சிவசுப்பிரமணியன், தமிழகத்தில் அடிமைமுறை, ப.22.

## இயல்-4

## சங்கப் புற இலக்கியங்களில் விளிம்புநிலை மக்களின் வாழ்வியல்

### முன்னுரை

சங்க இலக்கியங்கள் அகம், புறம் என வாழ்வைப் பிரித்துப் பார்க்கக் கூடியதாகும். புறப்பொருளாக மன்னர்களின் வீரம், கொடைச்சிறப்பு, வாழ்க்கைமுறை மற்றும் போர்த்திறம் ஆகியவை குறிப்பிடப்பட்டுள்ளன. விளிம்புநிலை மக்களின் செயல்பாடுகளும் புறநிலையில் காணக் கிடைக்கின்றன. இவர்கள் அரசின் பல செயல்பாடுகளில் பங்கேற்றுள்ளதை அறியலாம். அந்தவகையில் கூத்தர், வயிரியர், கண்ணுளர், துணங்கையர், பாணர், பொருநர், விறலியர், புனவன், ஊர்க்காப்பாளர், தச்சன், கொல்லன், உழவர், களமர், தொழுவர், அரிநர், அறைநர், பரத்தையர், பூவிலைப்பெண்டிர், நெசவாளர், பருத்திப்பெண்டிர், கலிங்கம்பகர்நர், புலைத்தி, பரத்தியர், யானைப்பாகர், நாழிகைக்கணக்கர், வலைஞர், கொண்டிமகளிர், கிணறுதோண்டுபவர் ஆகிய இருபத்தெண்மரும் சங்க காலத்தில் விளிம்புநிலை மக்களாக வாழ்ந்துள்ளனர். அவர்களைக் குறித்த வாழ்வியற் பதிவுகளைச் சங்க இலக்கியங்கள் திறம்படப் புலப்படுத்தியுள்ளன. அவற்றை ஆராய்ந்து கூறுவதே இவ்வியலின் நோக்கமாகும்.

### கூத்தர்

தமிழ் நூல்களில் பத்துப்பாட்டுக்களில் ஒன்றாகிய மலைபடுகடாம் என்னும் கூத்தராற்றுப்படை கூத்தரைப் பற்றி விரிவாக உரைக்கின்றது. கூத்தரை மற்றொரு கூத்தர் ஆற்றுப்படுத்துதலை மையமாக வைத்து ஆற்றுப்படை நூல்கள் எழுந்துள்ளன. அந்தளவிற்குக் கூத்து வளம்

பெற்றிருப்பதை இதனால் அறிய இயலும். மன்னர்களின் செல்வாக்குப்பெற்ற கலைஞர்களுள் கூத்தரும் ஒருவர். அவர்கள் பல்வேறுபட்ட கோலங்கள் பூண்டு கூத்தாடுவது இயல்பாகும். அவர்கள் எங்கு விழா நடந்தாலும், அங்கே சென்று தம் கலைத்திறனால் மக்களை மகிழ்விப்பர்.

கூத்தரின் சுற்றம் ஒருசேர வாழ்த்தும் சேரமன்னனின் நாளோலக்க அவையில் கலையை நன்கு கற்றவர்கள் கூடி விவாதம் செய்யும் செய்தி உவமையாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. அதனை மாங்குடி மருதனார்.

**“கொடும்பறைக் கோடியர் கடும்புடன் வாழ்த்தும்**

**தணகட னாட னொண்பூங் கோதை**

**பெருநாளிருக்கை…..” (மதுரைக்.523-525)**

எனச் சுட்டுவர். பாண் சுற்றத்தினரை அடுத்த நிலையில் கூத்தர் சுற்றம் சங்க காலத்தில் இருந்துள்ளது. மேலும் இவர்கள் இரும்பேரொக்கல், கடும்பினது இடும்பை என்னும் அடைகளில் அழைக்கப்பட்டுள்ளனர். கூத்தர்கள் சிறுவங்கியம், பெருவங்கியங்களின் ஒலியோடு தண்ணுமை ஓசை பொருந்தி ஒலிக்கத் தாளம் அமைத்துச் சில்லரி கறங்கும் சிறிய பல வாக்கியங்களுடன் பல ஊர்களுக்கும் சென்று கூத்தாடியுள்ளனர். வழிநடைப் பயணத்தில் அவர்கள் முற்றிய பலாக்கனிகள் தாழ்வது போல, காவடி போலுள்ள இன்னிசைக் கருவிகளை முதுகில் தூக்கிச் சென்றுள்ளனர். அவர்கள் ஊன்றுகோலைக் கையில் வைத்திருந்துள்ளனர்,

கூத்தர் தம் வள்ளல்களை அவர்தம் நாண்மகிழிருக்கையிலும், போர்க்களத்திலும் கண்டு களிப்புற்றனர். தம்மைப் பேணிய வள்ளல்களிடம்

நன்றியுணர்வுடன் இவர்கள் நடந்து கொண்டனர். நாடகக்கலை இன்றும் அழியாமல் இருப்பதற்குக் காரணம் சங்க காலத்தில் கூத்தர்கள் நிகழ்த்திய கூத்துக்கலையே அடிப்படையாகும்.

இக்கூத்தர் வறுமையுற்றாலும், கூத்துக்கலைகள் வறுமையுறவில்லை. கூத்தரின் வறுமைக்கு முதன்மைக் காரணம் அவர்கள் பெற்ற பரிசில்களை தம் எதிர்காலத் தேவைக்கு பாதுகாவாமையே ஆகும். பொருள்களைச் சேர்க்கும் திறன் அற்றவர்களாக இக்கூத்தர்கள் விளங்கினர்.

கூத்தர்கள் தமக்குப் பரிசிலாகக் கிடைக்கும் சிறிய உணவைப் பாதுகாத்து வையாது உடனுக்குடன் உண்டுவிடுவர். நீர்வாழ் முதலை வாய் பிளந்தாற்போல் உள்ள பாயால் வேயப்பெற்ற வண்டியில் இவர்கள் பயணம் செய்வர். இதுதான் இவர் ஊர் என்று சொல்லுதற்கியலாதபடி காட்டு வழிகளில் அங்கங்கே மரத்தடிகளில் தங்கி இளைப்பாறி, ஊர் ஊராகச் சென்று கொண்டிருப்பர். இவர்தம் வாழ்க்கையில் எவ்வகை இடையூறும் இல்லை. கிணைப்பறை ஒலிக்க வழிநடப்பர். வழிகளில் காணும் எருக்கம் பூவை ஆடவர் சென்னியில் அழகுற அணிவர். ஆவாரம் பூவாலான மாலையைப் பெண்டிர் கழுத்தில் அணிந்து கொள்வர். குறுந்தூம்பு, நெடுந்தூம்பு என்னும் வாக்கியமும், தேரைக்குரல் போன்ற ஒலியுடைய வேறு பல வாச்சியங்களும் உடன் கொண்டு பல ஊர்களுக்கும் சென்று அவ்வூர் மன்றங்களில் கூத்து நிகழ்த்திச் செல்வர்.

கூத்துக்கலை வல்லவர்களுள், ஆடவர் கூத்தர் என்றும், மகளிர் கூத்தியர் என்றும் கூறப்பெறுவர். கூத்தர், கூத்தியர் போன்றோர் ஆடுவதற்குக்

களங்கள் இருந்தமையையும், அவ்விடங்களில் கூத்தர், கூத்தாடும் ஆடல் வல்லாள், அக்கலை வல்லாரோடு ஒத்தும், ஊழ்ந்தும் ஆடியும் உள்ளதை,

**"ஆடல் நவின்றோ ரவர்போர் செறுப்பவும்**

**……………………………………………..**

**வல்லோரை வல்லார் செறுப்பவும்"** (பரி.9:72-74)

என்ற அடிகள் உணர்த்தும்.

**வயிரியர்**

வயிரியர், கண்ணுளர் ஆகியோர் குறித்த பதிவுகளை குமட்டூர் கண்ணனார்,

**"விரிஉளை மாவும் களிறும் தேரும்**

**வயிரியர் கண்ணுளர்க் கோம்பாது வீசி"** (பதிற்.20:15-16)

என்ற பாடலடிகளால் புலப்படுத்துகிறார்.

மலையமான் போன்ற அரசர்கள் முன் முழவிசைத்து ஆடிப்பாடி கடும்பசி நீங்க உணவு பெற்று பொன்செய் புனையிழைகளும் பெற்ற இவ்வயிரியர் குற்றமற்ற நாவினை உடையவராய் வாழ்ந்தனர். கோடியர் போலவே வயிரியரும் விழாக்களம், ஊர் மன்றுகள், அரசவை எனப் பல இடங்களில் தம் கலைத் திறனை வெளிப்படுத்தினர். அதனைப் பெருந்தலைச்சாத்தனார்,

**"பண்ணமை நரம்பின் பச்சை நல்யாழ்**
**மண்ணமை முழவின், வயிரியர்**
**இன்மை தீர்க்கும் குடிப்பிறந்தோயே"** (புறநா.164:11-13)

என்ற அடிகளால் சுட்டுவர்.

பண்ணிசைக்கும் நரம்பினையுடைய யாழினை உடையவர்களாக வயிரியர் விளங்கியுள்ளனர். அதனைப் பாலைக்கௌதமனார்,

**“அழியா விழவி னிழியாத் திவவின்**

**வயிரிய மாக்கள் பண்ணமைத் தெழீஇ**

**மன்ற நண்ணி மறுகுசிறை பாடும்**

**அகன்கண் வைப்பி னாடும னளிய”** **(பதிற்.29:8-10)**

என்ற அடிகளால் எடுத்துரைப்பர். வயிரியர் கள்ளினை உண்டும், நல்லபொற்கலன்களை வேந்தனிடம் பரிசாகப் பெற்றும் வாழ்ந்துள்ளதைப் பரணர்,

**“நிரம்பகல்பு அறியா ஏறா ஏணி**

**நிறைந்து நெடிதிராத் தசும்பின் வயிரியர்**

**உண்டெனத் தவாஅக் கள்ளின்**

**வண்கை வேந்தே நின் கலிமகிழானே”** **(பதிற்.43:33-36)**

என்ற பாடலடியால் சுட்டுவர்.

**கண்ணுளர்**

கண்ணுளர் பற்றிய செய்திகளைப் பதிற்றுப்பத்தில் காணமுடிகின்றன. வயிரியர், கண்ணுளர் என்னும் இருதிறத்தார்க்கும், குதிரைகளையும், கன்றுகளையும், தேர்களையும் சேரலாதன் வழங்கியுள்ளதை அறியமுடிகிறது. மேலும் கண்ணுளர்க்கு அளவில்லாத பரிசில்களை சேரலாதன் வழங்கியுள்ளான். அவனது கொடைத்திறத்தைக் குமட்டூர் கண்ணனார்,

**“விரியுளை மாவும் களிறும் தேரும்**

**வயிரியர் கண்ணுளர்க் கோம்பாது வீச்சு”   (பதிற்.20:15-16)**

என்ற பாடலடியால் சுட்டுவர். கலைஞர்கள் இசைக்கருவிகளைக் கலப்பையிலிட்டு எடுத்துச் செல்வது வழக்கமாக இருந்துள்ளது. இதனை ஔவையார்,

**“காவினெம் கலனே சுருக்கினெம் கலப்பை”   (புறநா.206:10)**

என்ற அடிகளால் உணர்த்துவர்.

**துணங்கையர்**

“துணங்கை கூத்து” ஆடுவோர் துணங்கையர் என்றழைக்கப்படுகின்றனர். மகளிர் பாண்டில் விளக்கொளியில் துணங்கைக்கூத்து ஆடியுள்ளதை காக்கைப்பாடினியார் நச்செள்ளையார்,

**“சுடரும் பாண்டிற் றிருநாறு விளக்கத்து**

**முழாவிமிழ் துணங்கைக்குத் தழூஉப் புணையாகச்**

**சிலைப்புவல் லேற்றிற்றலைக்கை தந்து”   (பதிற்.52:13-15)**

என்ற அடிகளால் விளக்குகிறார். துணங்கை என்பது மகளிர் பலர்கூடி ஆடும் ஆட்டமாகும். அதனைக் கை கொடுத்துத் தொடங்கி வைத்தலை “தலைக்கே தருதல்” என்றுளர். கை கொடுத்த ஆடவன் புணை போலக் கொடுத்துத் தழுவிக்கொள்ள முதற்கை கொடுத்தது ‘தழூஉப்புணை’ எனப்பட்டது.

**பாணர்**

பாணர் என்பார் “பாடுவார்” என்ற அளவில் பொருள் சொல்லக்கூடிய அளவில் சுருங்கிய கலை வல்லார் அல்லர். பாடுவாரும், ஆடுவாரும்,

கருவியிசைப்பாரும், கருவி செய்வாரும் அவர்தம் பெண்டிரும் கூடிய ஒரு பெருந் தொகுதியினரே பாணர் என்பவராம்."[1]

கிரியாவின் தற்காலத் தமிழகராதி, பாணர் என்ற சொல்லிற்கு 'யாழ் முதலிய இசைக்கருவிகளை இசைத்துப்பாடும் கலைஞன்' எனப் பொருள் தருகிறது.[2]

தற்காலத் தமிழகராதி பாணர் என்பவர் 'தையற்காரர்' எனக் குறிப்பிடுகிறது. சதுரகராதி பாணர் என்போர் 'புகழ்ந்து பாடுபவர்' எனப் பொருள் தருகிறது.[3]

அபிதான சிந்தாமணி பாணர் என்ற சொல்லிற்கு 'வைசியன் பிராமணப் பெண்ணைப் புணர்ந்தவர்' எனப் பொருள் கூறுகிறது.[4]

பிங்கல நிகண்டு 'பாணர்' என்ற சொல்லிற்கு, "சென்னியர் வைரியர் செயிரியர் மதங்கர் இன்னிசைகாரர்"[5] எனப் பொருள் கூறுகிறது.

"பாணர்கள் மூவகையாகப் பிரிக்கப்படுகின்றனர். அவை (1) இசைப்பாணர், (2) யாழ்ப்பாணர், (3) மண்டைப்பாணர் என்பதாகும். அவர்களுள் இசைப்பாணர், இசைப்பாடல்கள் பாடக்கூடியவர்; யாழ்ப்பாணர், சிறிய யாழ், பெரியயாழ் முதலிய கருவிகளை இசைத்துப் பாடுபவர்கள். மண்டைப் பாணர் என்பவர் 'மண்டை' என்னும் பாத்திரத்தைக் கையில் வைத்திருப்பவர்"[6] ஆவார்.

**உடை**

வறுமை நிலையில் இருந்து வள்ளல்களை நாடிச் சென்று பாடல்பாடும் இசைவாணர்களான பாணர்கள் வள்ளல்களைக் கண்ட பின்னரே

உடையில் மாற்றம் பெற்றனர். அழுக்கடைந்த கந்தலான ஆடை நீக்கப்பட்டு புத்தாடைகள் அவர்கள் மேனியை அழகு செய்தன.

பாணர்கள் அணிந்திருந்த ஆடையானது அரையில் கிழிந்து பலவாறு தைக்கப்பட்டிருந்ததையும், அவ்வாடை வியர்வையில் நனைந்து கந்தையாக விளங்கியதையும் ஆலந்தூர்கிழார்,

**“.................. அரையது**

**வேற்றிழை நுழைந்து வேர்நனை சிதாஅர்**

**ஓம்பி யுடுத்த வுயவுற் பாண”** **(புறம்.69:2-4)**

எனச் சுட்டுவர். வறுமையில் பாணர்கள் வாழ்ந்துள்ளனர் என்பது இதனால் புலனாகிறது.

பாணனின் ஆடையானது, வள்ளல்களைக் காணும் முன் நீரில் நனைந்த பருந்தின் இறகு போலச் சேறுபடிந்திருந்தது. கிழிந்து, தைந்து கந்தல் உடையாக இருந்தது என்பதனைக் குமட்டூர் கண்ணனார்,

**“நீர்ப்படு பருந்தி னிரஞ்சிற கன்ன**

**நிலத்தின் சிதாஅர்”** **(பதிற்.12:19-20)**

எனப் பாடலடிகளால் சுட்டுவர். இப்பாணர்கள் மன்னர்களை நாடி அவர்களைப் புகழ்ந்து பாடி, யாழ்மீட்டி பலவாறாக தம் திறமையைக் காட்டி மகிழ்ச்சியுறச் செய்தபின் அவர்களுக்குப் பரிசாகக் கிடைத்த ஆடைகளானது, பட்டாடைகளாகவும், பாலாவியை ஒத்தவைகளாகவும் இருந்தன. இதனைக் குமட்டூர் கண்ணனார்,

**“நூலாக் கலிங்கம் வாலரைக் கொளீஇ”** **(பதிற்.12:21)**

என்ற அடிகளால் மெய்ப்படுத்துவர்.

ஓய்மா நாட்டு நல்லியக்கோடன் பாணர்களுக்கு மூங்கிலின் மெல்லிய பட்டாடையை உரித்தாற் போன்ற மாசில்லாத உடையை வழங்கியதை இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார்,

**“…………………….. மாசில்**

**காம்பு சொலித்தன்ன அறுவை” (சிறுபாண்.235-236)**

என்ற அடிகளால் புலப்படுத்துவர். தொண்டைமான் பாணர்களுக்குப் பாலாவியை ஒத்த நூலாற் செய்த ஆடையை வழங்கியுள்ளான் என்பதைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

**“ஆவியன்ன அவிர்நூற் கலிங்கம்” (பெரும்பாண்.469)**

என்ற பாடலடியால் சுட்டுவர். பாணர்கள் விளிம்பு நிலையில் வாழ்ந்துள்ளனர். அவர்கள் அழுக்கு நிறைந்த ஆடைகளையும், கிழிந்த ஆடைகளையும் அணிந்துள்ளனர். வள்ளல்களைக் கண்ட பின்னரே புதிய ஆடைகளை (பட்டாடைகள், பாலாவி போன்ற ஆடைகள்) அவர்களது உடல் கண்டுள்ளது.

**உணவு**

கலைஞர்கள் வாழ்க்கையிலும் கூட வறுமையின் போது உண்ணும் உணவு ஒருவகையாகவும், வள்ளல்களைக் கண்டபின் அவர்களுக்கு வழங்கப்படும் உணவு ஒரு வகையாகவும் அமைந்துள்ளது. பாணர்கள் வறுமையின் போது பசியால் வாடிய வயிற்றினை உடையவராகவே இருந்துள்ளனர். அதனைக் குமட்டூர் கண்ணனார்,

**“தொல்பசி யுழந்த பழங்கண் வீழ” (பதிற்.21:15)**

**“மன்றம் போந்து மறுகுசிறை பாடும்**

**வயரிய மாக்கள் கடும்பசி நீங்க” (பதிற்.23:5-6)**

என்ற பாடலடியால் சுட்டுவர். ஊர்ப் பொதுமன்றங்களில் பாடல்பாடும் வயிரிய மாக்களான பாணர், கூத்தர் முதலானோர் நெடுநாள் பசியுடன் பாடல்கள் பாடுவர் என்ற செய்தி ஈண்டு குறிக்கப்பட்டுள்ளது. வாள் கொண்டு அறுக்கப்பட்ட வெண் கொழுப்பும், கொழுத்த தசையும், ஆட்டு இறைச்சியும், வெண்ணெல் அரிசியும் கொண்டு சமைக்கப்பட்ட உணவினைப் பாணர்களுக்கு இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் வழங்கியுள்ளான். அதனைக் குமட்டூர் கண்ணனார்,

**"எ்.குபோழ்ந் தறுத்த வானிணக் கொழுங்குறை**

**மையூன் பெய்த வெண்ணெல் வெண்சோறு" (பதிற்.12:16-17)**

என்ற அடிகளால் புலப்படுத்துவர். சோழன் கிள்ளிவளவன் பாணர்களுக்கு வரகரிசியினைப் பாலின்கண் பெய்து சமைத்த உணவினை காலையும், மாலையும் வழங்கியுள்ளான். அத்துடன் குறுமுயலின் கொழுத்த சூடான இறைச்சியைத் தந்துள்ளான். அதனை ஆலந்தூர்கிழார்,

**"காலை அந்தியும், மாலை அந்தியும்**

**புறவுக் கருவன்ன புன்புல வரகின்**

**பாற்பெய் புன்கம் தேனொடு மயக்கிக்**

**குறுமுயற் கொழுஞ்சூடு கிழித்த ஒக்கலொடு" (புறம்.34:8-11)**

என்ற அடிகளால் சுட்டுவர்.

பாணர்கள் கலை வாழ்க்கை நடத்துபவர்கள். இவர்கள் மன்னர்களைக் காணும் முன், நீண்ட நாள் பசியுடன் இருந்து பின் மன்னர்களைக் கண்டபின் பலவகை விருந்துணவினை உண்ணும் தன்மையராக இருந்துள்ளனர்.

**பழக்க வழக்கங்கள்**

பாணர்கள் 'தேறல்' எனப்படும் 'கள்' வகையினைக் குடிக்கும் பண்பு உடையவர்கள். இதனைச் சங்க இலக்கியம் திறம்பட எடுத்துரைக்கின்றது. பாம்பின் விடமேறியதன்ன தன்மையுடைய கள்ளினை ஒய்மாநாட்டு நல்லியக்கோடன் பாணர்களுக்கு வழங்கியுள்ளான். அதனை இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார்,

**"பாம்பு வெகுண்டன்ன தேறல் நல்கிக்"** **(சிறுபாண்.237)**

என்ற அடியால் விளக்குவர். பாரி தன்னை நாடிவரும் பாணர்களுக்குக் கள்ளினை வழங்கியுள்ளான். அதனை,

**"…………………… ஒருசார்**

**பாணர் மண்டை நிறையப் பெய்ம்மார்**

**வாக்க உக்க தேக்கள் தேறல்**

**கல் அலைத்து ஒழுகுமன்னே"** **(புறம்.115:1-4)**

என்ற அடிகளால் விளக்குவர். கரிகாற்பெருவளத்தான் பாணர்களின் சுற்றத்தார்க்குக் குடம் குடமாகக் கள்ளினை வழங்கியுள்ளான். அதனைக் கருங்குழலாதனார்,

**"இரும்பாண் ணொக்கற் கடும்பு புரந்ததூஉம்"** **(புறம்.224:3)**

என்ற அடியால் தெளிவுபடுத்துவர். பாணர்களின் வாழ்வில் கள் அருந்தும் பண்பாட்டு நிலை இருந்துள்ளது.

பொருநர்

பொருநர் பசித்துயருடன் வறுமையில் வாடியுள்ளனர். அதனை சோழன் நலங்கிள்ளி நீக்கியுள்ள செய்தியைப் புலவர் கோவூர்கிழார்,

**"கடற்படை யடற்கொண்டி**
**மண்டுற்ற மலிர்நோன்தாள்**
**தண் சோழ நாட்டுப் பொருநன்**
**அலங்குளை யணியிவுளி**
**நலங்கிள்ளி நசைப்பொருநரேம்**
**பிறர்ப்பாடிப் பெறல் வேண்டேம்**
**அவற்பாடுது மவன்றாள் வாழியவென்**
**நெய்குய்ய வூனவின்ற**
**பல சோற்றானின் சுவைய**
**நல்குரவின் பசித்துன் பின்நின்"** (புறநா.382:1-10)

என்ற அடிகளால் தெளிவுபடுத்துவர். வறுமையிலும் தன்நிலை தாழாது பொருநர் வாழ்ந்துள்ளதை அறியமுடிகிறது. சோழன் கிள்ளிவளவன் பொருநர்களைப் போற்றியுள்ள திறத்தைக் கோவூர்கிழார்,

**"நெடுநீர நிறைகயத்துப்**
**படுமாரித் துளி போல**
**நெய் துள்ளிய வறைமுகக்கவும்**
**சூடு கிழித்து வாடூன் மிசையவும்**
**ஊன் கொண்ட வெண்மண்டை**
**ஆன் பயத்தான் முற்றழிப்பவும்**

வெய்துண்ட வியர்ப் பல்லது

செய்தொழிலான வியர்ப்பறியாமை

ஈத்தோ னெந்தை யிசை தனதாக

வயலே நெல்லின் வேலி நீடிய கரும்பின்

பாத்திப் பன்மலர்ப் பூத்த தும்பின்று

புறவே, புல்லருந்து பல்லாயத்தான்

வில்லிருந்த வெங்குறும்பின்று

கடலே, காறந்த கலனெண்ணுவோர்

கானற் புன்னைச் சினைநிலைக் குந்து

கழியே சிறுவெள்ளுப்பின் கொள்ளைச் சாற்றி

பெருங்க னன்நாட்டு மணொலிக்குந்து

அன்ன நன்னாட்டுப் பொருநம் யாமே

பொரா அப்பொரு நரெம்

குணதிசை நின்று குடமுதற்செலினும்

குடதிசை நின்று குணமுதற்செலினும்

வடதிசை நின்று தென்வயின்செலினும்

தென்றிசை நின்று குறுகாது நீடினும்

யாண்டு நிற்க வெள்ளியாம்

வேண்டிய துணர்ந்தோன் றாள் வாழியவே" (புறநா.386:1-27)

என்ற அடியால் சுட்டுவர். நெய்யிட்ட கறிவறுவல், பால் ஆகியவற்றைப் பொருநர்க்குக் கொடுத்துப் போற்றியதை இதனால் உணரமுடியும்.

**விறலியர்**

ஆடல் தொழில் புரியும் பெண்டிரான விறலியரை, நச்சினார்க்கினியர் “விறலியர் என்பவர் தாமே ஆடலும் பாடலும் நிகழ்த்துபவர்”[7] என்று குறிப்பிடுகிறார். இவர்கள் அகவாழ்க்கையிலும், புறவாழ்க்கையிலும் இடம்பெற்றிருந்தனர். அகத்திணை வாழ்வில் இல்லற இன்பத்தைக் கலை உணர்வோடு போற்றியவராகவும், தலைவன் தலைவியர்க்கு நல்லுணர்வு ஊட்டுபவராகவும் அமைந்தனர். புறத்திணை வாழ்வில், வறுமையில் வாடும் பொருளாதாரப் போராட்டக் கலைஞர்களாய்த் திகழ்ந்தனர். அகப்பாடல்களில் விறலி பற்றிய செய்திகள் மிகக் குறைவாகவே உள்ளன. மூன்றே பாடல்களில் விறலி பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. வேந்தர்கள், வள்ளல்கள், குறுநில மன்னர்கள் முதலிய ஆதரவாளர்கள் இருக்குமிடங்களுக்கு விறலியர் பிற கலைஞர்களுடன் கூட்டமாகச் சென்று பாடியும், ஆடியும் பரிசில் பெற்றும் வாழ்க்கை நடத்தியுள்ளனர். பழமையான நாட்டுப் பாடல்களையும், நடனங்களையும் போற்றிக் காத்த இவர்களைப் பழங்குடி மக்களின் பிரதிநிதிகளாக நீலகண்ட சாஸ்திரி குறிப்பிடுவர்.[8] சங்க இலக்கியம் நடன மங்கையரான விறலியரைக் குறித்துப் பல பாடல்களில் பதிவு செய்துள்ளது. இசை மரபிற்கேற்ப ஆடுவதில் கை தேர்ந்தவர்களாக விறலியர் சிறப்பிக்கப்படுகின்றனர். விறலியர்க்கென்று தனிப்பாடல்கள் இல்லையெனினும், சங்க நூல்களான புறநானூற்றிலும், பதிற்றுப்பத்திலும் விறலியாற்றுப்படை என்னும் துறை அமையப்பெறுதலைக் காணமுடிகின்றது.

சங்க காலத்தில் ஆடற்கலைக்கல்வி பல்வேறு முறைகளில் பயிலப்பட்டது. மக்கள் தமக்குள் மகிழ்ந்தாடிய ஆடல் வகைகள் பெரும்பாலும்

குழு ஆடல்களாகவே அமைந்தன. ஆடல் மகளிர் விறலியர் என்றழைக்கப்பட்டனர். பாணரும் கூத்தரும், பொருநரும், விறலியரும், பாடுவோரும், ஆடுவோருமாக அக்கலைகளிலே வல்லவராகத் தமிழகத்தில் இருந்தனர். அவர்கள் தமிழக முடியுடை வேந்தர் மூவரையும் குறுநில மன்னரையும், செல்வரையும் கண்டு ஆடிப்பாடிப் பரிசில் பெற்று வாழ்ந்துள்ளதை அறியமுடிகின்றது.

விறலியர் எவ்வகை ஆடல்கள் நிகழ்த்தினர் என்பதற்கு இலக்கியங்களில் நேரடிச் சான்றுகள் கிடைக்கப்பெறவில்லை. அடியினைத் துடியொலிக்கு இயையத் தோளசைத்து ஆடும் செய்தி மட்டும் பெறப்படுகிறது. அதனைப் பரணர்,

**"குணகுட கடலோடு ஆயிடை மணந்த**
**பந்தர் அந்தரம் வேய்ந்து**
**வண்பிணி அவிழ்ந்த கண்போல் நெய்தல்**
**நனையுறு நறவின் நாடுடன் கமழச்**
**சுடர்நுதல் மடநோக்கின்**
**வாள் நகை இலங்கெயிற்று**
**அமிழ்து பொதி துவர்வாய் அசைநடை விறலியர்**
**பாடல் சான்று நீடினை உறைதலின்"** **(பதிற்.51:15-22)**

என்ற பாடலடியால் சுட்டுவர்.

அலங்கரிக்கப்பட்ட பந்தல்களில் அரசர்கள் பலராய் அமர்ந்து காண விறலியர் நடனம் நடைபெற்றுள்ளது. அப்பந்தலின் விதானம் நெய்தல் மலர்களாலான மாலைகளில் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அம்மாலைகளில்

நறவம் பூக்களும், புன்னை மலர்களும் கலந்திருத்தலால் பந்தல் மணம் நிறைந்து விளங்கியது. இப்பந்தலில் அமைக்கப்பட்டிருந்த அரங்கில் விறலியர் ஆடியுள்ளனர். அவர்கள் மன்னனின் திருவோலக்க மன்றத்தில் பாடியுள்ளாள். அதனை முழவிசைக்கேற்பத் தாளம் அறுத்திசைத்துப் பாடியுள்ளனர். அதனைக் கபிலர்,

**“நிலவி னன்ன வெள்வேல் பாடினி**

**முழவிற் போக்கிய வெண்கை**

**விழவின் அன்னநின் கலி மகிழானே”** **(பதிற்.61:16-18)**

என்னும் அடிகளால் புலப்படுத்துவர். விறல்படப் பாடியாடும் விறலி சில்வளை அணிந்து ஆடியுள்ளாள். (புறநா.60:4-5, 64:1-2)

**விறலியர் பெற்ற பரிசில்கள்**

தமிழகத்தின் மூவேந்தர்கள் விறலியரின் ஆடல் பாடல்களைப் பாராட்டிப் பொன்னரிமாலையைப் பரிசளித்தனர். கலைக்குழுவின் தலைவனுக்குப் பொற்றாமரையும், விறலிக்குப் பொன்னரி மாலையும் அளித்துச் சிறப்பிப்பது அக்கால மரபாக இருந்துள்ளதை ஆலங்குடி வங்கனார்,

**“பாடினி மாலை யணிய**

**வாடாத் தாமரை சூட்டுவேன் நினக்கே”** **(புறநா.319:14-15)**

என்னும் அடிகளால் புலப்படுத்துகிறார்.

விறலியர் யாழ் மீட்டி பிடிகளைப் பரிசிலாகப் பெற்றுள்ளதைப் பரணர்,

**“ஆடுசிறை யறுத்த நரம்பு சேர் இன்குரற்**

**பாடு விறலியர் பல்பிடி பெறுக”** **(பதிற்.43:21-22)**

என்ற பாடலடியால் தெளிவுபடுத்துகிறார். கொழுத்த இறைச்சி உணவையும், பலவிதமான சோற்றையும் வெறுத்து ஒதுக்கிவிட்டு இனிக்கும் கள்ளை விரும்பி உண்ணுகின்ற பாணர் கூட்டத்தோடு விறலியர் சென்றுள்ளனர். அவர்கள் பொன் பொருளுடன் யானைக் கூட்டத்தையும், பரிசாகப் பெற்றுள்ளதை முற்பாடலடிகள் உணர்த்துகின்றன. இதனை புலவர்கள் மாங்குடி மருதனார், கபிலர் ஆகியோர்,

**“பயனறிவறியா வளங்கெழு திருநகர்**

**நரம்பின் முரலு நயம்வரு முரற்சி**

**விறலியர் வறுங்கைக் குறுந்தொடி செறிப்பப்**

**பாண ருவப்பக் களிறுபல தரீஇ”** **(மதுரைக்.216-219)**

**“சுகிர்புரி நரம்பின் சீறியாழ் பண்ணி**

**விரையொலி கூந்தல் விறலியர் பின்வர**

**ஆடினிர் பாடினிர் செலினே**

**நாடுங் குன்றும் ஒருங்கு ஈயும்மே”** **(புறநா.109:15-18)**

என்ற அடிகளால் புலப்படுத்துவர்.

விறலியர், யாழொலி, மிடற்றுப்பாடல் குழலொளிகளுடன் முழவு ஆர்ப்பத் தலைக்கோல் மகளிரும், பிறரும் ஆடத் தொடங்கினர். அதனை,

**“எழும்புணர் யாழுமிசையுங் கூடக்**

**குழலளந்து நிற்ப முழவெழுந்தார்ப்ப**

**மன் மகளிர் சென்னிய நாட றொடங்க”** **(பரி.7:76-80)**

என்ற அடிகள் உணர்த்தும். ஆடல் பயின்றாரை அவ்வாடல் பயின்றாரே வென்றுள்ளதை,

**“அடும்போ ராளநின் குன்றின் மிசை**

**ஆடனவின்றோ ரவர்போர் செறுப்பவும்”** **(பரி.9:76-72)**

என்ற அடிகள் புலப்படுத்தும்.

ஆடுவாரின் ஆடல் அதற்குப் பொருந்திய சீருடன் கூடிய தாளத்துடன் பொருந்தியிருந்ததை,

**“பருக்கோட்டி யாழ்ப்பக்கம் பாடலோ பாடல்**

**அருப்ப மழிப்ப வழிந்த மனக்கோட்டையர்”** **(பரி.10:56-57)**

என்ற அடிகள் உணர்த்தும். இசை மரபிற்கேற்பத் தனித்தும், குழுவாகவும், அடிபெயர்த்தும், தோளசைத்தும் ஆடியுள்ளதை,

**“துடியினடி பெயர்த்துத் தோளசைத்துத் தூக்கி**

**அருநளா மகிழதட்ப வாடுவா டகைமையின்”** **(பரி.21:19-20)**

என்ற அடிகள் உணர்த்தும்.

**புனவன்**

“தினைப்புனம் காக்கும் குறிஞ்சிநில மாந்தர்”[9] புனவன் எனப்படுவர். இவர்கள் ‘தட்டை’ என்னும் கருவியைப் புடைத்துத் தினைக்கதிர்களை

மேயவரும் பறவைகளை விரட்டுவார்கள். இதனைக் காப்பியாற்றுக் காப்பியனார்,

**"புனவர் தட்டை புடைப்பின் அயலது**

**இறங்கு கதிர் அலமரு கழனியும்**

**பிறங்கு நீர்ச் சேர்ப்பினும் புள் ஒருங்கு எழுமே" (பதிற்.40:1-3)**

என்ற பாடலடியால் தெளிவுபடுத்துவர். இவர்கள் 'ஏனல் உழவன்' என்றும் அழைக்கப்படுகின்றனர். "தினைக் கொல்லையை உழுது பயிர் செய்யும் குன்றவர் ஏனல் உழவர் என்றழைக்கப்படுகின்றனர்."[10] புனவன் தினையை விதைக்க நிலத்தை உழுது செப்பனிடுவான். அவனது குடிசையானது வைக்கோல் கொண்டு வேயப்பட்டதாக இருக்கும். வீட்டினில் காட்டுமல்லிகைக் கொடி படர்ந்திருக்கும். வலிய பாதுகாப்பமைந்த அவ்வீடுகளில் இருக்கும் கானவர்கள் விருந்தாக வருவோர்க்குத் தினைமாவினைத் தந்து மகிழ்வர். இதனைப் பாலைக்கௌதமனார்,

**"ஏன ஓழவர் வரகுமீ திட்ட**

**கான்மிகு குளவிய வன்புசேரிருக்கை**

**மென்றினை நுவணை முறைமுறை பகுக்கும்**

**புன் புலந் தழீஇய புறவணி வைப்பும்" (பதிற்.30:22-25)**

என்ற பாடலடியால் தெளிவுபடுத்துவர்.

**ஊர்க்காப்பாளர்**

ஊர்க்காப்பாளர், வலிய யானையைக் கொல்லும் வன்மை வாய்ந்த புலி போன்றவர். இரவில் உறங்காக் கண்ணையுடையவர். தொழிலை

அறிந்தோர் புகழும் ஆற்றலுடையவர். களவுநூல், காத்தல் நூல், வழிச்செல்லும் தப்பாத நுண்மையான ஆய்ந்த அறிவுடையோர், தேரோடும் தெருக்களில் மழை மிகுதியாகப் பெய்தாலும், இரவுக் காலத்தில் சோம்பியிராது, சோர்வில்லாது விருப்புடன் காவல் செய்வர். தெய்வங்கள் உலவும் செயலற்ற இருளிலும் கூட அச்சம் அறியாது காவல் காப்பர். இதனை மாங்குடிமருதனார்,

**"வயக்களிறு பார்க்கும் வயப்புலி போல**
**துஞ்சாக் கண்ணர், அஞ்சாக் கொள்கையர்**
**அறிந்தோர் புகழ்ந்த ஆண்மையர் செறிந்த**
**நூல்வழிப் பிழையா நுணங்கு நுண் தேர்ச்சி**
**ஊர்காப்பாளர் ஊக்கருங்கணையினர்**
**தேர் வழங்கு தெருவில் நீர் திரண்டொழுக**
**மழை அமைந்து உற்ற அரைநாள் அமயமும்**
**அசைவிலர் எழுந்து நயம் வந்து வழங்கலின்**
**கடவுள் வழங்கும் கையறு கங்குலும்**
**அச்சம் அறியாது ஏமம் ஆகிய**
**மற்றை யாமம் பகல் வரக் கழிப்பி"** **(மதுரைக்.643-653)**

என்ற பாடலடிகளால் சுட்டுவர்.

**தச்சன்**

தச்சுத்தொழில் செய்பவர்கள் சங்க காலத்தில் வாழ்ந்துள்ளதை ஔவையார்,

**“……………….. வைகல்**

**எண்தேர் செய்யுந் தச்சன்**

**திங்கள் வலித்த காலன்னோனே”** **(புறநா.87:2-4)**

என்ற அடிகளால் விளக்குவர்.

**கொல்லன்**

கொல்லர் உடல் வலிமை மிக்கவர்களாக இருந்துள்ளனர். இவர்கள் இரும்பினை உலையில் காய்ச்சி அதன்மீது நீரினைத் தெளித்துள்ளதை ஐயூர் மூலங்கிழார்,

**“கருங்கைக் கொல்லன் செந்தீமாட்டிய**

**இரும்பு ணீரினு மீட்டற் கரிதென**

**வேங்கை மார்பனிரங்க வைகலும்”** **(புறநா.21:7-9)**

என்ற பாடலடிகளால் உணர்த்துவர். அரசர்க்குரிய வேலினை வடித்துக் கொடுத்தல் இவர்களது கடமையாக இருந்துள்ளது. இதனைப் பொன்முடியார்,

**“வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே” (புறநா.312:3)**

கொல்லர்கள் அரத்தால் கருவிகளைக் கூர்மைப்படுத்தியுள்ளனர், அதனை ஆலந்தூர்கிழார்,

**“கருங்கைக் கொல்லன் அரஞ்செ யவ்வாய்**

**நெடுங்கை நவியம் பாய்தலினிலை யழிந்து**

**வீகமழ் நெடுஞ்சினை புலம்பக் காவுதொறும்**

**கடிமரந் தடியு மோசை தன்னூர்”** **(புறநா.36:5-8)**

என்ற அடிகளால் நவிலுவர்.

**உழவர்**

"வன்கை வினைஞர்' என்போர் 'உழைக்கும் தன்மையுடைய உழவர்கள் ஆவர்."[11] மருதநிலத்தின் வயல்களில் விளைந்த நெல்லை அறுக்கும் வலிய கையினையுடையோர் பறையினை ஒலிப்பர். இதனை மாங்குடிமருதனார்,

**"வன்கை வினைஞர் அரிபறை இன்குரல்**

**தளிமழை பொழியும் தண்பரங்குன்றில்" (மதுரைக்.262-263)**

என்ற அடிகளால் விளக்குவர். உழவரினச் சிறுவர்கள் தென்னை மரங்களில் ஏறித் தேங்காயைப் பறித்து உண்பர். அதனைக் கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக்குமரனார்,

**"வன்கை வினைஞர் புன்றலைச்சிறாஅர்**

**தெங்குபடு வியன்பழ முனையிற்" (புறம்.61:8)**

என்ற பாடலடியால் சுட்டுவர்.

உழவர்கள் என்பதற்கு 'உழுபவர்கள்'[12] என வ.த.இராமசுப்பிரமணியம் விளக்கம் அளிக்கிறார். 'உழுவார்'[13] என ஔவை சு.துரைசாமிப்பிள்ளை குறிப்பிடுகிறார். உழுபவர்கள் படைவாளால் (ஏர்முனையை) மறிக்கப்பட்ட ஆமைகளைப் பிடித்து வந்து இல்லத்தில் உணவாக்கி உண்டுள்ளதை இடைக்காடனார்,

**"…………………… உழவர்**

**படை மிளிர்ந்திட்ட யாமையும்" (புறநா.42:12-13)**

என்ற அடிகளால் சுட்டுவர்.

உழத்தியர்கள் களத்தில் எருமைகளைக் கொண்டு நெற்பயிரிலிருந்து நெற்களைப் பிரித்தெடுத்துள்ளதைக் கபிலர்,

**“பரூஉப்பக டுதிர்த்த மென்செந்நெல்லின்**

**அம்பண அளவை யுறை குவித்தாங்கு” (பதிற்.71:4-5)**

என்ற அடிகளால் விளக்குவர். அவ்வாறு பிரித்தெடுத்த நெல்லை அளப்பதற்கு அவர்கள் மரக்காலைப் பயன்படுத்தியுள்ளனர். அதனைக் காக்கைப்பாடினியார் நச்செள்ளையார்,

**“தொன்று திறைதந்த களிற்றொடு நெல்லின்**

**அம்பண அளவை விரிந்துறைபோகிய” (பதிற்.66:7-8)**

என்ற அடிகளால் புலப்படுத்துவர். மரக்கலத்தை ‘அம்பண வளவை’ எனக் குறிப்பதை இதனால் உணரமுடியும். அவ்வாறு விளைந்த நெல்லை உழத்தியர்கள் இரும்புப் பூணிட்ட உலக்கையால் குற்றியெடுத்து உணவாக்கியுள்ளதை ஐயூர் முடவனார்,

**“அடுமகள் முகந்த அளவா வெண்ணெல்**

**தொடிமா ணுலக்கைப் பரூஉக்குற்றரசி” (புறநா.399:1-2)**

என்ற அடிகளால் தெளிவுபடுத்துவர். மாமரத்தின் கனிகளைப் பிசைந்து புளிக்குழம்பு ஆக்குவர். வரால் இறைச்சியையும், வெள்ளைக் கீரையையும், பாகற்காயையும் வற்றலோடு கலந்து உணவாக உழவர்கள் உண்டதை ஐயூர் முடவனார்,

**“ஓங்கு சினை மாவின் றீங்கனி நறும்புளி**

**மோட்டிரு வராஅற் கோட்டுமீன் கொழுங்குறை**

**செறுவின் வள்ளை சிறுகொடிப்பாகற்**

**பாதிரி யூழ்முகை யவழிவிடுத்தன்ன**

**மெய்களைந் தினனொடு விரைஇ''** (புறநா.399:4-8)

என்ற பாடலடிகளால் விளக்குவர்.

**களமர்**

'களமர்' என்பதற்கு 'உழவர்கள்' என்று பொருள் தருகிறார் வ.த.இராம.சுப்பிரமணியம்.[14] களமர் வடித்து எடுக்கப்பட்ட, மதுவினை ஆமையின் இறைச்சியுடன் சேர்த்து விரும்பி உண்டுள்ளனர். அதனைப் பிசிராந்தையார்,

**"களமர்க் கரித்த விளையல் வெங்கள்**

**யாமைப் புழுக்கிற் காமம் வீடவாரா**

**ஆரற் கொழுஞ்சூ டங்கவு ளடாஅ**

**வைகு தொழின் மடியுமடியாவிழவின்''** (புறநா.212:2-5)

என்ற அடிகளால் சுட்டுவர். ஆரல் மீனை களமர் விரும்பி உண்டதைக் கண்டு அறியமுடியும்.

**தொழுவர்**

'தொழுவர்' என்பதற்கு 'உழவர்'[15] என விளக்கம் தருகிறார் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (புறம்.381) பெரும்பாலும் நெய்தல் நில வயல்களில் அறுவடை செய்யும் உழவர்கள் 'தொழுவர்'[16] என அழைக்கப்பட்டுள்ளனர்.

நெய்தல்நில வயல்களில் நெல் அறுவடை செய்த உழவர்கள் ஆம்பலின் அகன்ற இலைகளில் மதுவை வாங்கி உண்டு, களித்து, தம்

கைகளால் தாளம் இட்டுக் குரவைக்கூத்து ஆடியுள்ளார். அதனை இடைக்குன்றூர்கிழார்,

**“பொய்கை நாரை போர்விற் சேர்க்கும்**
**நெய்தலங் கழனி நெல்லரிதொழுவர்**
**கூம்புவிடு மென்பிணி யிவிழ்ந்த வாம்பல்**
**அகலடை யரியல் மாந்தித் தெண்கடற்**
**படுதிரை யின்சீர்ப் பாணி தூங்கும்**
**மென்புல வைப்பி னன்னாட்டுப் பொருந” (புறநா.209:1-6)**

என்ற அடிகளால் சுட்டுவர்.

**அரிநர்**

‘நெல்லினை அறுப்பவர்கள்’ ‘அரிநர்’[17] என அழைக்கப்படுகின்றனர். சோழநாட்டில் நெல் அறுப்பவர்கள் கடைமடையில் வாளை மீனைப் பிடித்துச் சென்றுள்ளதை இடைக்காடனார்,

**“பெருவிறல் யாணர்த்தாகி யரிநர்” (புறநா.42:12)**

எனக் கூறுவர். இவர்கள் வயல்களில் விளைந்த நெற்கதிரை அரிவதற்குக் கதிர்வாளைப் பயன்படுத்தியுள்ளதைப் பெருங்குன்றூர்கிழார்,

**“………. பழனந்தோறும்**
**அழல் மலி தாமரை யாம்பலோடு மலர்ந்து**
**நெல்லின் செருவில் நெய்தல் பூப்ப**
**அரிநர் கொய்வாள் மடங்க அறைநர்**
**தீம்பிழி யெந்திரம் பத்தல் வருந்த” (பதிற்.19:19-23)**

என்ற பாடலடியால் சுட்டுவர்.

உழத்தியர் கடைச்சியர் என அழைக்கப்பட்டுள்ளனர். இவர்கள் வயல்களில் உள்ள ஆம்பல் கொடிகளைக் களைந்துள்ளதைக் கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக்குமரனார்,

**“கொண்டைக் கூழைத் தண்தழைக் கடைச்சியர்” (புறநா.61:1)**

என்ற அடிகளால் சுட்டுவர்.

**அறைநர்**

‘கரும்பினை வெட்டி எந்திரத்திலிட்டு அறைப்பவர்கள் அறைநர்’[18] என அழைக்கப்பட்டுள்ளதைக் குமட்டூர் கண்ணனார், இடைக்காடனார் ஆகியோர்,

**“………. அறைநர்**
**தீம்பிழி யெந்திரம் பத்தல் வருந்த” (பதிற்.19:22-23)**

**“………. அறைநர்**
**கரும்பிற் கொண்ட தேனும்” (புறநா.42:14-15)**

என்ற பாடலடியால் சுட்டுவர்.

**பரத்தையர்**

சங்க காலத்தில் பரத்தைகள் மிகவும் இழிந்தவர்களாகக் கருதப்பட்டனர். இவர்கள் பொருட்பெண்டிர், காமக்கிழத்தியர், வரைவின் மகளிர் என இலக்கியங்கள் இவர்களைக் குறிப்பிடுகிறது. சங்கப்புற இலக்கியமான மதுரைக்காஞ்சியில் பரத்தையர் பற்றிய செய்தியானது குறிப்பிடப்படுகிறது.

மதுரை நகர வீதிகளில் நரை விழுந்த கூந்தலை உடைய முதுபெண்டிர் காம நுகர்ச்சியின்றி வேறொன்றும் அறியாதவராய் வீதியில் உலாவுகின்ற இளைஞர்களைக் காம நுகர்ச்சிக்குக் கைதட்டி அழைக்கும் பழக்கம் வழக்கில் இருந்திருக்கின்றது. விளிம்புநிலை மாந்தர்களான இவர்கள் தம்மைத்தாமே விற்று உயிர்வாழும் நிலை தமிழகத்தின் பொற்காலம் என்று கூறப்படும் சங்க காலத்திலும் இருந்திருக்கிறது. இவர்கள் காமத்தை மிகுவிக்கும் நுகர் பொருட்களையும், மலர்மாலைகளையும் ஏந்தியவாறு வீதிகள் தோறும் உலாவியிருக்கின்றனர். நுகர்பொருட்களை வைப்பதற்கென்றே செய்யப்பட்ட பக்கங்கள் திரண்டும், பொலிவு பெற்றும் விளங்கும் வெண்கலச் செப்புக்களையும் இம்முதுபெண்டிர் தங்கள் கைகளில் கொண்டிருந்தனர். இது பரத்தமைக்குரிய அடையாளமாக இருந்திருக்கிறது. இப்பழக்கம் இன்றும் பெருநகரங்களில் வழக்கில் இருந்து வருகிறது.

பரத்தையர் பல்வேறு வாசனைப் பொருட்களால் தங்களை அலங்கரித்துக் கொண்டு இரண்டாம் சாமம் முதல் விடியும் வரை மதுரை நகர வீதிகளில் காணப்பட்டனர். இதனை மாங்குடிமருதனார்,

**“தொய்யில் பொறித்த சுணங்கு எதிர் இளமுலை**
**மை உக்கன்ன மொய் இருங் கூந்தல்**
**மயில் இயலோரும் மடமொழி யோரும்**
**கைஇ மெல்லிதின் ஒதுங்கிக் கைஎறிந்து**
**கல்லா மாந்தரோடு நகுவனர் திளைப்ப**
**புடைஅமை பொலிந்த வகைஅமை செப்பில்**

**காமர் உருவின் தாம்வேண்டு பண்ணியம்**

**கமல்நறும் பூவொடு மனைமனை மறுக" (மதுரைக்.416-423)**

என்ற பாடலடியால் விளக்குகிறார். இப்பரத்தையர், கோட்டைவாயில்களில் நின்று கொண்டு அவ்வழியாகச் செல்வோரை வருந்தி அழைக்கும் பழக்கமும் சங்க காலத்தில் வழக்கில் இருந்தது. இதனை மாங்குடி மருதனார்,

**"அணங்கு வழங்கும் அகல் ஆங்கன்**

**நிலத்து ஆற்றும் குழூஉப் புதவின்**

**அரந்தைப் பெண்டிர் இணைந்தனர் அகவ" (மதுரைக்.164-166)**

என்ற பாடலடியில் விளக்குகிறார். இல்லுறை தெய்வங்கள் உலாவுகின்ற வீதிகளில் விளிம்புநிலை மாந்தர்களான பரத்தையர் உலாவினர். இவர்கள் ஆண்களை வலிய அழைத்தனர் என்ற செய்தியானது புலப்படுத்துகிறது.

**பூவிலைப்பெண்டிர்**

பூ விற்கும் மகளிர் இல்லங்கள் தோறும் சென்று பூ விற்றுள்ளதை நொச்சி நியமங்கிழார்,

**"குறும்பர்க் கெறியும் ஏவல் தண்ணுமை**

**நாணுடை மாக்கட் கிரங்கு மாயின்**

**எம்மினும் பேரெழில் இழந்து வினையெனப்**

**பிறர்மனை புகுவள் கொல்லோ**

**அளியள் தானே பூவிலைப் பெண்டே" (புறநா.293:2-6)**

என்ற அடிகளால் விளக்குவர். பூவிற்கும் மகளிர் போருக்குப் பிரிந்த ஆடவர்களின் இல்லத்திற்குச் சென்று பூவிற்பதில்லை என்ற கருத்து ஈண்டு

கூறப்பட்டுள்ளது. மேலும், “பிறர்மனை என்றது போர்க்கு ஆகாரென விலக்கப்பட்ட பார்ப்பனர், நோயுற்றார், மகப்பெறாதார் முதலாயினோர் மனையைக் குறிக்கும் மறக்குடி மகளிர் பூவிற்கும் பெண்களுக்கு நல்ல நன் கலங்களை வீறுபட வழங்கும் இயல்பினர். அவர் பூவை விலக்கியது பூவிலை மடந்தைக்குப் பெரு வருத்தத்தைச் செய்ததென அறிக. அவளது வருத்தத்தை அவள் கூறும் பூவினை ஒலியே எடுத்துக் காட்டுதலால் அளியள் எனப்பட்டாள்”[19] என்பர் ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை.

**நெசவாளர்**

பருத்திப்பஞ்சு நூற்கும் பெண்டிரே ‘பருத்திப் பெண்டிர்’ என அழைக்கப்பட்டுள்ளனர். அவர்கள் நெசவின்போது மிஞ்சும் ஓடுகள், கொட்டைகள், சருகுக்குப்பை முதலியவற்றை நீக்கியுளர். இரவில் அவற்றை நீக்கும்போது ஒளிக்காகச் சிறு விளக்கைப் பயன்படுத்தியுள்ளனர். அதனை வடமவண்ணக்கண் பெருஞ்சாத்தனார், தங்கால் பொற்கொல்லன் வெண்ணாகனார் ஆகியோர்,

**“பருத்திப் பெண்டின் பனுவலன்ன**
**நெருப்புச் சினந் தணிந்த நிணந்தயங்கு கொழுங்குறை**
**பரூஉக்கண் மண்டையோ டூழ்மாறு பெயர**
**உண்கு மெந்தை…..”** **(புறநா.125:1-4)**

என்ற பாடலடியால் தெளிவுபடுத்துவர்.

**பருத்திப் பெண்டிர்**

பருத்திப்பெண்டிர் 'புடையுநள்' என அழைக்கப்பட்டுள்ளாள். இப்பெயர் காரணப்பெயராகும். ஏனெனின் அவர்கள் சிறையும், கொட்டையும், தூசியும், புடைத்துள்ளனர். இத்தொழிலை இரவிலும் அவர்கள் செய்துள்ளதை புலவர் தங்கால் பொற்கொல்லன் வெண்ணாகனார்,

**"சிறையும் செற்றையும் புடையுநளெழுந்த**

**பருத்திப் பெண்டிர் சிறுதீ விளக்கத்து"** **(புறநா.326:4-5)**

என்ற பாடலடிகளால் விளக்குவர்.

**கலிங்கம் பகர்நர்**

ஆடை விற்கும் தொழிலைச் செய்தவர்கள் சங்க காலத்தில் இருந்துள்ளனர். அதனை மாங்குடிமருதனார்,

**"….. கலிங்கம் பகர்நரும்"** **(மதுரைக்.513)**

என்ற பாடலடிகளால் சுட்டுவர்.

**புலைத்தி**

புலைத்தி உவர்மண் கொண்டு ஆடைகளைத் துவைத்ததை ஔவையார்,

**"களர்ப்படு கூவற் தோண்டி, நாளும்**

**புலைத்தி கழீஇய தூவெள்ளறுவை**

**தாதெரு மறுகின் மாசுண விருந்து**

**பலர்குறை செய்த மலர்த்தார்"** **(புறநா.311:1-4)**

என்ற அடிகளால் உணர்த்துவர். உவர்மண் கொண்டு ஆடை வெளுப்பதால் புலைத்தியின் பெரிய நகம் கறைபடிந்து காணப்பட்டுள்ளது. அவள் பட்டாடைக்கு நெடுநேரம் கஞ்சி ஊட்டியுள்ளாள்.

**பரத்தியர்**

பனை மரத்தின் நுங்கு, கருப்பஞ்சாறு, தென்னையின் இளநீர் ஆகிய மூவகைச் சுவை நீரையும் உட்கொண்ட பரத்தியர் கடல் நீரில் பாய்ந்து விளையாடி மகிழ்ந்துள்ளனர். அதனைப் மாங்குடிகிழார்,

> **“வண்டுபட மலர்ந்த தண்ணறுங்கானல்**
> **முண்டகக் கோதை யொண்டொடி மகளிர்**
> **இரும்பனையின் குரும்பை நீரும்**
> **பூங்கரும்பின் றீஞ்சாறும்**
> **ஓங்குமணற் குவவுத் தாழைத்**
> **தீநீரோ டுடன் விராஅய்**
> **முந்நீருண்டு முந்நீர்ப்பாயும்”** **(புறநா.24:10-16)**

என்ற பாடலடியால் உணர்த்துவர்.

**யானைப்பாகர்**

யானைப்பாகர் பண்டைய நாட்களில் உணவுக்கான கவலையின்றி வாழ்ந்துள்ளனர். இவர்களால் பராமரிக்கப்படும் யானைகளின் உணவிற்காக அக்காலத்து வாழ்ந்த மன்னரும், செல்வந்தரும் நெல்வயல்களைத் தந்தனர். தன் பராமரிப்பில் இருந்த யானை இறந்து போனதால் யானைப்பாகன் வருந்தியுள்ளதைப் புலவர் பொத்தியார்,

**“பெருஞ்சோறு பயந்து பல்யாண்டு புரந்த**

**பெருங்களி றிழந்த பைதற்பாகன்**

**அது சேர்ந் தல்கிய வழுங்கலாலை**

**வெளில்பா ழாகக் கண்டுகலுழ்ந் தாங்கு**

**கலங்கினெ னல்லனோ யானே பொலந்தார்த்**

**தேர்வண் கிள்ளி போகிய**

**பேரிசை மூதூர் மன்றங் கண்டே”** **(புறநா.220:1-7)**

என்ற அடிகளால் புலப்படுத்துவர். போர்க்களம் சென்று திரும்பியுள்ளதைப் புலவர் கபிலர்,

**“மலையுறழ் யானை வான்தோய் வெல்கொடி**

**வரைமிசை யருவியின் வயின் வயினுடங்க”** **(பதிற்.69:1-2)**

என்ற அடிகளால் புலப்படுத்துவர்.

யானையானது அம்புலி மாடத்தில் செய்து வைத்த புலியை உண்மைப் புலியென நினைத்து வெருண்டது. அதனைக் கண்ட யானைப்பாகர் யானையின் பயத்தை நீக்கித் தன் கட்டுக்குள் அதனைக் கொண்டு வந்தார். அதனை,

**“கூங்கை மதமாக் கொடுந்தோட்டி கைந்நீவி**

**நீங்கும் பதத்தா ஒருமுப் பெயர்த்தந்து**

**வாங்கி முயங்கி வயப்பிடி கால்கோத்துச்**

**சிறந்தார் நடுக்கஞ் சிறந்தார்களையல்”** **(பரி.10:29-32)**

என்ற அடிகள் தெளிவுபடுத்தும்.

**நாழிகைக் கணக்கர்**

மன்னர்களுக்கு அருகிலிருந்து காலத்தைக் கணித்துக் கூறுமிடத்தில் நாழிகைக்கணக்கர் இருந்துள்ளனர். இவர்களைக் குறித்த செய்தி மதுரைக்காஞ்சியில் இடம்பெற்றுள்ளது. அதனை மாங்குடி மருதனார்,

**"வேதாளிகரொடு நாழிகை இசைப்ப" (மதுரைக்.671)**

என்ற அடிகளால் சுட்டுவர்.

**வலைஞர்**

வலைஞர்கள் வலிமையான மீன்களை முகந்து வந்து விலைகூறி விற்றுள்ளதை மாங்குடி மருதனார்,

**"கம்புட் சேவலின் துயிலிரிய**
**வள்ளை நீக்கி வயமீன் முகந்து**
**கொள்ளை சாற்றிய கொடுமுடி வலைஞர்" (மதுரைக்.254-256)**

என்ற அடிகளால் உணர்த்துவர். முற்றிய வரால் மீனை முகந்து கொள்ளும் அகன்ற நாட்டில் வலைஞர் வாழ்ந்துள்ளதைச் தும்பிசொகினனார்

**"கதிர் மூக்கு ஆரல் கீழ்ச்சேற்று ஒளிப்ப**
**கணை கோட்டு வாளைமீநீர்ப் பிறழ**
**எரிப்பூம் பழனம் நெரித்து உடன் வலைஞர்**
**அரிக்குரல் தடாரியின் யாமை மிளிர" (புறநா.249:1-4)**

என்ற பாடலடியால் சுட்டுவர்.

**கொண்டி மகளிர்**

கொண்டி மகளிர் பகை நாட்டிலிருந்து சிறைபிடிக்கப்பெற்றுத் திருக்கோயில் பணிகள் ஈடுபடுத்தப்பட்டவர்களாவர். ‘கொண்டி’ என்ற சொல்லானது ‘கொள்ளை’ என்ற பொருள்பட அமைந்துள்ளதை ஐயூர்முடவனார்,

**“கொண்டி வேண்டுவ னாயிற்கொள்கெனக்**

**கொடுத்த மன்னர் நடுக்கற்றனரே”** **(புறநா.51:6-7)**

என்ற அடிகளால் நவிலுவர். அச்சொல் ‘….. திறைப்பொருள்’ என்ற பொருள்பட அமைந்து விளக்குவதைப் புலவர் இடைக்குன்றூர்கிழார்,

**“பொருநனும் இளையன் கொண்டியும் பெரிதென’** **(புறநா.78:6)**

என்ற அடிகளால் சுட்டுவர். கொண்டி மகளிர் பொருள் வாங்குதலையுடைய பரத்தையராக விளங்கியதை மாங்குடிமருதனார்,

**“மாயப் பொய்பல கூட்டி கவவுக்கரந்து**

**சேயரும் நணியரு நலனயந்து வந்து**

**விளம்பல் செல்வர் வளந்தப வாங்கி**

**நுண்தா துண்டு வறும்பூத் துறக்கும்**

**மென்சிறை வண்டின மானப் புணர்ந்தோர்**

**நெஞ்சே மாப்ப இன்துயில் துறந்து**

**பழந்தேர் வாழ்க்கைப் பறவை போல**

**கொழுங்குடிச் செல்வரும் பிறருமே எய**

**மணம் புணர்ந்தோங்கிய அணங்குடை நல்லில்**

**ஆய்பொன் அவிர்தொடிப் பாசிழை மகளிர்**

**ஒண்சுடர் விளக்கத்துப் பலருடன் துவன்றி**

**நீனிற விசும்பில் அமர்ந்தனர் ஆடும்**

**வானவ மகளிர் மான கண்டோர்**

**நெஞ்சு நடுக்குறூஉக் கொண்டிமகளிர்**

**யாமநல்யாழ் நாப்ப ணின்ற"** **(மதுரைக்.570-584)**

என்ற அடிகளால் உணர்த்துவர்.

**கிணறு தோண்டுபவர்**

பழந்தமிழர் வழிப்போக்கர்களுக்கும், கால்நடைகளுக்கும் உதவுமாறு கிணறு தோண்டி வைத்திருந்ததை சங்கப்பாடல்கள் குறிப்பிடுகின்றன. 'கிணறு' என்ற சொல்லானது சங்க காலத்தில் 'கூவல்' என்ற சொல்லால் குறிப்பிடப்படுகிறது. அதனைக் கூவம், கேணி, கிணறு எனவும் கூறியுள்ளனர். மக்கள் உண்ணும் நீருக்காக கூவல் அமைக்கப்பட்டு இருந்ததை அள்ளூர் நன்முல்லையார்,

**"அரிதுண் கூவலங் குடிச் சீறூர்'** **(புறநா.306:2)**

என்ற அடிகளால் விளக்குவர்.

கிணறானது கற்பாறை நிறைந்த நிலத்தில் அந்தப் பாறைகளை உடைத்து அரிதுமுயன்று தோண்டப்படும். சில நேரங்களில் அதன்கண் ஊறும், நீரும் நல்ல நீராகாது; உவர்நீராய் அமைந்துவிடும். இதனை உறையூர் முதுகூத்தனார்,

**“கல்லறுத் தியற்றிய வல்லுவர்க் கூவல்”** (புறநா.331:1)

என்ற பாடலடியால் சுட்டுவர். ஆடை வெளுக்கும் தொழில் உடையவள் புலைத்தி. இவள் களர் நிலத்தில் ஊறும் உவர்நீரினைக் கொண்டு ஆடைகளைச் சுத்தம் செய்கிறாள். அதனைக் கபிலர்,

**“களர்ப்படு கூவல் தோண்டி நாளும்**

**புலைத்தி கழீஇய தூவெள்ளறுவை”** (புறநா.311:1-2)

என்ற அடிகளால் புலப்படுத்துவர். களர் நிலத்தை அகழ்ந்து நீர் எடுத்து புலைத்தி ஆடை வெளுத்துள்ளாள் என்பது இதன் கருத்து.

உவர் நிலத்தினைப் போன்றே செம்மண் நிலத்தினையும் அகழ்ந்து மக்கள் நீரெடுத்துள்ளதை ஆலங்குடி வங்கனார்,

**“பூவற் படுவிற் கூவல் தோண்டிய**

**செங்கட் சின்னீர்”** (புறநா.319:1-2)

என்ற அடிகளால் உணர்த்துகிறார்.

### தொகுப்புரை

- ❖ தினைப்புனம் காக்கும் குறிஞ்சிநில மாந்தர் புனவன் எனப்படுவர். புனவன் தினைக்கதிர்களை மேயவரும் பறவைகளை விரட்ட ‘தட்டை’ என்னும் கருவியைப் பயன்படுத்தியுள்ளான்.
- ❖ ஊர்க்காப்பாளர் வலிமை வாய்ந்தவர்கள், உறங்காக் கண்ணையுடையவர்; சோர்வில்லாது விருப்புடன் காவல் செய்வர்.

- ‘துணங்கைக்கூத்து’ ஆடுவோர் துணங்கையர் எனப்படுவர். அவர்கள் பாண்டில் விளக்கொளியில் துணங்கைக்கூத்து ஆடுவர்.

- விறலியர் இசை மரபிற்கேற்ப ஆடுவதில் கைதேர்ந்தவர்கள். அவர்களின் ஆடல், பாடல்களைப் பாராட்டி மூவேந்தர்கள் பொன்னரி மாலையைப் பரிசாகக் கொடுத்துள்ளனர். அவர்கள் யானைக் கூட்டத்தையும் பரிசாகப் பெற்றுள்ளனர்.

- பருத்திப் பெண்டிர் ‘புடையுநள்’ என அழைக்கப்பட்டுள்ளாள்.

- ஆடை விற்கும் தொழிலைச் செய்வோர் ‘கலிங்கம் பகர்நர்’ என அழைக்கப்பட்டுள்ளனர்.

- கொல்லர்கள் இரும்பினை உலையில் காய்ச்சியுள்ளனர். படைக்கருவிகளான ‘வேல்’ போன்றவற்றைத் தயாரித்துக் கொடுத்துள்ளனர். கொல்லர்கள் அரத்தால் கருவிகளைக் கூர்மைப்படுத்தினர்.

- பொழுதறிந்து கூறுவோர் ‘நாழிகைக் கணக்கர்’ எனப்பட்டனர்.

- உழைக்கும் தன்மையுடைய உழவர்கள் ‘வன்கை வினைஞர்’ எனப்பட்டனர். அவர்கள் நெல்லினை அறுக்கும் போது பறையினை ஒலித்துள்ளனர். அவர்கள் ஆமை இறைச்சியினைச் சமைத்து உணவாக உண்டுள்ளனர். அவர்கள் மரக்கலத்தை ‘அம்பணஅளவை’ எனக் கூறியுள்ளனர்.

- உழத்தியர்கள் 'எருமைகளைப்' பயன்படுத்தி நெற்பயிர்களைப் பிரித்தெடுத்துள்ளனர். பிரித்தெடுத்த நெல்லினை இரும்புப்பூணிட்ட உலக்கையால் குற்றியெடுத்து உணவாக்கியுள்ளனர்.

- பூவிலைப் பெண்டிர் போருக்குப் பிரிந்த ஆடவர்களின் இல்லத்திற்குச் சென்று பூ விற்பதில்லை.

- பொருநர் பசித்துயருடன் வறுமையால் வாடியுள்ளனர். இவர்களது வறுமையை மன்னர்கள் நீக்கியுள்ளனர்.

- சோழன் கிள்ளிவளவன் நெய்யிட்ட கறிவறுவல், பால் ஆகியவற்றைப் பொருநர்க்குக் கொடுத்த செய்தியின் மூலம் விளம்புநிலை மாந்தருக்கும் நல்ல உணவு வழங்கப்பட்டுள்ளதை அறியமுடிகின்றது.

- களமர் மது, ஆமையின் இறைச்சி ஆகியவற்றை விரும்பி உண்டுள்ளனர்.

- தொழுவர் ஆம்பல் இலையினால் மதுவினை வாங்கி உண்டு குரவைக்கூத்து ஆடியுள்ளனர்.

- 'நெல்லினை அறுப்பவர்கள்' 'அரிநர்' என்றழைக்கப்பட்டுள்ளனர். அவர்கள் நெற்கதிர்களை அரிவதற்குக் கதிர்வாளைக் கருவியாகப் பயன்படுத்தியுள்ளனர்.

- இங்கு களமர், தொழுவர். அரிநர் ஆகியோர் உழவுத் தொழிலின் பல்வேறு பணிகளைச் செய்துள்ளனர். ஆனாலும் அவர்களுக்குள் வேறுபாடுகள் காட்டப்பெறவில்லை என்பது சிந்திக்கத்தக்கது.

- ❖ கரும்பினை வெட்டி எந்திரத்திலிட்டு அறைப்பவர்கள் ‘அறைஞர்’ என அழைக்கப்பட்டுள்ளனர்.
- ❖ குறுந்தூம்பு, நெடுந்தூம்பு, தேரைக்குரல் போன்ற பல வாச்சியங்களைக் கொண்டு சென்று பல ஊர்களில் கூத்தர் கூத்து நிகழ்த்தியுள்ளனர். அவர்கள் மன்னர்களிடம் பெற்ற பரிசில்களைத் தம் எதிர்காலத் தேவைக்கெனப் பாதுகாத்து வைக்கவில்லை என்பதிலிருந்து தனிச் சொத்துடைமையை விரும்பாத நிலையை உணரமுடிகின்றது.
- ❖ கூத்தரின ஆடவர் எருக்கம்பூவினைத் தலையிலும் பெண்டிர் கழுத்தில் ஆவாரம்பூ மாலையினையும் அணிந்துள்ளனர்.
- ❖ வயரியர் யாழினை உடையவர்கள். அவர்கள் கள்ளினை உண்டுள்ளனர். வேந்தனிடம் தங்கள் கலைத்திறனை வெளிப்படுத்திப் பொன்செய்ப் புனையிழை மற்றும் பரிசுகள் பல பெற்றுள்ளனர்.
- ❖ சேரலாதன் கண்ணுளர்க்குக் குதிரைகளையும், கன்றுகளையும், தேர்களையும் பரிசில்களாக வழங்கியுள்ளான்.
- ❖ பரத்தியர் பனைமரத்தின் நுங்கு, கருப்பஞ்சாறு, தென்னையின் இளநீர் ஆகிய மூவகைச் சுவை நீரையும் உட்கொண்டுள்ளனர்.
- ❖ பகைநாட்டிலிருந்து சிறைபிடிக்கப்பெற்ற பெண்டிர் ‘கொண்டி மகளிர்’ என அழைக்கப்பட்டுள்ளனர். இவர்கள் பொருள் வாங்குதலையுடைய பரத்தையராகவும் விளங்கியுள்ளனர்.

- ஊர்மண் கொண்டு ஆடைகளைத் துவைத்தவள் ‘புலைத்தி’ என அழைக்கப்பட்டுள்ளாள். அவள் பட்டாடைக்கு நெடுநேரம் கஞ்சி ஊட்டி உள்ளாள்.

- யானைப்பாகர் பண்டைய நாட்களில் உணவுக் கவலையின்றி வாழ்ந்துள்ளனர். அவர்கள் யானைகளின் உணவுகளுக்காக விடப்படும் நெல் வயல்களிலிருந்து தமக்கு வேண்டிய உணவைப் பெற்றுள்ளதே அதற்குரிய காரணமாக அமைகிறது.

**சான்றெண் விளக்கம்**

1. இரா.இளங்குமரன், பாணர், ப.2.
2. கிரியாவின் தற்காலத் தமிழகராதி, ப.706.
3. வீரமாமுனிவர், சதுரகராதி, ப.151.
4. ஆ.சிங்காரவேலு, அபிதான சிந்தாமணி, ப.307.
5. பிங்கல முனிவர், பிங்கல நிகண்டு, ப.128.
6. இராசமாணிக்கம், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப.42.
7. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.273.
8. கே.ஏ.நீலகண்டசாஸ்திரி; சோழர்கள்; பகுதி-ஒன்று, ப.101.
9. வ.த.இராமசுப்பிரமணியம் (உ.ஆ.), புறநானூறு, ப.162.
10. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), பதிற்றுப்பத்து, ப.122.
11. வ.த.இராமசுப்பிரமணியம் (உ.ஆ.), புறநானூறு, ப.163.
12. மேலது, ப.151.
13. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), புறநானூறு, ப.130.
14. வ.த.இராமசுப்பிரமணியம் (உ.ஆ.), புறநானூறு, ப.385.
15. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), புறநானூறு, ப.381.
16. மேலது, ப.381.
17. மேலது, ப.116.
18. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), பதிற்றுப்பத்து, ப.50.
19. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), புறநானூறு, இரண்டாம் பகுதி, ப.188.

## இயல்-5

## ஆற்றுப்படை நூல்களில் விளிம்புநிலை மக்களின் வாழ்வியல்

### முன்னுரை

பத்துப்பாட்டில் சரிபாதியாக இருப்பது ஆற்றுப்படை நூல்களாகும். இப்பாடல்களில் விளிம்புநிலை மக்களாக உள்ள கூத்தர், பாணர், பொருநர், விறலியர் போன்றோர் சிறப்பாக இடம்பெற்றுள்ளனர். இப்பாடல்களை நிகழ்த்துபவர்களாகவே உள்ளனர். ஆற்றுப்படுத்துதல் என்ற சொல்லிலிருந்தே மையம், விளிம்பு என்ற இரு பிரிவாகச் சமூகம் இருந்ததை அறியமுடிகின்றது. இங்கு புரவலர்களாகிய மையத்திடம் கலைஞர்களாகிய விளிம்புநிலை மக்கள் ஆற்றப்படுத்தப்படுவது நிகழ்கிறது. இவ்வாறாக ஆற்றுப்படை நூல்களில் வெளிப்படுகின்ற விளிம்புநிலை மக்களான கோடியர், வயிரியர், கண்ணுளர், பாணர், பொருநர், விறலியர், குறவன், யானைப்பாகர், தச்சன், கொல்லர், உழவர், களமர், களைஞர், அரிநர், வலைஞர், நுளைத்தியர், கள்அடுமகளிர், உமணர், எயிற்றியர், மறவர் ஆகிய இருபது பேரும் குறித்த செய்திகளைத் தொகுத்து ஆய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

### கோடியர்

கூத்தர்கள் கோடியர் எனவும், பல்லியக் கோடியர் எனவும் அழைக்கப்பெற்று உள்ளனர். இதனை,

**“பாடல் பற்றிய பயனுடைய யெழாஅற்**
**கோடியர் தலைவ”** **(பொருந.56-57)**

**“பல்லியக் கோடியர்”** **(சிறுபாண்.125)**

என்ற பாடலடிகள் புலப்படுத்தும்.

**வயரியர்**

வயரியர், கண்ணுளர் ஆகியோர் குறித்த பதிவுகளை,

**"கலம்பெறு கண்ணுளர் ஒக்கல் தலைவ" (கூத்தராற்.50)**

என்ற அடிகள் புலப்படுத்துகின்றன.

**கண்ணுளர்**

கண்ணுளர் பேரணிகலன்களை வள்ளல்களிடம் பெற்றதைப் பெருங்கௌசிகனார்,

**"புலம்பு விட்டிருந்த புனிறுஇல் காட்சி**
**கலம்பெறு கண்ணுளர் ஒக்கல் தலைவ" (கூத்தராற்.49-50)**

என்ற அடிகளால் சுட்டுவர். கலைஞர்கள் இசைக்கருவிகளைக் கலப்பையிலிட்டு எடுத்துச் செல்வது வழக்கமாக இருந்துள்ளது. இதனைப் புலவர் பெருங்கௌசிகனார்,

**"நேர்ச்சீர் சுருக்கிச் காய கலப்பையிர்..." (கூத்தராற்.13)**

**"கா அய்க் கொண்ட நும் இயம்தொய் படாமல்" (கூத்தராற்.365)**

என்ற அடிகளால் உணர்த்துவர்.

**பாணர்**

பண்வாசித்தலைத் தொழிலாகக் கொண்டவர்கள் பாணர்கள். இசையும் கூத்தும் முழுதுறத் தழுவி வாழ்ந்த ஒரு பழங்குடியினர். இவர்கள் பாடுவார் என்ற அளவில் பொருள் சொல்லக்கூடிய சுருங்கிய கலைவல்லார் அல்லர். "பாடுவாரும் ஆடுவாரும் கருவி இசைப்பாரும் கருவி செய்வாரும் அவர்தம் பெண்டிரும் கூடிய பெருந்தொகுதியினர் பாணர் ஆவர்."[1] பாணர்கள்

"வெவ்வேறு நிலைகளில் பல இசைச் சமூகங்களாகப் பிரிக்கப்பட்டு அரசியல் சார்ந்த ஒடுக்குமுறைக்கும் பொருளியல் சார்ந்த ஒடுக்குமுறைக்கும் பண்பாடு சார்ந்த ஒடுக்குமுறைக்கும் உள்ளான காரணத்தால் இவர்களை ஒடுக்கப்பட்டோர் எனக் குறிப்பிடுகின்றார் ஆ.சுப்பிரமணியன்."[2]

"பாணர் காலையில் மருதப்பண்ணையும், மாலையில் செவ்வழிப் பண்ணையும், நண்பகலில் பாலைப்பண்ணையும் காலம் கருதி இசைத்துள்ளனர் (புறநா.149:1-3). அவர்கள் யாழ் என்னும் கருவியைத் தன்னகத்தே கொண்டவர்கள். இவர்கள் வீட்டுப் பெண்கள் யாழ் வாய்ப்பாட்டுப் பாடும் சிறப்பால் பாடினிகள் என்று அழைக்கப்பட்டனர். இவர்களும் விறலியும் பிச்சைக்காரர்களாதலின் அவர்களின் வறுமையை வருணிப்பதற்காக அவளின் கேசாதிபாத வருணனை இடம்பெற்றுள்ளது."[3] "சீறியாழைத் தழுவியவன் சிறுபாணன்"[4] என்றும், "பேரியாழைத் தழுவியவன் பெரும்பாணன்"[5] என்றும் பெயர் பெற்றுள்ளனர். ஆனால் அதற்கான குறிப்பு புறநானூற்றில் தெளிவாக இல்லை. பாணர்கள் பாடல்கள் இயற்றுவதிலும் இயற்றிய பாடலை இசைப்பதிலும் வல்லவர்கள். அவர்கள் பழுத்த மரங்களை நாடிச்செல்லும் நாடோடி வாழ்க்கையினர். அதனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

**"பழுமரம் தேரும் பறவைபோலக்**

**கல்லென் சுற்றமொடு கால்கிளர்ந்து திரிதரும்" (பெரும்பாண்.20-21)**

என்ற அடிகளால் விளக்குவர். இவர்கள் காடுகளைக் கடந்து செல்லும்போது தங்களுக்கு எவ்வித இடர்ப்பாடுகளும் கள்வர்களாலும், விலங்குகளாலும், தெய்வத்தாலும் வாராது இருப்பதற்காகக் கடவுளை வழிபட்டுள்ளனர். அவர்கள்

யாழினை வணங்கி ஆடுதலையும் பாடுதலையும் செய்துள்ளனர். அதனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

**"இடனுடைப் பேரியாழ் முறையுளிக் கழிப்பிக்**

**கடன்அறி மரபிற் கைதொழுஉப் பழிச்சி" (பெரும்பாண்.462-463)**

என்ற அடிகளால் உணர்த்துவர். பாணர்கள் இசைக்கும் யாழில் உள்ள நரம்பு கற்றாழை நாரினால் ஆனது. அதன்கோடு குமிழ மரக் கிளையால் ஆனது. அதனை முடத்தாமக்கண்ணியார்,

**"குமிழின்**

**புலல் கோட்டுத் தொடுத்த மரற்புரி நரம்பின்**

**வில் யாழ் இசைக்கும் விரலெறிகுறிஞ்சி" (பொருந.180-182)**

என்ற அடிகளால் விளக்குவர். பாணர் இசைவல்லார் பலர் இருக்கும் அரசனின் அவையில் இசையைப் பாடி அரங்கேற்றம் செய்துள்ளதனைப் பெருங்கௌசிகனார்,

**"……………………… அருள்நெறி திரியாது**

**இசைபெறு திருவின் வேத்தவை ஏற்ப**

**துறைபல முற்றிய பைதீர் பாணரொடு" (கூத்தற்.38-40)**

என்ற அடிகளால் உணர்த்துவர்.

யாழ் 11 உறுப்புக்களை உள்ளடக்கியது. அவை பத்தல், பச்சைப் போர்வை, நுண்துளை, ஆணி, நரம்பு, மருப்பு, திவவு, யாப்பு, கலைக்கடை, உந்தி, வருவாய் என்பனவாகும். இந்த யாழினைப் பாணர்கள் இடத்தோள் பக்கம் அணைத்துக் கொண்டு பாடியுள்ளனர். அதனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார், இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் ஆகியோர்,

**“இடனுடைப் பேரியாழ் முறையுழிக் களிப்பி” (பெரும்பாண்.462)**

**“தொடையமைக் கேள்வி இடவயிற் றழீஇ” (பெரும்பாண்.16)**

**“பொன்வாந் தன்ன புரியடங்கு நரம்பின்**

**இன்குரற் சீறியாழ் இடவயிற் றழீஇ**

**நைவளம் பழுநிய நயந்தெரி பாலை**

**கைவல் பாண்மகன் கடனறிந் தியக்க” (சிறுபாண்.34-37)**

என்ற அடிகளால் விளக்குவர். இந்த யாழை இயக்குவதில் நல்ல பயிற்சியுடைய பாணர்களை “கைவல் பாண்மகன்” (சிறுபாண்.37) என்றழைத்துள்ளனர். இத்திறத்தினர் பாலையாழில் நட்டபாடை என்னும் பண்ணை இசைநூல் கூறுகிற முறையில் செம்பாலையாக வாசித்துள்ளனர் (சிறுபாண்.36:37,229-230). யாழ்வகையில் பேரியாழ், செங்கோட்டியாழ் இரண்டும் முதன்மையானவை. கல்வி முதிர்ந்த பாணர்கள் இசையை எக்காலமும் கேட்கின்ற அரசர்களின் அவைக்களத்தே அவர்கள் செவிகொள்ளும்படி வாசித்துள்ளனர் (மலைபடு.39-40). பாணருடன் கல்லா இளையரும் (சிறுபாண்.31), விறலியும் (சிறுபாண்.33, பெரும்பாண்.486), பாணரின் சுற்றமும் (சிறுபாண்.144, பெரும்பாண்.21), இரும்பேரொக்கலும் (பெரும்பாண்.21) சென்றுள்ளனர். அரசர்களின் அவைக்களத்தில் அறிவு முதிர்ச்சியுற்ற பாணர்கள் இசை இசைத்துள்ளனர். அதனை மன்னர்கள் கேட்டு மகிழ்ந்துள்ளனர் எனக் கூத்தராற்றுப்படை கூறும். இப்பாணர்கள் வறுமையில் வாழ்ந்த இரவலராக விளங்கினர் என்பதனை “துனிகூர் எவ்வமொடு துயர் ஆற்றுப் படுப்ப, முனிவிகந் திரந்த முதுவாய் இரவல” (சிறுபாண்.39-40) என்ற அடிகள் புலப்படுத்தும்.

**பொருநர்**

"பொருநர்கள் போர்க்களம் பாடுகையில் வீரர் போன்றும், ஏர்க்களம் பாடுகையில் உழவர் போன்றும் வேடமிட்டதை க.கைலாசபதி குறிப்பர்."[6] போர்க்களத்திற்கு வீரர் போலவே உடை தரித்துச் சென்றாலும் இவர்கள் போரிடாமையால் பொராப் பொருநர் எனப்பட்டனர். "சங்க இலக்கியத்தில் பொருநர் வேடமிட்டோ வேடமின்றியோ ஆடியதாக குறிப்புகள் இல. மாறாக இவர்கள் தடாரி அல்லது கிணையை முழக்கிப் பாடுபவராகவே சுட்டப்படுகின்றனர்."[7] பொருதல் என்னும் சொற்கு மோதுதல் அல்லது தாக்குதல் என்பது பொருளாகும். போர் என்னும் சொல் பொருதலாகிய வினையினடியாகத் தோன்றியதேயாகும். இதனை,

**"வளிபொருதெண்கண்"** **(தொல், பொருள், நூற்.88)**

என்பதில் காற்று மோதுதல் குறிக்கப்பட்டது. "பொருநர் என்னும் கலைஞர் தம் கையகத்தில் இருந்த கிணை அல்லது தடாரியை வன்மையாக அடித்து முழக்கிப் பாடுவது மரபாகக் கூறப்படுகின்றது. இதனை ஒற்றுதல் என்னும் சொற்கொண்டு விளக்குதலால் பொருநர் என்னும் சொல் இவ்வடிப்படையில் தோன்றிற்றாதல் தகும். கிணைவன் என்பது கருவியடியாகவும், பொருநன் என்பது அதனை ஆளும் முறையடியாகவும் அமைந்த பெயர்கள் ஆகும்"[8] இவர்கள் பறை கிழியும்படியாக இயக்குவர். பறையை வன்மையாகத் தாக்குவோர் என்னும் பொருளில் பொருநர் என்று வழங்கப்பட்டனர்.

பொருநராற்றுப்படை, பொருநனை 'விரகறிபொருந' என்று அழைத்திருப்பது சுட்டத்தக்கது. விரகு என்பது அறிவுத்திறன், சாமர்த்தியம்,

நுட்ப அறிவு, தந்திரம் போன்ற பல பொருட்களைத் தரும் சொல். இத்தகைய சிறந்த சொல்லை அடைமொழியாகக் கொண்டவன் பொருநன்.

பொருநன் தடாரிப்பறையை இசைப்பதில் வல்லவன்; அவன் ஈறும், பேணும் நிறைந்து காணப்பட்டுள்ளான். பல தையல்களையுடைய கந்தல் ஆடையை அணிந்துள்ளான். அவர்களின் நிலையைக் கரிகாற்பெருவளத்தான் நீக்கியுள்ளதைப் புலவர் முடத்தாமக்கண்ணியார்,

**"வேரொடு நனைந்து வேற்று இழை நுழைந்த**
**துன்னற் சிதாஅர் துவரநீக்கி**
**நோக்கு நுழைகல்லா நுண்மைய பூக்கனிந்து**
**அரவுஉரி அன்ன, அறுவை நல்கி**
**மழை என மருளும் மகிழ்செய் மாடத்து**
**இழைஅணி வனப்பின் இன்நகை மகளிர்**
**போக்குஇல் பொலங்கலம் நிறைய பலகால்**
**வாக்குபு தரத்தர வருத்தம் வீட**
**ஆர உண்டு பேர் அஞர் போக்கி**
**செருக்கொடு நின்ற காலை"** **(பொருந.80-89)**

என்ற பாடலடிகளால் புலப்படுத்துகிறார். நல்லியக்கோடன் பொருநரைப் போற்றியுள்ளதை புலவர் இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார்,

**"பொருநர்க்கு ஆயினும் புலவர்க்கு ஆயினும்**
**அருமறை நாவின் அந்தணர்க்கு ஆயினும்**

கடவுள் மால் வரை கண் விடுத்தன்ன

அடையா வாயில் அவன் அருங்கடை குறுகி”

(சிறுபாண்.203-206)

என்ற அடிகளால் புலப்படுத்துகிறார். பொருநரின் பசியினை நல்லியக்கோடன் நீக்கியுள்ளான். பொருநர் யாழிசைப்பதில் வல்லவராவர். அதனை முடத்தாமக்கண்ணியார்,

“பீடுகெழு திருவின் பெரும்பெயர் நோன்தாள்

முரசு முழங்குதானை மூவருங்கூடி,

அரசவை இருந்த தோற்றம் போல

பாடல் பற்றிய பயனுடை எழாஅல்” (பொருந.53-56)

என்ற பாடலடியால் விளக்குகிறார்.

**விறலியர்**

விறலியின் தோற்றத்தினை சிறுபாணாற்றுப்படை, தலைமுதல் பாதம் வரை வருணிக்கின்றது. இதனை இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார்,

“ஐதுவீழ் இகுபெயல் அழகுகொண்டு அருளி

நெய்கனிந்து இருளிய கதுப்பின் கதுப்பு என

மணிவயின் கலாபம் பரப்பிப் பலவுடன்

மயில் மயிற் குளிக்கும் சாயல்; சாஅய்

உயங்குநாய் நாவின் நல்எழில் அசைஇ

வயங்கு இழை உலறிய அடியின் அடிதொடர்ந்து

ஈர்ந்து நிலம் தோயும் இரும்பிடித் தடக்கையின்

சேர்ந்துடன் செறிந்த குறுங்கின் குறங்கு என

**மால்வரை ஒழுகிய வாழை; வாழைப்**

**பூ எனப் பொலிந்த ஓதி; ஓதி**

**நளிச்சினை வேங்கை நாள்மலர் நச்சிக்**

**களிச்சுரும்பு அரற்றும் சுணங்கின் சுணங்கு பிதிர்ந்து**

**யாணர்க் கோங்கின் அவிர்முகை எள்ளி**

**பூண் அகத்து ஒடுங்கிய வெம்முலை; முலை என**

**வண்கோட் பெண்ணை வளர்த்த நுங்கின்**

**இன்சேறு இகுதரும் எயிற்றின் எயிறு என**

**குல்லையம் புறவில் குவிமுகை அவிழ்ந்த**

**முல்லை சான்ற கற்பின் மெல்லியல்**

**மடமான் நோக்கின் வாள்நுதல் விறலியர்**

**நடை மெலிந்து அசைஇய நல்மென் சீறடி,**

**கல்லா இளையர் மெல்லத்தைவர்"** **(சிறுபாண்.13-33)**

என்னும் பாடல் அடிகளால் சுட்டுவர். எண்ணெய் விட்டு வாரி முடித்த விறலியர் கூந்தல், ஆண் மயிலின் தோகையைவிட அழகாக இருந்ததாகக் கருதி மயிலினம் நாணியது. அழகிய விறலியின் பாதங்கள் ஓடி இளைத்து வருந்திய நாயின் நாவினைப் போல அமைந்திருந்தது. சிலம்பு முதலிய காலணிகள் அணியப்பெறாது அகமகிழ்ந்து இருக்கும் பாதத்தை ஒட்டிய கால்கள் மேலிருந்து கீழாக வந்து தரையில் படிகின்ற கருநிறமுள்ள பெண் யானையின் துதிக்கையைப் போல் இருக்கும். கோதி முடித்த கூந்தலையுடைய விறலியர் வேங்கை மரத்தின் அன்றலர்ந்த பூக்களையே சூடுவர். தேமல் மிகவும் படர்ந்த அணிமணிகளுக்கு இடையிலான

பூ மார்பினையும், பனை மரத்தின் இளநுங்கின் சுவை நீர்ப்போல் இனிக்கின்ற தன்மை வாய்ந்த பற்கள் உடையவளாக விறலி விளங்கினாள். விறலி இடைப்பகுதியில் பல்கால் என்னும் அணிகலனை அணிந்திருந்தாள். 'பல்காழ்' என்பது இரும்பையொத்த பல மணிகள் கோத்த வடங்களையுடைய மேகலை,

சிறுபறை கொட்டி, சீறிய யாழ் மீட்டி அழகிய நெற்றியுடைய விறலியர் தாளத்தோடு ஆடியும், பாடியும் பிறரை மகிழ்வூட்டியமையை முடத்தாமக்கண்ணியார்,

**"மண்ணமை முழவின் பண்ணமை சீறியாழ்**

**ஒண்ணுதல் விறலியர் பாணிதூங்க" (பொருந.109-110)**

என்ற அடிகளால் உணர்த்துகிறார். விறலியர் ஆடுவதோடு மட்டுமின்றி பாடிக்கொண்டு ஆடுவதிலும் சிறந்திருந்தவளென்பதை பெருங்கௌசிகனார்,

**"இறும்பூது கஞலியவின் குரல் விறலியர்**

**நறுங்கா ரடுக்கத்து குறிஞ்சிபாடிக்…" (கூத்தராற்.358-359)**

என்ற அடிகளால் தெளிவுபடுத்துவர். விறலியர் யாழினை மீட்டி மருதப்பண் பாடியுள்ளதை பெருங்கௌசிகனார்,

**"மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ்**

**நரம்பு மீது இறவாது உடன் புணர்ந்தொன்றி**

**கடவதறிந்த வின்குரல் விறலியர்**

**தொன்றொழுகு மரபிற் றம்மியல்புவழாஅது" (கூத்தராற்.534-538)**

என்ற அடிகளால் தெளிவுபடுத்துகிறார்.

**விறலியர் பெற்ற பரிசில்கள்**

மலைநாட்டுக்கு உரிமை உடையவனாகிய இளந்திரையன் விறலிக்குப் பொன்னரி மாலையைப் பரிசளித்துள்ளதை கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

**"புனையிருங் கதுப்பகம் பொலியப் பொன்னின்**

**தொடையமை மாலை விறலியர் மலைய" (பெரும்பாண்.485-486)**

என்ற அடிகளால் உணர்த்துகின்றார்.

**குறிஞ்சிநில மக்கள் வாழ்க்கை**

குறிஞ்சி நிலத்திலுள்ள கர்ப்பமுற்ற பெண் யானை தாக்கினாலும், இடி இடித்தாலும் அச்சம் கொள்ளமாட்டாள். 'ஆற்றல் உடைய வாழ்க்கையினை வாழக்கூடியவள்' குறிஞ்சி நிலத்தில் பிறந்த ஆண் புலி போன்ற வீரமுடையவன். தான் நினைத்ததை முடிக்கும் தன்மையுடையவன். தன் பகைமன்னரின் காவல் நிலத்தில் புகுந்து பசுவினைக் கவர்ந்து வருவான். அவ்வாறு கவர்ந்து வந்த பசுக்களைக் கொடுத்து கள்ளினை விலையாகப் பெறுவான். கள்ளுடன் வலிமையான ஆட்டினைக் கொன்று திண்பான். மாட்டுத் தோலால் ஆன மத்தளம் முழங்க பகற்காலத்திலும் கள்ளுண்டு ஆடிக்கொண்டிருப்பான். அதனை கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

**"யானை தாக்கினும் அரவுமேல் செலினும்**

**நீல்நிற விசும்பின் வல்ஏறு சிலைப்பினும்**

**சூல்மகள் மாறாமறம் பூண் வாழ்க்கை**

**வலிக்கூட்டு உணவில் வாட்குடிப் பிறந்த**

**புலிப்போத்து அன்ன புல் அணற்காளை**

**செல்நாய் அன்ன கருவில் சுற்றமொடு**

**கேளாமன்னர் கடிபுலம் புக்கு,**

**நாள்ஆ தந்து, நறவு நொடை தொலைச்சி**

**இல்அடு கள்இன் தோப்பி பருகி**

**மல்லல் மன்றத்து மதவிடை கெண்டி**

**மடிவாய்த் தண்ணுமை நடுவண் சிலைப்பச்**

**சிலை நவில் எறுழ்தோள் ஓச்சி, உலன் வளையூஉ**

**பகல் மகிழ் தூங்கும் தூங்கா இருக்கை**

**முரண்தலை கழிந்த பின்றை"** **(பெரும்பாண்.134-147)**

என்ற அடிகளால் சுட்டுகிறார்.

**குறவன்**

'குறவன்' என்பவன் குறிஞ்சி நிலத்தலைவன் ஆவான். குறவன் என்பதற்கு 'குறவினத்தார்'[9] எனச் சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம் பொருள் கூறுகிறது. இவர்கள் குறித்த செய்திகள் சங்கப் புறப்பாடல்களில் மிகுதியாக இடம்பெற்றிருப்பதை அறியமுடிகிறது.

கானவர் சிறு கண்ணையுடைய பன்றியின் பழுதுடைய தசைகளை நீக்கித் தாம் சண்டையிட்டு வென்ற யானைக் கொம்பைக் காவு மரமாகக் கொண்டு இருபக்கமும் வட்டிலில் உணவுப் பொருட்களைக் கொண்டு செல்லக்கூடிய காட்சியைப் பெருங்கௌசிகனார்,

**“சிறுகட் பன்றிப் பழுதுளி போக்கி**

**பொருது தொலை யானைக் கோடுசீர் ஆக**

**தூவொடு மலிந்த காய கானவர்”** **(கூத்தராற்.153-155)**

என்ற அடிகளால் விளக்குவர்.

**வேட்டையாடுதல்**

மரங்கள் மிகுதியாக உள்ள குறுங்காடானது இரவில் மிகுதியான இருட்டினைக் கொண்டிருக்கும். அவ்விரவுப்பொழுதில் கானவர்கள் விலங்குகளைத் தேர்ந்து வில்லுடன் அமைவர். அதனைப் பெருங்கௌசிகனார்,

**“மாநிழற் பட்ட மரம்பயில் இறும்பின்**

**ஞாயிறு தெறாஅமாக நனந்தலை**

**தேஎம் மருளும் அமையம் ஆயினும்**

**இறாஅ வன்சிலையர் மாதெர்பு”** **(கூத்தராற்.271-274)**

என்ற அடிகளால் புலப்படுத்துகிறார்.

மலைகளில் வாழும் குறவர்களின் தொழில்களாகத் தேனெடுத்தலும், கிழங்கு அகழ்தலும் உள. அவர்கள் விலங்குகளின் தசைகளைக் கொண்ட பெட்டியினை உடையவராய் இருப்பதனை பெருங்கௌசிகனார்,

**“மணஇல் கமழும் மாமலைச் சாரல்**

**தேனீனர் கிழங்கினர் ஊன் ஆர் வட்டியர்”** **(கூத்தராற்.151-152)**

என்ற அடிகளால் புலப்படுத்துகிறார்.

**குறவரின் குரவைக்கூத்து**

நாட்காலையில் கள்ளினை உண்ட குறவர்கள் தம் இனப் பெண்டிருடன் குரவைக்கூத்து ஆடியுள்ளதையும் அவற்றால் எழுந்த ஒலி வானைமுட்டும் அளவிற்கு எழுந்ததையும் பெருங்கௌசிகனார்,

> **"நறவு நாட் செய்த குறவர்தம் பெண்டிரொடு**
> **மான் தோற் சிறுபறை கறங்கக் கல்லென**
> **வான்தோய் மீமிசை அயரும் குரவை**
> **நல்எழில் நெடுந்தேர் இயவு வந்தன்ன**
> **கல் யாறு ஒலிக்கும் விடாமுழங்கு இரங்கிசை"**

**(கூத்தராற்.319-324)**

என்ற அடிகளால் தெளிவுபடுத்துகிறார்.

**காளைப்போர்**

குறவர்கள் தாங்கள் வளர்த்த காளையை முல்லை நிலத்தவர் வளர்த்த அசைதிமிலுடைய காளையுடன் போரிடச் செய்துள்ளனர். அப்போரினை அவ்விருநிலத்தாரும் கண்டு ஆரவார ஒலியெழுப்பியுள்ளதை பெருங்கௌசிகனார்,

> **"இனத்தின் தீர்ந்த துளங்குஇமில் நல்லேறு**
> **மலை தலைவந்த மரையான் கதழ்விடை**
> **மாறா மைந்தின் ஊறுபடத்தாக்கி**
> **கோவலர் குறவரோடு ஒருங்கு இயைந்து ஆர்ப்ப**
> **வள் இதழ்க் குளவியும் குறிஞ்சியும் குழைய"**

**(கூத்தராற்.330-334)**

என்ற அடிகளால் விளக்குகிறார்.

குறச்சிறார்கள் கன்றுகளைப் பிணையாகப் பூட்டி கடாவிடுவதைப் பெருங்கௌசிகனார்,

**“கன்று கடாஅ வுறுக்கும் மகாஅர் ஓதை”** **(கூத்தராற்.339)**

என்ற பாடலடியால் உணர்த்துகிறார்.

**யானைப்பாகர்**

காட்டாற்று வெள்ளத்தில் பெரிய சுழியில் அகப்பட்ட வலிமை வாய்ந்த யானையின் சினத்தைத் தணித்துப் பெரிய தறியில் கட்டுவதற்காக, யானைப்பாகர் தமிழும் வடமொழியும் கலந்து உரக்க ஓசை எழுப்பியுள்ளதை புலவர் பெருங்கௌசிகனார்,

**“நெடுஞ்சுழிப்பட்ட கடுங்கண் வேழத்து**
**உரவுச்சினம் தணித்து பெருவேளிற் பிணிமார்**
**விரவுமொழி பயிற்றும் பாகர் ஓதை**
**ஒலி கழைத் தட்டை புடையுநர் புனந்தொறும்”**

**(கூத்தராற்.325-328)**

என்ற அடிகளில் விளக்குகிறார்.

**தச்சன்**

‘கருந்தொழில் வினைஞர்’ என்போர் கொல்லர், தச்சர் ஆகிய தொழிலைச் செய்வோர் ஆவர். கொல்லர், தச்சர் ஆகியோர் இணைந்து தேர் செய்யும் விதத்தினை சிறுபாணாற்றுப்படை திறம்பட விளக்குகிறது. தச்சர் வலிமையுடைய தேர்ச்சக்கரத்தினையும், கொல்லர் அத்தேர்ச் சக்கரத்தின்

உருளையையும் இணைந்து வடிவமைப்பர். இதனை இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார்,

**“வயவர் தந்த வான்கேழ் நிதியமொடு**
**பருவ வானத்துப் பாற்கதிர் பரப்பி**
**உருவ வான்மதி ஊர் கொண்டாங்கு**
**கூர்உளி பொருத வடுஆழ் நோன் குறட்டு**
**ஆரம் சூழ்ந்த அயில்வாய் நேமியொடு**
**சிதர் நனை முருக்கின் சேண் ஓங்கு நெடுஞ்சினைத்**
**ததர்பிணி அவிழ்ந்த தோற்றம் போல**
**உள் அரக்கு எறிந்த உருக்குறு போர்வை**
**கருந்தொழில் வினைஞர் கைவினைமுற்றி**
**ஊர்ந்து பெயர் பெற்ற எழில்நடைப் பாகரோடு**
**மாசெலவு ஒழிக்கும் மதனுடை நோன்தாள்**
**வாள்முகப் பாண்டில் வலவனொடு தரீஇ” (சிறுபாண்.249-260)**

என்ற அடிகளால் விளக்குகிறார். தச்சர்கள் சிறாஅர்கள் ஓட்டி மகிழும் நடைவண்டிகளையும் செய்துள்ளனர். அவ்வண்டிகள் தச்சர், உழவர் இல்லத்துச் சிறுவர்களால் ஓட்டி மகிழப்பட்டுள்ளது. அதனை கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

**“தச்சச் சிறாஅர் நச்சப் புனைந்த**
**ஊரா நல்தேர் உருட்டிய புதல்வர்” (பெரும்பாண்.248-249)**

என்ற பாடலடியால் விளக்குகிறார்.

**கொல்லர்**

கொல்லர்கள் நண்டின் கால் போன்ற குறடினைப் பயன்படுத்தி உள்ளனர். அதனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

> **"................................. மென்தோல்**
>
> **மிதிஉலைக் கொல்லன் முறிகொடிற்றன்ன**
>
> **கவைத்தாள் அலவன் அளற்றளை சிதைய"**
>
> **(பெரும்பாண்.207-209)**

என்ற அடிகளால் உணர்த்துகிறார்.

பழஞ்சோறும், அவலும் இவர்களது விருப்பமான உணவாக இருந்துள்ளது. அதனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

> **"கருங்கை வினைஞர் காதல்அம் சிறாஅர்**
>
> **பழஞ்சோற்று அமலை முனைஇ வரம்பில்**
>
> **புதுவை வேய்ந்த கவிகுடில் முன்றில்" (பெரும்பாண்.224-226)**

என்ற பாடலடியால் விளக்குகிறார்.

**உழவர்**

உழவர்கள் முள்ளையுடைய முள்ளி மலரைப் பறித்து, கோரைப் புல் நாரில் அவற்றைக் கட்டி மாலையாகத் தொடுப்பர். தொடுத்த மாலையினை, ஈரும், பேனுமுள்ள கரிய தலையில் உழவர் சிறுவர்கள் அணிவர். சம்பங்கோரையின் மென்மையான காயின் சுண்ணத்தை அச்சிறுவர்கள் மார்பில் பூசியிருப்பர். அவர்களுடைய உடல் இரும்புத்தகடு போன்று சுருக்கம்

இல்லாமல் மென்மையாக இருந்தது. அதனைப் புலவர் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

**"............................... முட்சினை**

**முகைசூழ் தகட்ட பிறழ்வாய் முள்ளிக்**

**கொடுங்கால் மாமலர் கொய்து கொண்டு அவண**

**பஞ்சாய்க் கோரை பல்லின் சவட்டி**

**புணர்நார்ப் பெய்த புனைவுஇன் கண்ணி**

**ஈருடை இருந்தலை ஆரச்சூடி**

**பொன்காண் கட்டளை கடுப்ப கண்பின்**

**புன்காய்ச் சுண்ணம் புடைத்த மார்பின்**

**இரும்பு வடித்தன்ன மடியா மென்தோல்**

**கடுங்கை வினைஞர் காதல்அம் சிறாஅர்" (பெரும்பாண்.215-224)**

என்ற அடிகளால் புலப்படுத்துகிறார். உழவர்கள் காளைமாடுகளை கலப்பையின் நுகத்தடியில் பூட்டி கொழு மழுங்கும்படி உழவுசெய்து, களையெடுத்து, கதிர்முற்றியபின் அவற்றை அரிந்துள்ளதையும், அக்கதிர்களைக் களம் சேர்த்து காளைகளைப் பூட்டிச் சூடு அடித்துள்ளதையும், நெல்லை மலைபோல் குவித்துள்ளதையும் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

**"குடிநிறை வல்சிச் செஞ்சால் உழவர்**

**நடைநவில் பெரும்பகடு புதவில் பூட்டி**

**பிடிவாய் அன்ன மடிவாய் நாஞ்சில்**

**உடுப்புமுக முழுக்கொழு மூழ்கஊன்றி**

தொடுப்பு எறிந்து உழுத துளர்படு துடவை

அரிபுகு பொழுதின், இரியல் போகி

வண்ணக் கடம்பின் நறுமலர் அன்ன,

வளர் இளம் பிள்ளை தழீஇ, குறுங்கால்

கறை அணற்குறும்பூழ் கட்சிச் சேக்கும்

வன்புலம் இறந்த பின்றை" (பெரும்பாண்.197-206)

"பாம்பு உறை மருதின் ஓங்குசினை நீழல்

பலிபெறு வியன்களம் மலிய ஏற்றி

கணம்கொள் சுற்றமொடு கைபுணர்ந்து ஆடும்

துணங்கை யம்பூதம் துகில் உடுத்தவை போல்

சிலம்பிவால்நூல் வலந்த மருங்கின்

குழுமுநிலைப் போரின் முழுமுதல் தொலைச்சி

பகடு ஊர்பு இழிந்த பின்றை துகள்தப

வையும் துரும்பும் நீக்கிப் பைதுஅற

குடகாற்று எறிந்த குப்பை வடபால்

செம்பொன் மலையின் சிறப்புத் தோன்றும்

தண்பனை தழீஇய தளரா இருக்கை" (பெரும்பாண்.232-242)

என்ற பாடலடியால் விளக்குகிறார். உழவர்கள் தாங்கள் சூடு அடித்துப் பிரித்த நெல்லை அவர்களின் வீடுகளில் உள்ள நெற்குதிர்களில் குவித்து வைத்திருந்தனர். அதனை கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

"பகட்டுஆ ஈன்ற கொடுநடைக் குழவிக்

சுவைத்தாம்பு தொடுத்த காழ் ஊன்று அல்குல்

**ஏணி எய்தா நீள்நெடு மார்பின்**

**முகடுதுமித்து அடுக்கிய பழம்பல் உணவின்**

**குமரி மூத்தகூடு ஓங்கு நல்இல்"     (பெரும்பாண்.243-247)**

என்ற அடிகளால் சுட்டுகிறார்.

உழத்தியர்கள் நாற்று நடும்போது நாற்புறமும், காற்று ஊடறுத்துச் செல்லுமாறு இடைவெளிவிட்டு நாற்றினை நட்டுள்ளதைப் புலவர் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

**"உழாஅ நுண்தொளி நிரவிய வினைஞர்**

**முடிநா றழுத்திய நெடுநீர்ச் செறுவில்"   (பெரும்பாண்.211-212)**

என்ற அடிகளால் சுட்டுகிறார். இவ்வாறு இடைவெளிவிடுவதால் நெற்பயிர் நன்றாக வளரும் எனக் கண்டறிந்திருந்தனர் என்பது கருத்து. இதனை கூத்தராற்றுப்படையில் பெருங்கௌசிகனார்,

**"பால்வார்பு கெழீஇப் பல்கவர் வளிபொழ்வு**

**வாலிதின் விளைந்தன ஐவன வெண்ணெல்" (கூத்தராற்.114-115)**

என்ற பாடலடியால் எடுத்துரைக்கிறார். உழத்தியர்கள் விளைந்த நெல்லை இரும்புப்பூணிட்ட உலக்கையால் குற்றியெடுத்து உணவாக்கியுள்ளதை இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார்,

**"இருங்காழ் உலக்கை யிரும்புமுகற் தேய்த்த**

**வவைப்புமா ணரிசி யமலைவெண் சோறு"  (சிறுபாண்.193-194)**

என்று அடிகளால் தெளிவுபடுத்துகிறார்.

**கள் விற்றல்**

உழவர் மகளிர் நெற்களங்கள் தோறும் சென்று கள் விற்றுள்ளதை புலவர் பெருங்கௌசிகனார்,

> **"………. பசும்பொதித்தேறல்**
>
> **இளங்கதிர் ஞாயிற்றுக் களங்கடொறும்" (கூத்தராற்.463-464)**

என்ற அடிகளால் உணர்த்துகிறார். கள் விற்போர் கள்ளொடு வாளை மீன், வரால் மீன் தசைகளைக் கொடுத்துள்ளனர். அதனை புலவர் பெருங்கௌசிகனார்,

> **"வலையோர் தந்த இருஞ்சுவல் வாளை**
>
> **நிலையோரிட்ட நெடுநாண் டூண்டிற்**
>
> **பிடிக்கை யன்ன செங்கண் வராஅல்**
>
> **றுடிக்க ணன்ன குறையொடு விரைஇப்**
>
> **பகன்றைக் கண்ணிப் பழையர் மகளிர்" (கூத்தராற்.455-459)**

என்ற அடிகளால் விளக்குகிறார். உழவர்கள் நெல்லினைக் கொடுத்து அக்கள்ளினை வாங்கியுள்ளதையும் பெருங்கௌசிகனார்,

> **"துளங்குத சும்பு வாக்கிய பசும்பொதித் தேறல்**
>
> **இளங்கதிர் ஞாயிற்றுக் களங்கதொறும் பெறுகுவிர்"**
>
> **(கூத்தராற்.463-464)**

என்ற அடிகளால் புலப்படுத்துகிறார். உழத்தியர்கள் வெண்ணெல் அரிசிச் சோறாக்கி நண்டின் கலவையோடு உண்டுள்ளனர். அதனை இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார்,

**“கவைத்தா எலவன் கலவையோடு பெறுகுவிர்” (சிறுபாண்.195)**

என்ற அடிகளால் தெளிவுபடுத்துகிறார்.

**களமர்**

களமர் என்போர் ‘மாட்டை ஓட்டுகின்ற உழவர்’[10] ஆவார். இவர்கள் உழும்போது பாடும் பாடலானது ‘ஏர் மங்கலப் பாட்டு’ எனப்படும். அதனைப் பெருங்கௌசிகனார்,

**“எருது எறி களமர் ஓதையொடு நல்யாழ்**

**மருதம் பண்ணி அசையினார் கழிமின்” (கூத்தராற்.469-470)**

என்ற அடிகளால் விளக்குகிறார்.

**களைஞர்**

களை பறிப்போரே ‘களைஞர்’ என அழைக்கப்பட்டுள்ளனர், அவர்கள் வயல்களில் உள்ள நெய்தல் மலரைக் களைந்தெழுந்துள்ளதை கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

**“முடி நாறு அழுத்திய நெடுநீர்ச் செறுவில்**

**களைஞர் தந்த கணைக்கால் நெய்தற்**

**கள் கமழ் புதுப்பூ முனையின்” (பெரும்பாண்.212-214)**

என்ற அடிகளால் சுட்டுகிறார்.

**அரிநர்**

அரிநர் நெற்கதிர் அறுக்கும்போது, அவர்கள் ‘தண்ணுமை’ என்னும் பறையை அடித்துள்ளதை புலவர் பெருங்கௌசிகனார்,

**“வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇ**

**செங்கண் எருமை இனம்பிரி எருத்தல்”   (கூத்தராற்.471-472)**

என்ற அடிகளால் புலப்படுத்துகிறார்.

**வலைஞர்**

வலைஞர் குற்றாத கொழியல் அரிசியைப் பெரிய வாய் அகன்ற பாத்திரத்தில் இட்டு களி போன்று கூழ் சமைப்பர். அதில் புற்றாம் சோறு போன்ற நெல்முனையை இடித்துக் கலப்பர். அதை இரண்டு நாள் இரவும் பகலும் வைத்திருப்பர். உறுதியான வாயையுடைய பெரிய சாடியில் அதைப் போட்டு வெந்நீர் ஊற்றி வேகவைப்பர். பின்பு கையால் துழாவி நெய் அரிப்பால் வடிகட்டுவர். அது சுவையான மதுவாக இருக்கும். அந்த மதுவுடன் பச்சைமீனை சுட்டு சூட்டோடு சேர்த்துத் தருவர். இதனைப் புலவர் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

**“அவையா அரிசி அம்களித்துழவை**

**மலர்வாய்ப் பிழாவில் புலர ஆற்றி**

**பாம்பு உறை, புற்றின் குரும்பி ஏய்க்கும்**

**பூம்புறநல் அடை அளைஇத் தேம்பட**

**எல்லையும், இரவும் இருமுறை கழிப்பி**

**வல்வாய்ச் சாடியின் வழைச்சு அற விளைந்த**

**வெந்நீர் அரியல் விரல் அலை நறும்பிழி**

**தண்மீன் சூட்டொடு தளர்தலும் பெறுகுவீர்”**

**(பெரும்பாண்.275-282)**

என்ற அடிகளால் சுட்டுவர். வலைஞர் தங்கள் குடியிருப்புக்களைக் கடற்கரையை அடுத்து அமைந்திருந்தனர். அவர்கள் பேய் கருப்பத்தட்டை அல்லது கொறுக்கைச்சி என்று கூறப்படுகின்ற சோளத்தட்டை போன்ற பொருளைக் கூரையாக அமைத்து, இடையிடையே வஞ்சி காஞ்சி மரங்களில் ஆன வெண்மையான மரத்தடியையும் வைத்துத் தாடை நாராலே கட்டி அதற்குமேல் தருப்பைப் புல்லால் வேய்ந்து தம் குடியிருப்பை அமைத்து வாழ்ந்துள்ளனர். அதனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

**"வேழம் நிரைத்து வெண்கோடு விரைஇ**
**தாழை முடித்து தருப்பை வேய்ந்த**
**குறியிறைக் குரம்பை பறியுடைமுன்றில்**
**கொடுங்காற் புன்னைக் கோடுதுமித்து இயற்றிய**
**பைங்காய் தூங்கும் பாய்மணற் பந்தர்**
**இளையரும் முதியரும் கிளையுடன் துவன்றி**
**புலவுநுனைப் பகழியும் சிலையும் மான**
**செவ்வரிக் கயலொடு பச்சிறாப் பிறழும்**
**மைஇருங் குட்டத்து மகவொடு வழங்கி**
**கோடை நீடினும் குறைபடல் அறியாத்**
**தோள்தாழ் குளத்த கோடு காத்திருக்கும்**
**கொடு முடி வலைஞர் குடிவயிற்சேப்பின்"**

**(பெரும்பாண்.263-274)**

என்ற அடிகளால் சுட்டுவர்.

**நுளைத்தியர்**

கடல் அலைகளால் அடித்துக் கொண்டு தள்ளப்பெற்ற அகில் விறகுகள் ஒட்டகங்கள் உறக்கத்தில் கிடத்தலைப்போல கடற்கரையோரத்தில் கிடந்தன. அவ்வகில் விறகால் தீமூட்டி, கரும்புகையோடு செந்தீ பரக்கக் காய்ச்சிய பழையதாகிய களிப்பைத் தருகின்ற தேறலை நுளைமகள் தயாரித்துள்ளாள். அதனைப் பரதவர்கள் பாணர்களுக்குக் கொடுத்துள்ளதை புலவர் இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார்,

**“ஓங்குநிலை ஒட்டகம் துயில் மடிந்தன்ன**

**வீங்குதிரை கொணர்ந்த விரைமர விறகின்**

**கரும்புகைச் செந்தீ மாட்டிப் பெருந்தோள்**

**மதிஏக் கறூஉம் மாசுஅறு திருமுகத்து**

**நுதிவேல் நோக்கின் நுளைமகள் அரித்த**

**பழம்படு தேறல் பரதவர் மடுப்ப”** **(சிறுபாண்.154-159)**

என்ற பாடலடியால் தெளிவுபடுத்துகிறார்.

**கள்அடு மகளிர்**

கள்விற்கும் கள்ளுக்கடையில் கொடி நடப்பட்டும், அதன் வாயிலில் சிவந்த மலர்கள் தூவப்பட்டும் அமைந்திருந்ததை புலவர் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

**“………. முட்டுஇல்**

**பைங்கொடி நுடங்கும் பலர்புகு வாயில்**

**செம்பூத் தூஉய செதுக்குடை முன்றில்**

**கள்அடு மகளிர் வள்ளம் நுடக்கிய”** **(பெரும்பாண்.336-340)**

என்ற அடிகளால் சுட்டுவர். அவ்விடங்களில் கள்ளினைப் பெண்கள் தயாரித்துள்ளனர். அதனால் அவர்கள் ‘கள்அடு மகளிர்’, ‘அரியல் பெண்டிர்’ என அழைக்கப்பட்டுள்ளனர். நெய்தல்நில மகளிர் கள் காய்ச்சியுள்ளதை புலவர் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

**“கள்ளோடு மகளிர் வள்ளம் நுடக்கிய**
**வார்ந்துகு சின்னீர்”** **(பெரும்பாண்.339-340)**

என்ற பாடலடியால் எடுத்தியம்புகிறார். மேலும் சிறுபாணாற்றுப்படையில் இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார்,

**“ஓங்கு நிலை ஒட்டகம் துயில் மடிந்தன்ன**
**வீங்குதிரை கொணர்ந்த விரைமர விறகின்**
**கரும்புகைச் செந்தீ மாட்டி பெருந்தோள்**
**நுதிவேல் நோக்கின் நுளைமகள் அரித்த**
**பழம்படு தேறல் பரதவர் மடுப்ப”** **(சிறுபாண்.154-158)**

என்ற பாடலடிகளால் சுட்டுவர்.

**உமணர்**

உப்பு வணிகர் வண்டியின் சக்கரம் மிக உறுதியாக இருந்தது. சக்கரத்தின் விளிம்பில் வளைவு மரம் இருந்தது. ஒரே மரத்தில் வண்டியின் குடம் செய்யப்பட்டு இருந்தது. அதற்குப் பழங்காலப் பெயர் குறடு என்பதாகும். அது முழவு போன்று இருந்தது. அதில் தான் அச்சாணியைச் செறுகுவார்கள். குடத்திற்கு விளிம்பு, வளைவு மரத்தையும் இணைக்க ஆரம் உறுதியாக இருந்தது. அதில் இருந்து இரண்டு பக்கத்திலும், நீண்டு கிடந்த

பருமரங்கள் இருந்தன. அம்மரங்கள் இரண்டினையும், நெடுகத் துளைத்துக் குறுக்கே ஏழுபழுப்போல ஒரு மரத்தைக் கோர்த்து இருந்தனர். அது நுகத்தடி என்று அழைக்கப்படும். வண்டி மலை போன்று இருந்தது. மேலே வேயப்பட்ட தேர்தாளிப்பாய் கூந்தற் பனையால் முடைந்தது. இத்தகைய வண்டியினை உப்புப் பகர்நர், உப்பு விற்றற்குப் பயன்படுத்தியுள்ளதை முடத்தாமக் கண்ணியார்,

**"கொழுஞ்சூட்டு அருந்திய திருந்து நிலை ஆரத்து**
**முழவின் அன்ன முழுமர உருளி**
**எழூஉப் புணர்ந்தன்ன பரூஉக்கை நோன்பார்**
**மாரிக் குன்றம் மழை சுமந்தன்ன**
**ஆரை வேய்ந்த அறைவாய்ச்சகடம்**
**வேழம் காவலர் குரம்பை ஏய்ப்பக்**
**கோழி சேக்கும் கூடுடைப் புதவின்**
**முனை எயிற்று இரும்பிடி முழந்தாள் ஏய்க்கும்**
**துளை அரைச் சீறுரல் தூங்கத் தூக்கி**
**நாடக மகளிர் ஆடுகளத்து எடுத்த**
**விசி வீங்கு இன்இயம் கடுப்பக் கயிறு பிணித்து,**
**காடி வைத்த கலனுடைய மூக்கின்**
**மகவுடை மகடூஉப் பகடுபுறம் துரப்ப**
**கோட்டுஇணர் வேம்பின் ஏட்டுஇலை மிடைந்த**
**படலைக் கண்ணி பருஏர் எறுழ்த்திணி தோள்**
**முடலையாக்கை, முழுவலிமாக்கள்**

**சிறுதுளைக் கொடுநுகம் நெறிபட நிரைத்த**

**பெருங்கயிற்று ஒழுகை மருங்கில்காப்ப**

**சில்பத உணவின் கொள்ளைசாற்றி**

**பல எருத்து உமணர் பதிபோகு நெடுநெறி" (பெரும்பாண்.46-65)**

என்ற அடிகளால் சுட்டுவர்.

கொற்கை நகரத்தில் உமணர் வாழ்ந்துள்ளனர். அவர்கள் தம் குழந்தைகளாகக் கருதிப் பெண் குரங்குகளையும் வளர்க்கின்றனர். அம்மந்திகளுக்குத் நுணாமரத்தின் சிறுசிறு கட்டைகளைச் செப்புப் போன்று செய்து மாலையாகக் கழுத்தில் அணிவித்துள்ளனர். அக்குரங்குகளின் காதில் நெட்டியால் செய்த தலையிலையைக் கட்டியுள்ளனர். அக்குரங்குகளை உப்பு வண்டிகளின் பின்னால் தங்களோடு அழைத்துச் சென்றுள்ளனர். கூர்மையான வாயையுடைய சிப்பிகளில் முத்துக்களைப் போட்டு கிலுகிலுப்பையாக அவர்களின் குழந்தைகளுக்குக் கொடுத்துள்ளனர். அதனை நல்லூர் நத்தத்தனார்,

**"நோன் பகட்டு உமணர் ஒழுகையோடு வந்த**

**மகாஅர் அன்ன மந்தி மடவோர்**

**நகாஅர் அன்ன நளிநீர் முத்தம்**

**வாள்வாய் எருந்தின் வயிற்றகத்து அடக்கி**

**தோள்புறம் மறைக்கும் நல்கூர் நுசுப்பின்**

**ஊரியல் ஐம்பால் உமட்டியர் ஈன்ற**

**கிளர் பூண் புதல்வரோடு கிலிகிலி ஆடும்" (சிறுபாண்.55-61)**

என்ற அடிகளால் சுட்டுவர்.

**எயிற்றியர்**

பாலை நில மகளிர் எயிற்றியர் எனப்படுவர். இவர்கள் புல்லரிசி திரட்டல், உணவு சேகரித்தல், உணவு சமைத்தல் ஆகிய தொழில்களைச் செய்துள்ளனர். புல்லரிசி திரட்டி உணவினைச் சமைத்துள்ளனர். புல்லரிசி என்பது எறும்பு, கரையான் போன்றவை நிலத்துக்கடியில் மழைக் காலத்துக்காகச் சேகரித்து வைத்திருக்கும் அரிசியாகும். எயினர் தமக்கு உணவு இன்மையால் நிலத்தைத் தோண்டிப் புல்லரிசியினைத் திரட்டுவர். பாலை நிலத்தில் அவர்கள் பகற்பொழுதில் சென்று புல்லரிசி சேகரித்துள்ளனர். கரம்பை நிலங்களில் அவர்கள் சேகரித்த புல்லரிசியை வீட்டின் முற்றத்திலுள்ள நில உரலில் இட்டு வயிரமேரிய உலக்கையால் குத்தியுள்ளதை கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

**“ஈத்திலை வேய்ந்த எய்ப்புறக் குரம்பை**
**மான்தோல் பள்ளி மகவொடு முடங்கி**
**யீன்பிண வொழியப் போகி நோன்காழ்**
**இரும்புதலை யாத்த திருந்துகணை விழுக்கோல்**
**உளிவாய்ச் சுரையின் மிளிர மிண்டி**
**இருநிலக் கரம்பைப் படு நீறு ஆடி**
**நுண்புல் அடக்கிய வெண்பல் எயிற்றியர்**
**பார்வை யாத்த பறைதாள் விளவின்**
**நீழல் முன்றில் நிலஉரல்பெய்து**
**குறுங்காழ் உலக்கை ஓச்சி” (பெரும்பாண்.88-97)**

என்ற அடிகளால் சுட்டுவர். பிள்ளைபெற்ற எயிற்றி புல்லரிசி கொணரச் செல்லுவது இல்லை. எயிற்றியர் உரலில் புல்லரிசி தீட்டும்போது அதனால் உண்டாகும் அயர்ச்சி தோன்றாதிருக்கும் பொருட்டு பாடுதல் இயல்பு. இங்ஙனம் பாடும்பாட்டு 'வள்ளைப்பாட்டு' எனப்படும்.

**உணவு சமைத்தல்**

எயிற்றியர் கிணற்றில் சில்லூற்றாகிய உவரிநீரை முகந்து பழைய பானையில் வார்த்த உலையை, முறிந்த அடுப்பில் ஏற்றிச் சோறு சமைப்பர். அதனைக் கருவாட்டோடு உண்பர். பாலைநிலத்தில் ஆழமாகத் தோண்டி பெண்கள் நீரெடுத்துள்ளதை கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

**"குறுங்காழ் உலக்கை யோச்சிநெடுங் கிணற்று**
**வல்லூற் றுவரி தோண்டி தொல்லை**
**முரவுவாய்க் குழிசி முரியடுப்பேற்றி**
**வாரா தட்ட வாடூன் புழுக்கல்"** **(பெரும்பாண்.97-100)**

என்ற அடிகளால் விளக்குவர்.

எயிற்றியர் புளியங்கறி இடப்பட்ட சோற்றையும், ஆமாவின் சூட்டிறைச்சியையும் ஆக்குவர். அதோடு முட்பன்றியின் ஊனையும் சேர்த்து உணவாகக் கொள்வர். இதனை நல்லூர் நத்தத்தனார்,

**"எயிற்றிய ரட்ட வின்புளி வெஞ்சோறு**
**தேமா மேனிச் சில்வளை யாயமொடு**
**ஆமான் சூட்டி னமைவரப் பெறுகுவீர்"** **(சிறுபாண்.175-177)**

என்ற அடிகளால் நவிலுவர்.

**மறவர்**

மறவர் எனின் வீரர் எனப் பொருள்படுவர். இவர்கள் போர்க்களத்தில் பகைவரின் தலையை வெட்டிய சிறப்பை பெருங்கௌசிகனார்,

> **“பொருந்தாத் தெவ்வர் இருந்தலை துமிய**
> **பருந்துபடக் கடக்கும் ஒள்வாள் மறவர்**
> **கருங்கடை எஃகம் சாத்திய புதவின்**
> **அருங்கடி வாயில் அயராது புகுமின்” (கூத்தராற்.488-491)**

என்ற அடிகளால் புலப்படுத்துவர்.

**தொகுப்புரை**

- குறவர்கள், முல்லைநிலத்தோர் ஆகிய இருவரும் தாங்கள் வளர்த்த காளைகளைப் போரிடச் செய்துள்ளனர்.
- குறச்சிறார்கள் கன்றுகளைப் பிணையாகப் பூட்டிக் கடாவிடுவர்.
- குறிஞ்சிநில மாந்தர்கள் ஆற்றல் உடைய வாழ்க்கையை வாழக்கூடியவர்கள். எதற்கும் அஞ்சும் தன்மையில்லாதவர்களாக அவர்கள் இருந்துள்ளனர்.
- குறவர்கள் இரவுப் பொழுதில் விலங்குகளைத் தேடி வேட்டையாடுவர். அதற்குக் கருவியாக அவர்கள் வில்லினைப் பயன்படுத்தியுள்ளனர். தேனெடுத்தல், கிழங்கு அகழ்தல் ஆகியவை இவர்களின் தொழில்களாக இருந்துள்ளன.
- குறவர்கள் விலங்குகளின் தசைகளைக் கொண்ட பெட்டியினை உடையவராக இருந்துள்ளனர்.

- ❖ தமிழும் வடமொழியும் கலந்த மொழியினை யானையைப் பழக்க யானைப்பாகர் பயன்படுத்தியுள்ளனர்.

- ❖ சிறிய பறை கொட்டி, யாழ் மீட்டி, விறலியர் ஆடிப்பாடி பிறரை மகிழ்வூட்டியுள்ளனர். இவள் ஒப்பனையில் மிக்கவளாக விளங்கியுள்ளாள். அவள் மன்னரிடமிருந்து பொன்னரி மாலையினைப் பரிசாகப் பெற்றுள்ளாள்.

- ❖ கொல்லர், தச்சர் ஆகியோர் கருந்தொழில் வினைஞர் என அழைக்கப்பட்டுள்ளனர். கருங்கை வினைஞர்களின் விருப்பமான உணவாகப் பழஞ்சோறும், அவலும் இருந்துள்ளன.

- ❖ தச்சச் சிறாஅர்கள் இல்லங்களில் நடை வண்டிகளை ஓட்டி மகிழ்ந்துள்ளனர். கொல்லர் நண்டின் கால் போன்றக் குறடினைப் பயன்படுத்தியுள்ளனர். முள்ளிமலரினை மாலையாகத் தொடுத்துத் தலையில் சூடியுள்ளனர். கோரைப்புல்லால் கட்டி மாலையாகத் தம் தலையில் சூடியுள்ளனர்.

- ❖ உழவர்கள் காளைமாடுகளைக் கலப்பையின் நுகத்தடியில் பூட்டி கொழுமழுங்கும்படி உழவு செய்துள்ளனர். இரும்புத்தகடு போன்று சுருக்கமின்றி உடலைப்பெற்ற அவர்கள் நெற்கதிர்களைக் களத்திலிட்டு காளைகளைப்பூட்டி சூடு அடித்துள்ளனர். உழவர்கள் சூடு அடித்துப் பிரித்த நெல்லை அவர்களின் வீடுகளில் உள்ள நெற்குதிர்களில் குவித்து வைத்திருந்தனர்.

❖ உழத்தியர் நாற்றுநடும்போது நான்கு பக்கமும் இடைவெளிவிட்டு காற்று ஊடறுத்துச் செல்லுமாறு பயிர்களை நட்டனர். உழவர்கள் நெல்லினைக் கொடுத்து கள்ளினை வாங்கியுள்ளனர். இவ்வாறு இடைவெளிவிடுவதால் நெற்பயிர் நன்கு வளரும் என அக்காலத்தே கண்டறிந்துள்ளனர்.

❖ உழவர் மகளிர் நெற்களங்கள் தோறும் சென்று கள் விற்றுள்ளனர். கள்ளுடன் வாளைமீன், வறால்மீன் ஆகியவற்றின் தசைகளைக் கொடுத்துள்ளனர்.

❖ உழத்தியர்கள் வெண்ணெல் அரிசிச் சோறாக்கி நண்டின் கலவையோடு உணவினை உண்டுள்ளனர்.

❖ பொருநர் போர்க்களம் பாடுகையில் வீரர் என்றும், ஏர்க்களம் பாடுகையில் உழவர் என்றும் அழைக்கப்பட்டுள்ளனர்.

❖ பொருநர் தடாரி, கிணை போன்ற கருவிகளை முழக்கி ஆடியுள்ளனர்.

❖ பொருநன் ஈரும், பேணும் நிறைந்து காணப்பட்டுள்ளான். பல தையல்களையுடைய கந்தல் ஆடைகளை அணிந்துள்ளான். அவனது வறுமையை நல்லியக்கோடன் நீக்கியுள்ளான்.

❖ களமர் என்போர் மாட்டை ஓட்டுகின்ற உழவர் ஆவர். இவர்கள் உழும்போது பாடும் பாடலானது ஏர்மங்கலப் பாட்டு எனப்படும்.

❖ களை பறிப்போரே ‘களைஞர்’ என அழைக்கப்பட்டுள்ளனர். களையாக முளைத்த நெய்தல் மலர்களைக் களைந்து எழுந்துள்ளனர்.

❖ அரிநர் நெற்கதிர் அடிக்கும் பொழுது ‘தண்ணுமை’ என்னும் பறையை அடித்துள்ளனர்.

❖ கூத்தர்கள் ‘கோடியர்’, ‘பல்லியக்கோடியர்’ என அழைக்கப்பட்டனர்.

❖ வயிரியர், கண்ணுளர் குறித்த பதிவுகள் ஆற்றுப்படை இலக்கியங்களில் காணப்படுகின்றன.

❖ வலைஞர் குற்றாத கொழியல் அரிசியைப் பயன்படுத்தி வீட்டினில் கள் சமைத்து அதனை மதுவாக உண்டனர். அதனுடன் பச்சை மீனைச் சுட்டு உண்பர்.

❖ வலைஞர் தங்கள் குடியிருப்புகளைக் கடற்கரையை அடுத்து அமைத்திருந்தனர்.

❖ கொறுக்கைச்சி, சோளத்தட்டை ஆகியவற்றால் கூரையமைத்து, வஞ்சி, காஞ்சி மரங்களில் வெண்மையான மரத்தடியையும் வைத்து, தாடை நாராலே கட்டி அதற்குமேல் தருப்பைப் புல்லால் வேய்ந்து குடியிருப்பை அமைத்து வாழ்ந்துள்ளனர்.

❖ தேறலை நுளைமகள் தயாரித்துள்ளாள்.

❖ நெய்தல்நில மகளிர் கள் காய்ச்சியுள்ளனர். இவர்கள் ‘கள் அடு மகளிர்’, ‘அரியல் பெண்டிர்’ எனப்பட்டனர்.

❖ உப்பு வணிகர் தமது வணிகத்திற்கு ‘மாட்டு வண்டியினை’ பயன்படுத்தியுள்ளனர். உமணர்கள் தம் குழந்தையைப் போல குரங்குகளையும் வளர்த்து அவற்றையும் தன்னுடன் கூட்டிச் சென்றுள்ளனர்.

❖ பாலைநில மகளிர் எயற்றியர் எனப்பட்டனர். இவர்கள் புல்லரிசி திரட்டல், உணவு சேகரித்தல், உணவு சமைத்தல் ஆகிய தொழில்களைச் செய்துள்ளனர்.

❖ எயிற்றியர் பாலை நிலத்தில் ஆழமாகத் தோண்டி பெண்கள் நீரெடுத்துள்ளனர்.

❖ எயிற்றியர் புளியங்களி இடப்பட்ட சோற்றையும், ஆமாவின் ஆட்டிறைச்சியையும் உணவாக உட்கொள்வர்.

❖ போர்க்களத்தில் போர் புரியும் வீரர் ‘மறவர்’ எனப்படுவர்.

**சான்றெண் விளக்கம்**


1. இரா.இளங்குமரன், பாணர், ப.34.
2. ஆ.சுப்பிரமணியன், தமிழ் இலக்கியத்தில் ஒடுக்கப்பட்டோர், ப.10.
3. ந.சுப்ரமணியன், சங்ககால வாழ்வியல், ப.375.
4. சிறுபாண்.35.
5. பெரும்பாண்.462.
6. க.கைலாசபதி, தமிழ் வீரநிலைக் கவிதை, ப.338.
7. க.சிவத்தம்பி, இலக்கியத்தில் முற்போக்கு வாதம், ப.219.
8. அ.தட்சிணாமூர்த்தி, சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள், ப.298.
9. சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம், தொகுதி-2, ப.422.
10. வ.த.இராமசுப்பிரமணியம், புறநானூறு, ப.385.

## முடிவுரை

விளிம்புநிலை மக்கள் என்போர் பொருளாதார நிலையில் கடைக்கோடியில் உள்ளவராவர். குறிஞ்சி, முல்லை நிலங்களில் வாழ்ந்த மக்கள் அனைவரின் பொருளாதார நிலையும் மேம்பட்டு இருந்ததாகப் பாடல்களில் பதிவுகளில்லை. இந்நில மக்களில் பல சிலர் விளிம்புநிலையில் வாழ்ந்திருக்கக்கூடும். குறவர், யானைப்பாகர், ஊர்க்காப்பாளர், குதிரைப்பாகன், புலைத்தி, ஆடுமகள், பெருமுதுபெண்டிர் போன்றோர் குறிஞ்சி நிலத்தில் விளிம்பு நிலையில் வாழ்ந்துள்ளனர்.

முல்லைநிலத்தில் வாழ்ந்த ஆயர்களில் பலர் செல்வந்தர்களாகவும், சிலர் விளிம்பு நிலையிலும் வாழ்ந்துள்ளனர். ஆடுமாடுகளை மேய்த்து வாழ்ந்தவர்கள் விளிம்பு நிலையிலேயே பொருளாதார நிலையில் இருந்திருக்கக்கூடும். அவர்களுக்கு அரசர்கள், குறுநில மன்னர்கள் உதவியதாகப் பாடல்களில் சான்றுகளில்லை; சமூகத்தில் மேல்நிலையாக்கத்தில் வாழ்ந்தவர்களால் இவர்களுக்கு எவ்விதத் துன்பமும் நேர்ந்ததாகப் பாடல்களில் பதிவுகள் இல்லை.

மருதநிலம் வளமான நிலமாகச் சங்ககாலத்தில் இருந்துள்ளது. அந்நிலத்தின் வளமைக்கு உழவர்கள் முதற்காரணமாக அமைந்திருந்தனர். அவர்களில் எல்லோரும் வளமைபெற்றிருந்தனரா? அல்லது அவர்களில் பலசிலர் விளிம்புநிலையில் வாழ்ந்தனரா? என்பதற்கான பதிவுகள் பாடல்களில் வெளிப்படையாக இல்லை. இவர்களில் சிலர் பொருளாதார நிலையில் விளிம்புநிலையில் வாழ்ந்திருக்கக்கூடும்.

நெய்தல் நிலத்தில் வாழ்ந்த மக்களுள் பலரது வாழ்வு பொருளாதார நிலையில் மேம்பட்டும் சிலரது வாழ்வு பொருளாதார நிலையில் விளிம்புநிலை எய்தியும் விளங்கியிருக்கக்கூடும். ஒருசில பரதவரின் வாழ்வியல் பொருளாதார நிலையில் இன்றும் மேம்பாடு அடையவில்லை; அவர்கள் பல்வேறு இன்னலுக்குள்ளாகி வருவதையும் அதனால் அவர்கள் போராடுவதையும் இன்று காணயியலுகிறது.

பாலை நிலத்தில் வாழ்ந்த எயினர், ஆறலைக்கள்வர் ஆகியோரின் வாழ்வியல் விளிம்பு நிலையிலேயே இருந்துள்ளது. ஆறலைக்கள்வர் பிறரைத் துன்புறுத்தியும், பொருள்களை வௌவியும் வாழ்ந்துள்ளனர்.

நானிலங்களில் விளிம்புநிலையில் வாழ்ந்த மக்கள் இவரிவரெனப் பாடல்களில் பதிவுகளில்லை. இருப்பினும் அவர்களின் பொருளாதாரநிலை, அவர்களின் வறுமை நிலை, அவர்கள் எய்திய இன்னல்கள் ஆகியவற்றை வைத்துக்கொண்டு இன்னென்ன மக்களினத்தவர் விளிம்புநிலையில் வாழ்ந்தவர்கள் என்ற முடிவிற்கு வருவதற்கு வாய்ப்பு உள்ளது. அவ்வகையில் கூத்தர், பாணர், பொருநர், விறலியர், குறவன், புனவன், அகவன் மகளிர், துணங்கையர், யானைப்பாகர், ஊர்க்காப்பாளர், தேர்ப்பாகன், காலங்கணிப்போர், புலைத்தி, ஆடல்மகளிர், நற்சொல் கூறுவோர், பள்ளியறைக்காவலர், தச்சன், பருத்திப்பெண்டிர், அரிநர், களமர், பாடினி, உழவர், உழத்தியர், தேர்ப்பாகன், பரதவர், பரத்தியர், உமணர், வலைஞர், கள்ளடு மகளிர், கோடியர், வயிரியர், கொல்லர், கிணறு தோண்டுபவர், மறவர், காரோடன், கலைக்கூத்தாடுபவர்கள், கொண்டி மகளிர், பூவிலைப்பெண்டிர், நெசவாளர், கலிங்கம் பகர்நர், ஆறலைக்கள்வர், எயினர், எயிற்றியர், களமர்,

களைஞர், அரிநர், அறைநர் ஆகியோர் விளிம்பு நிலையில் வாழ்ந்துள்ளமை ஆய்வில் கண்டறிந்து விளக்கப்பட்டுள்ளது.

நானிலத்தில் வாழ்ந்த விளிம்புநிலை மக்களை, அவ்வவ் நிலத்தில் வாழ்ந்த செல்வந்தர்கள் பெரும்பாலும் இன்னலுக்கு உள்ளாக்கவில்லை என்பது ஆய்வில் கண்டறிந்து விளக்கப்பட்டுள்ளது.

நாடோடி வாழ்க்கை மேற்கொண்டு வந்த சங்ககாலக் கலைஞர்களான கண்ணுளர், வயிரியர், பொருநர், விறலியர், பாணர் ஆகியோருக்குச் சோழன் நலங்கிள்ளி, கிள்ளிவளவன், மலையமான், சேரன் நெடுஞ்சேரலாதன் ஆகிய அரசர்கள் உதவியுள்ளனர். இவ்வரசர்கள் கலைஞர்களின் பசித்துன்பத்தை நீக்கியதுடன், யானை, குதிரை பொன்னாலாகிய மாலை போன்றவற்றையும் பரிசிலாக வழங்கியுள்ளனர்.

நாடோடி வாழ்க்கை மேற்கொண்ட சங்ககாலக் கலைஞர்களான வயிரியர், கண்ணுளர், பொருநர், கூத்தர், பாணர், விறலியர் போன்றோர் அரசர்களிடமும், செல்வந்தர்களிடமும் பெற்ற பெரும்பொருட்களைத் தங்களது எதிர்காலத்தேவை கருதிச் சேமித்து வைக்கவில்லை. அவற்றைத் தாம் துய்த்ததுடன், தங்களது உறவினர்களுக்கும், பிறருக்கும் கொடுத்து உதவியுள்ளனர். அதனால் அவர்களது வாழ்வு விளம்புநிலையிலேயே இருந்துள்ளது என்பது ஆய்வில் கண்டறிந்து விளக்கப்பட்டுள்ளது.

விளிம்புநிலை மக்கள் தங்களின் வாழ்வியல் மேம்பாட்டிற்காகவோ அல்லது பிறவற்றிற்காகவோப் போராட்டங்கள் நிகழ்த்தியதாகச் சங்கப் பாடல்களில் பதிவுகள் ஏதுமில்லை.

எயினர், ஆறலைக்கள்வர், கொண்டி மகளிர், கலைஞர்கள், கலைக் கூத்தாடுபவர்கள் ஆகியோர் வறுமையில் உழன்றதாகப் பதிவுகள் உள.

ஒவ்வொரு நிலத்திலும் செல்வந்தர்களாக வாழ்ந்தவர்கள், காலத்தின் சூழலுக்கேற்ப பிறராலோ அல்லது இயற்கையின் செயற்பாட்டாலோ, பொருளாதார இடர்பாடுகளுக்குள்ளாகி விளிம்புநிலைக்குத் தள்ளப் பட்டதற்கான சான்றுகள் சங்கப்பாடல்களில் இல்லை.

விளிம்புநிலை மக்களாக வாழ்ந்த கலைஞர்கள் வெறுமனே புரவலர்களிடம் யாசித்து உண்ணவில்லை. மாறாகத் தங்கள் கலைத் திறனைக் காண்பித்து அதன் மூலம் கிடைக்கின்ற பொருளைக் கொண்டு வாழ்ந்துள்ளனர் என்பது கண்டறியப்பட்டுள்ளது.

சங்ககாலச் சமுதாயத்தில் விளம்புநிலையில் வாழ்ந்த மக்களினத்தவர் தங்களது அயராத உழைப்பினால் உயர்நிலையை எய்தினர் என்பதற்கான பதிவுகள் சங்கப் பாடல்களில் இல.

பாலை நிலத்தில் வாழ்ந்த எயினர்கள் ஊகம்புல்லினால் வேய்ந்த குடிசைகளில் வாழ்ந்துள்ளனர். இவர்களின் பொருளதாரநிலை மேம்படவில்லை என்பதை இது திறம்பட எடுத்துரைக்கிறது.

நெடிய மாடங்களில் வாழ்ந்த பரதவர் பொருளாதார நிலையில் மேம்பட்டும், சிறுகுடில்களில் வாழ்ந்த பரதவர்களின் வாழ்வியல் பொருளாதார நிலையில் விளிம்பு நிலையிலும் அமைந்திருந்தன என்பது ஆய்வில் கண்டறிந்து கூறப்பட்டுள்ளது.

தொல்காப்பியர் காலத்தில் வினைவலர் (கூலித்தொழிலாளர்) அடியோர் (ஏவல் பணியாளர்) விளிம்புநிலையில் வாழ்ந்துள்ளனர். அதற்குச் சான்றாக அச்சொல்லாக்கமே அமைகின்றன.

ஒரு நிலத்தில் விளிம்புநிலையில் வாழ்ந்த மக்கள் பொருளாதாரத் தேவைக்காகப் பிறிதொரு நிலத்திற்கு இடம்பெயர்ந்து அங்கேயே தங்கி வாழ்வு மேற்கொண்டனர் என்பதற்கான பதிவுகள் இல. ஆனால் பிற பகுதியிலிருந்து வந்த இளைஞரும் வடமொழி பேசி யானையைப் பழக்கப்படுத்தியுள்ளனர்.

நாடோடிவாழ்க்கை மேற்கொண்ட பாணர், விறலி, கூத்தர் ஆகியோர் எல்லா நிலத்திற்கும் சென்று, வேந்தர், குறுநில மன்னர், செல்வந்தர் ஆகியோர்களிடம் பொருள்பலப் பெற்று வாழ்க்கை நடத்தியுள்ளனர். இவர்களின் வாழ்வு விளிம்புநிலையிலேயே இருந்துள்ளது.

பரதவரினப் பெண்கள் மீன் விற்றல், கள் காய்ச்சுதல் போன்ற தொழிலை மேற்கொண்டிருந்தனர். பொருளாதார நிலையில் அவர்கள் மேம்படவில்லை என்பதை இது தெளிவுபடுத்துகிறது.

உப்பு விற்கும் தொழிலினை மேற்கொண்டுவந்த உமணர் விளிம்பு நிலையில் வாழ்ந்துள்ளதை உய்த்துணரமுடிகிறது. அவர்கள் பொருளாதார நிலையில் பின்தங்கியிருந்ததால் ஊர் ஊராகச் சென்று, உப்பு வணிகம் செய்துள்ளனர். அவர்கள் பொருளாதாரத்தில் மேம்பாடு அடைந்திருந்தனர் என்பதற்கான சான்றுகள் சங்கப்பாடல்களில் வெளிப்படையாக இல்லை.

ஊன் உலர்த்தல், பூவிற்றல், கள்விற்றல், உணவு சேகரித்தல் ஆகிய தொழில்களில் எயிற்றியர் ஈடுபட்டிருந்ததைச் சங்கப்பாடல்கள் புலப்படுத்துகின்றன. இவர்கள் பொருளாதாரத்தில் மேம்பட்டிருந்ததால் கள்விற்கும் நிலைக்குச் சென்றிருக்கமாட்டார்கள் என்பது கருத்து.

கள்அடுமகளிர், கிணறுதோண்டுபவர், கொல்லர், காரோடன் ஆகியோர் விளிம்புநிலையில் வாழ்ந்தமையைச் சங்கப் பாடல்கள் குறிப்பால் புலப்படுத்துகின்றன. இவர்கள் வாழ்வில் மேம்பாடு அடையவில்லை; அன்றாட வாழ்வை நகர்த்துவதற்காகவே அவர்கள் தொழில்நிலையில் போராடியுள்ளனர் என்பதை அச்சொல்லாக்கமே புலப்படுத்துகின்றன.

பாண் விளக்கொளியில் துணங்கைக்கூத்தை நிகழ்த்திய கலைஞர்கள் வறுமையின் பிடியில் சிக்கித் தவித்திருக்கக்கூடும். ஆனால் அவர்கள் வறுமையில் உழன்றனர் என்பதற்கான குறிப்பு பாடல்களில் வெளிப்படையாக இல்லாவிடினும், அவர்கள் விளிம்புநிலையில் வாழ்ந்தமையை உய்த்து உணரமுடிகிறது. துணங்கைக்கூத்துக் கலைஞரும், விறலியரும் விளிம்பு நிலையில் வாழ்ந்தமையைப் புறப்பாடல்கள் உணர்த்துகின்றன.

பருத்திப்பெண்டிர், கலிங்கம் பகர்நர், நாழிகைக் கணக்கர், தச்சர் ஆகியோர் புறப்பாடல்களில் குறிக்கப்பட்டுள்ளனர். அவர்கள் விளிம்பு நிலையில் வாழ்ந்ததற்கான கருத்துக்கள் பாடல்களில் வெளிப்படையாக இல. இருப்பினும் அதனை அச்சொல்லாக்கங்களும் பாடல்களின் கருத்தும் குறிப்பால் உணர்த்துகின்றன.

உழவர்களாகிய 'வன்கைவினைஞர்' விளிம்புநிலையில் வாழ்ந்துள்ளதைப் புறப்பாடல்கள் உணர்த்துகின்றது. அவர்கள் ஆமை இறைச்சியைச் சமைத்து உண்டதே அதற்குத் தக்க சான்றாக அமைகிறது.

பூவிலைப்பெண்டிர், இல்லந்தோறும் சென்று பூவிற்று அதில் வரும் வருவாயைக் கொண்டு வாழ்க்கையை நடத்தியுள்ளனர். இதனால் அக்காலத்தில் இவர்களின் வாழ்வும், வறுமையிலேயே இருந்துள்ளமை கண்கூடு.

தொழுவர், குரவைக் கூத்தாடியுள்ளதைப் புறப்பாடல் விளக்குகிறது. இவர்களின் வாழ்வு விளிம்புநிலையில் இருந்ததை அப்பாடற் கருத்து குறிப்பால் உணர்த்துகிறது.

புறப்பாடல்கள் குறிப்பிடும் வன்கைவினைஞர், களமர், அரிநர் ஆகிய மூவரும் மருதநில மக்களாக இருக்க வாய்ப்புண்டு. அவை தொழில்நிலை உணர்த்தும், காரணச் சொல்லாக மருதநிலத்தில் வழக்கத்தில் இருந்துள்ளது போலும்.

கரும்பினை வெட்டி எந்திரத்திலிட்டு அறைக்கும் அறைஞர்கள் சங்ககாலத்தில் விளிம்புநிலையில் வாழ்ந்துள்ளனர். அவர்களின் பொருளாதார நிலை விளிம்புநிலையில் அமைந்திருந்ததைக் குறிப்பால் உணரமுடிகிறது.

பகைநாட்டிலிருந்து சிறைபிடித்துக் கொண்டுவரப்பெற்ற கொண்டி மகளிரின் வாழ்வும், உள்நாட்டில் வாழ்ந்த புலைத்தியின் வாழ்வும் விளிம்புநிலையில் இருந்துள்ளமையைப் புறப்பாடல்கள் குறிப்பாகப் புலப்படுத்துகின்றன.

பொருநன் ஈரும், பேனும் நிறைந்தவனாக வாழ்ந்துள்ளான். அந்நிலை அவன் விளிம்புநிலையில் வாழ்ந்தமையைத் தெளிவுபடுத்தும். நல்லியக்கோடன் என்ற மன்னன் பொருநரைப் பாதுகாத்துப் போற்றியுள்ளான். இன்றைய நிலையில் பொருநர் என்ற இனம் இருக்கிறதா? என்பதே ஐயப்பாடாக உள்ளது.

களைபறிக்கும் களைஞர், நெற்கதிர் அடிக்கும் பொழுது தண்ணுமை அடிக்கும் அரிநர், கலைஞர்களாகிய கூத்தர், கண்ணுளர், வயிரியர் ஆகியோர் வறுமையில் வாழ்ந்துள்ளதை ஆற்றுப்படை நூற்கருத்துக்களால் அறிய முடிகிறது.

பாலைநிலத்தில் வாழ்ந்த எயிற்றியர் புல்லரிசி திரட்டி உணவு சமைத்து வாழ்ந்துள்ளனர். அவர்கள் விளிம்புநிலையில் இருந்தமைக்கு அக்கருத்தே தக்க சான்றாகும்.

கொல்லர், தச்சர் ஆகிய மக்களின் உணவாகப் பழஞ்சோறும், அவலும் இருந்துள்ளன. இவ்வுணவுமுறை இவர்களின் வழக்கமாக இருந்துள்ளது போலும். இந்நிலையைக் கண்ணுறும்போது அவர்கள் விளிம்புநிலையில் வாழ்ந்தமை புலனாகும்.

உழவர்குடியில் பிறந்த பெண்கள் நெற்களங்கள் தோறும் ‘‘கள்” விற்றுள்ளனர். அவர்கள் பொருளாதார நிலையில் மேம்பட்டு இருந்தால் இந்நிலைக்குத் தள்ளப்பட்டிருக்கமாட்டார்கள். கள் விற்ற பெண்களின் பொருளாதார நிலை குறித்த பதிவுகள் பாடல்களில் வெளிப்படையாக இல்லை.

ஊர்க்காப்பாளர் என்போர் தன்னலம் கருதாது சோர்வில்லாமல் ஊரைப் பாதுகாத்த செய்தியானது சங்கப் புறப்பாடல்களில் வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

விறலியர் என்பவர்கள் முழுநேரமாக இசைநடனத் தொழிலிலேயே ஈடுபட்டு வந்துள்ளதை அறியமுடிகின்றது. அவர்கள் கலை வல்லவர்களாக இருந்த போதிலும் புரவலர்களை நம்பியே வாழ்க்கை நடத்தியுள்ளனர்.

கூத்தர்கள் கோடியர், வயிரியர், கண்ணுளர் எனப் பல பெயர்களில் அழைக்கப்பட்டுள்ளதைச் சங்க அகப்பாடல்கள் எடுத்துரைக்கின்றன. இவர்கள் மன்னர்களை நாடி தம் திறமையை வெளிப்படுத்தி, அதற்காகப் பரிசுகள் பலவும் பெற்றுள்ளனர்.

வயிரியர் கள்ளினை உண்டுள்ளனர். வேந்தனிடம் தம் அவர்கள் கலைத்திறனை வெளிப்படுத்திப் பொன் செய் புனையிழை மற்றும் பரிசுகள் பல பெற்றுள்ளனர். இவர்கள் இப்பரிசுப்பொருட்களைச் சேமித்துவைத்துப் பொருளாதார நிலையில் மேம்பட்டதாகப் பாடல்களில் குறிப்பேதுமில்லை. ஆகவே, இவர்கள் விளிம்புநிலையிலேயே வாழ்ந்திருக்கக் கூடுமென்பது கருத்து.

விறலியர் ‘அரிக்கோல்’ எனும் பறை ஒலிக்க ஆடியுள்ளனர். அவர்கள் ஊர்தோறும் சென்று கலைக்கூத்து நடத்தியுள்ளனர். இக்கருத்து அவர்கள் விளிம்புநிலையில் வாழ்ந்தமையை உணர்த்தும்.

குறவர்கள் தினைத்தாளால் வேய்ந்த குடில்களில் வசித்து. விலங்குகளை வேட்டையாடி வாழ்ந்தனர் என்ற செய்தியானது சங்க

அகப்பாடல்களில் குறிக்கப்பட்டுள்ளன. குறவர்கள் விளிம்பு நிலையில் வாழ்ந்துள்ளதை இக்கருத்தால் அறியமுடியும்.

குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த அகவன் மகள், பிறரின் வாழ்வில் ஏற்படும் நன்மை தீமைகளை ஆராய்ந்து சொல்பவளாக விளங்கியுள்ளாள். அவள் குறிசொல்லும் போது தெய்வங்களையும், தம் முன்னோரையும் அழைத்துப் பாடியுள்ளாள் என்ற செய்தியானது சங்க அகப்பாடல்களில் குறிக்கப் பட்டுள்ளது. குறிசொல்லித் தங்கள் வாழ்வினை நகர்த்தும் அளவிற்கு அவர்களின் வாழ்வு விளிம்பு நிலையில் அமைந்திருந்ததை இதனால் அறியமுடிகிறது.

சங்கப் புறப்பாடல்களில் நற்சொல் கூறும் பெருமுதுபெண்டிர் குறிக்கப் பட்டுள்ளனர். அவர்களை நாடிப் பலர் நற்சொல் கேட்டுள்ளனர். ஆகவே, அவர்களின் வாழ்வு விளிம்பு நிலையில் அமைந்திருந்தமையைக் குறிப்பால் உணரமுடிகிறது.

சங்க இலக்கியங்களில் இசைக்கலைஞர்களாகக் கூத்தர், பாணர், பொருநர், விறலி ஆகியோர் குறிக்கப்பட்டுள்ளனர். அவர்கள் ஒரு நிலத்திற்கு உரியவர் அல்லர். அவர்கள் நிலம்விட்டு நிலம் செல்லும் மக்களாக வாழ்ந்துள்ளனர். அதனால் பண்பாட்டுப் பரவல் ஏற்பட்டுள்ளதை அறியமுடிகிறது. அவர்தம் கலைகள் அனைவருக்கும் ஏற்ற நிலையில் இருந்தன.

மூவேந்தர்களான சேரர், சோழர், பாண்டியர் ஆகிய மன்னர்கள் விறலிக்குப் பொன்னரிமாலையினைப் பரிசாக அளித்துள்ள செய்தியை ஆலங்குடிவங்கனார் புறப்பாடல்களில் பதிவுசெய்துள்ளார். சோழன் நலங்கிள்ளி

பொருநரின் பசித்துன்பம் நீக்கியதைக் கோவூர்கிழார் புறப்பாடலில் பதிவுசெய்துள்ளார்.

மலையமான் வயிரியருக்கு பசித்துன்பம் நீக்கி பொன்செய் புனையிழைகளைப் பரிசாக அளித்துள்ளதைப் பெருந்தலைச் சாத்தனார் புலப்படுத்தியுள்ளார்.

சேரமன்னன் கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் வயிரியருக்கு நல்ல பொற்கலன்களைப் பரிசாக அளித்துள்ளதனைக் குறிப்பிட்டுள்ளார். சேரமன்னன் நெடுஞ்சேரலாதன் கண்ணுளர், வயிரியர் ஆகியோருக்குக் குதிரை, யானை, தேர் போன்றவற்றைப் பரிசாகக் கொடுத்துள்ளதைப் புலவர் குமட்டூர் கண்ணனார் குறிப்பிட்டுள்ளார்.

சேமித்து வைக்கும் தனியுடைமைச் சிந்தனையற்றுத் தேடிய பொருளைப் பொதுவில் வைத்து வாழ்ந்த புராதானப் பொதுவுடைமைச் சமூகமாகக் கலைஞர்கள் வாழ்ந்துள்ளனர். இம்மக்கள் ஒதுக்கப்பட்டதற்கும், துன்புறுத்தப்பட்டதற்குமான செய்திகள் பாடல்களில் இல்லை.

அகவன்மகள் பிறரின் வாழ்வில் ஏற்படும் நன்மை, தீமைகளை ஆராய்ந்து சொல்லும் நிலையில் விளங்கியுள்ளாள். விளிம்புநிலையில் வாழ்ந்த இப்பெண்மகளின் சொற் பலித்ததை பிறர் நம்பி ஏற்றுள்ளனர்.

யானைப்பாகர், ஊர்க்காவலர், தேர்ப்பாகன் போன்ற விளிம்புநிலை மாந்தர்களின் பணி சமூக நடைமுறையில் முக்கியமானதாகக் காணப்படுகின்றது. ஆனால் இவர்களைப் பற்றி மிகக் குறைவான பதிவுகளே சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன.

மன்னர்கள் பிறமொழி பேசும் யவனர்களைப் பாதுகாவலராகத் தங்களுக்கு வைத்திருந்தனர். தமிழ்மொழி பேசியவரை இத்தொழிலில் இவர்கள் ஈடுபடுத்தாமைக்குரிய காரணம் அவர்கள் மீதான நம்பிக்கையின்மையாக இருக்கலாம்.

குறவர்கள், உழவர்கள், பரதவர்கள் போன்ற விளிம்புநிலை மக்கள் தங்களது தொழிலுக்குத் தேவையான உழைப்புக் கருவிகளைத் தாங்களே கண்டுபிடித்து அவற்றைப் பயன்படுத்தியுள்ளனரென்பதை அறியமுடிகிறது.

விவசாயத்தின் பல படிநிலை வேலைகளைச் செய்வோர் ஒவ்வொரு பெயர்களில் அழைக்கப்பட்டாலும் அவர்கள் உழவர்களேயாவர். களையினைப் பறிப்பவர் ‘களைஞர்’ என்றும், நெற்கதிர்களை அறுப்பவர் ‘அரிநர்’ என்றும் அழைக்கப்பட்டுள்ளனர்.

நெய்தல் நிலப் பெண்கள் மீன் விற்றல், மீன் உணக்கல், உப்பு விற்றல், கள் காய்ச்சுதல் போன்ற தொழில்களைச் செய்துள்ளனர்.

நெய்தல் நிலத்தில் மீன்பிடித் தொழிலைப் போன்றே உப்பு விளைவிக்கும் தொழிலும் சிறப்பானதொரு இடத்தைப் பெற்றிருந்தது. அளவர் என்றழைக்கப்படுகின்ற இந்நிலமக்கள் இத்தொழிலை மேற்கொண்டிருந்தனர்.

வறண்ட நிலமாகிய பாலை நிலத்தில் உற்பத்தி சார்ந்த தொழில்களே இல்லை எனலாம். அந்நிலத்தில் வழிப்பறி மட்டுமே தொழிலாக இருக்கின்றது. இந்நிலத்தில் வாழ்ந்த ஆறலைக் கள்வர் இத்தொழிலைச் செய்திருந்தனர்.

கொல்லர், தச்சர் விளிம்புநிலையில் வாழ்ந்துள்ளனர். அவர்களின் தொழில் அற்றைய சமுதாயத்தில் உயர்வாகக் கருதப்பட்டுள்ளது.

பொழுதறிந்து கூறும் 'நாழிகைக் கணக்கர்'; ஆடை விற்கும் தொழிலைச் செய்வோராகிய 'கலிங்கம் பகர்நர்'; துணங்கைக் கூத்தாடும் 'துணங்கையர்' போன்றோர் விளிம்புநிலையில் வாழ்ந்ததை அச்சொல்லாக்கங்களே உறுதிப்படுத்துகின்றன.

அகப்பாடல்களில் தலைமை மாந்தர்களை முன்னிறுத்தியும், புறப்பாடல்களில் மன்னர்களின் போர், கொடைச் சூழலை முன்னிறுத்தியும் விளிம்புநிலை மக்களின் பதிவுகள் உள.

சங்கப்புலவோர் தொகை 473. அவர்களில் அகம் பாடியோர் தொகை 378. அவர்களில் எழுபத்தி நான்கு புலவர் இயற்றிய அகப்பாடல்களில் மட்டும் விளிம்புநிலை மக்களின் பதிவுகள் உள. அவர்கள் அகம்பன் மாலாதனார் (ஒன்று), அஞ்சிலஞ்சியார் (ஒன்று), அஞ்சியத்தை மகள் நாகையார் (ஒன்று), அம்மூவனார் (எட்டு), அதியன் விண்ணத்தனார் (ஒன்று), ஆலங்குடி வங்கனார் (ஒன்று), ஆவூர் மூலங்கிழார் மகனார் பெருந்தலைச் சாத்தனார் (ஒன்று), இடைக்காடனார் (இரண்டு), உக்கிரப்பெருவழுதி (ஒன்று), உலோச்சனார் (எட்டு), உறையூர்முதுகூத்தனார் (ஒன்று), எருமை வெளியனார் மகனார் கடலனார் (ஒன்று), ஐயூர் முடவனார் (ஒன்று), ஒரோடொகத்துக் கந்தரத்தனார் (இரண்டு), ஓரம்போகியார்(ஐந்து), ஓதலாந்தையார்(ஒன்று), ஔவையார்(ஒன்று), கடியலூர் உருத்திரங்கண்ணனார் (ஒன்று), கணக்காயன் தத்தன்(ஒன்று), கபிலர்(பன்னிரெண்டு), கடுவன்இளமள்ளனார்(ஒன்று), கழார்க்கீரடினயிற்றியனார் (ஒன்று), கயமனார் (ஒன்று), கருவூர்க்கண்ணம்பாளனார் (ஒன்று), கல்லாடனார்

(ஒன்று), காவன் முல்லைப்பூதனார் (நான்கு), காவட்டனார் (ஒன்று), காவிரிப்பூம்பட்டினத்துப் பொன் வணிகனார் மகனார் நம்பூதனார் (நான்கு), குடவாயிற்கீரத்தனார் (ஐந்து), குளம்பனார் (ஒன்று), கூடலூர்ப்பல்கண்ணனார் (ஒன்று), கொட்டம்பலவனார்(ஒன்று), கோடி மங்கலத்து வாதுளி நற்சேந்தனார் (ஒன்று), சாகலாசனார் (ஒன்று), சோழன் நல்லுருத்திரன் (ஒன்று), தங்கால் பொற்கொல்லன் வெண்நாகனார் (ஒன்று), தும்பிசேர் கீரன் (ஒன்று), தூங்கலோரியார் (இரண்டு), தொண்டியாமூர்ச்சாத்தனார் (ஒன்று), நக்கீரர் (எட்டு), நப்பாலத்தனார் (ஒன்று), நல்லந்துவனார் (ஒன்று), நற்றமனார் (ஒன்று), நன்னாகையார் (ஒன்று), நாமலார் மகன் இளங்கண்ணன் (ஒன்று), நெய்தல் தத்தனார் (ஒன்று), நெடுஞ்சேரலாதன் (ஒன்று), பரணர் (ஐந்து), பாரதம் பாடிய பெருந்தேவனார் (இரண்டு), பெருங்கடுங்கோ (நான்கு), பெருங்குன்றூர்கிழார் (ஒன்று), பெருங்கௌசிகனார் (ஒன்று), பேயனார் (பத்து), பொதும்பிற் புல்லாளங்கண்ணியார் (ஒன்று), மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார் (ஒன்று), மதுரை இளம்பாசிரியன் சேந்தன் கூத்தனார் (ஒன்று), மதுரைக் கண்ணத்தனார் (ஒன்று), மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார்(மூன்று), மதுரை எழுத்தாளன் சேந்தம்பூதனார் (ஒன்று), மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் (ஒன்று), மதுரைச் சுள்ளம் போதனார் (ஒன்று), மதுரை மருதனிளநாகனார் (எட்டு), மருங்கூர் கிழார் பெருங்கண்ணனார் (ஒன்று), மாறன்வழுதி(ஒன்று), மாமூலனார் (பதினொன்று), மாறோக்கத்து நப்பசலையார் (ஒன்று), மிளைகிழான் நல்வேட்டனார் (ஒன்று), முடங்கிக்கிடந்த நெடுஞ்சேரலாதன் (இரண்டு), மீனெறி தூண்டிலார் (ஒன்று), மோசிக்கரையனார்

(ஒன்று), வடமவண்ணக்கண் பேரிசாத்தனார் (இரண்டு), விற்றூற்று மூதெயினனார் (இரண்டு), வேம்பற்றூர்க்குமரனார் (ஒன்று) என்போராவர்.

23 புலவர் இயற்றிய 41 குறிஞ்சித்திணைப் பாடல்களிலும் 11 புலவர் இயற்றிய 19 முல்லைத்திணைப் பாடல்களிலும் 21 புலவர் இயற்றிய மருதத்திணைப் பாடல்களிலும் 21 புலவர்கள் இயற்றிய 40 நெய்தற்திணைப் பாடல்களிலும் 16 புலவர்கள் இயற்றிய 32 பாலைத்திணைப் பாடல்களிலும் விளிம்புநிலை மக்களின் பதிவுகள் உள.

சங்கப் புறப்பாடல்களை இயற்றியோர் தொகை 183. அவர்களுள் 27 புலவர்கள் இயற்றிய 59 பாடல்களில் விளிம்புநிலை மக்கள் குறித்த பதிவுகள் உள. அவர்கள் அள்ளூர் நன்முல்லையார் (ஒன்று), ஆலங்குடி வங்கனார் (ஒன்று), ஆலத்தூர் கிழார் (ஒன்று), இடைக்காடனார் (மூன்று), இடைக்குன்றூர்கிழார் (இரண்டு), இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் (ஒன்று), உறையூர் முதுகூத்தனார் (ஒன்று), ஐயூர் முடவனார் (இரண்டு), ஐயூர் மூலங்கிழார்(ஒன்று), ஔவையார்(மூன்று), கபிலர்(ஐந்து), காக்கைப்பாடினியார் நச்செள்ளையார் (ஒன்று), குமட்டூர் கண்ணனார் (ஒன்று), கோவூர்க்கிழார் (இரண்டு), கோட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக்குமரனார் (இரண்டு), தங்கால் பொற்கொல்லன் வெண்ணாகனார் (ஒன்று), தும்பிசொகினனார் (ஒன்று), நெடும்பல்லியத்தனார் (ஒன்று), நொச்சிநியமங்கிழார் (ஒன்று), பரணர் (மூன்று), பிசிராந்தையார் (ஒன்று), பெருங்குன்றூர்கிழார் (ஒன்று), பெருந்தலைச்சாத்தனார் (ஒன்று), பொத்தியார் (ஒன்று), பொன்முடியார் (ஒன்று), மருத்துவன் தாமோதரனார் (ஒன்று), மாங்குடி மருதனார் (பன்னிரெண்டு) என்போராவர்.

புறப்பாடல்களில் விளிம்புநிலை மக்களைப் பற்றிய பதிவை மிகுதியாகப் பதிவுசெய்த புலவர் மாங்குடி மருதனார் ஆவார்.

ஆற்றுப்படை நூலான கூத்தராற்றுப்படையில் குறவன், யானைப்பாகர், விறலியர், உழவர், அரிநர், வயிரியர், கோடியர், கண்ணுளர், மறவர், பாணர் எனும் விளிம்புநிலை மக்களைப் பெருங்கௌசிகனார் பதிவு செய்துள்ளார்.

விறலியர், தச்சன், கொல்லன், உழவர், களைஞர், பரதவமகளிர், வலைஞர், கள் அடு மகளிர், எயிற்றியர், பாணர் ஆகிய விளிம்புநிலை மக்களைப் பெரும்பாணாற்றுப்படையில் கடியலூர் உருத்திரங்கண்ணனார் எனும் புலவர் குறித்துள்ளார்.

இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் தச்சன், உழவர், பொருநர், கோடியர், நுளைத்தியர், உமணர், எயிற்றியர், பாணர், விறலியர், பொருநர், உமணர் என்னும் விளிம்பு நிலை மக்களை சிறுபாணாற்றுப்படையில் புலப்படுத்தியுள்ளார்.

முடத்தாமக்கண்ணியார், பொருநர், உமணர், பாணர் ஆகியோரைப் பொருநராற்றுப்படையில் குறித்துள்ளார்.

சங்க அகப்பாடல்களில் கூத்தர், கோடியர், வயிரியர், பாணர், பொருநர், ஆடல்மகளிர், பாடினி, குறவன், புனவன், அகவன்மகளிர், துணங்கையர், கட்டுவிச்சி, யானைப்பாகர், தேர்ப்பாகன், ஊர்க்காப்பாளர், காலங்கணிப்போர், பள்ளியறைக்காவலர், புலைத்தி, தச்சன், கொல்லன், உழவர், உழத்தியர், அரிநர், களைஞர், களமர், பரத்தையர், பருத்திப்பெண்டிர், பரதவர், உமணர், வலைஞர், கள்ளடுமகளிர், எயினர்,

எயிற்றியர், ஆறலைக்கள்வர், கிணறு தோண்டுபவர், மறவர், காரோடன், கழைக்கூத்தாடுபவர்கள், கொண்டிமகளிர் ஆகிய முப்பத்தொன்பது பேரும் சங்கப் புறப்பாடல்களில், கூத்தர், வயிரியர், கண்ணுளர், துணங்கையர், பாணர், பொருநர், விறலியர், புனவன், ஊர்க்காப்பாளர், தச்சன், கொல்லன், உழவர், களமர், தொழுவர், அரிநர், அறைநர், பரத்தையர், பூவிலைப்பெண்டிர், நெசவாளர், பருத்திப்பெண்டிர், கலிங்கம் பகர்நர், புலைத்தி, பரத்தியர், யானைப்பாகர், நாழிகைக்கணக்கர், வலைஞர், கொண்டிமகளிர், கிணறு தோண்டுபவர் ஆகிய இருபத்தெட்டு பேரும் ஆற்றுப்படை நூல்களில் கோடியர், வயிரியர், கண்ணுளர், பாணர், பொருநர், விறலியர், குறவன், யானைப்பாகர், தச்சன், கொல்லர், உழவர், களமர், களைஞர், அரிநர், வலைஞர், நுளைத்தியர், கள்அடுமகளிர், உமணர், எயிற்றியர், மறவர் ஆகிய இருபது பேரும் விளிம்புநிலையில் இருந்ததைக் குறிப்பாகவும், வெளிப்படையாகவும் உணரமுடிகிறது.

## துணைநூற்பட்டியல்

### முதன்மைச் சான்றாதாரங்கள்

1. இராமசுப்பிரமணியம்.வ.த., - புறநானூறு மூலமும் உரையும், திருமகள் நிலையம், தி.நகர், சென்னை-600 017. முதற்பதிப்பு: ஜூன் 2000.

2. சாமிநாதைய்யர்,உ.வே., (உ.ஆ.)- குறுந்தொகை மூலமும் உரையும், உ.வே.சா. நூல்நிலையம், பெசன்ட்நகர், சென்னை. அக்டோபர் 2009.

3. மேலது. - பத்துப்பாட்டு மூலமும் உரையும், உ.வே.சா. நூல் நிலையம், பெசன்ட் நகர், சென்னை. 2009.

4. சிவத்தம்பி.கா. - இலக்கியத்தில் முற்போக்குவாதம், பாட்டாளிகள் வெளியீடு, சென்னை. மு.ப.1978.

5. சுப்பிரமணியன்.ச.வே. (உ.ஆ.) - பத்துப்பாட்டு மூலமும் உரையும், கோவிலூர் மடாலயம், கோவிலூர்-630 307 அக்டோபர்-2003.

6. செயபால்.இரா. (உ.ஆ.) - அகநானூறு (மூலமும் உரையும்), முதல் பாகம், இரண்டாம் பாகம், நியூசெஞ்சுரி புக் ஹவுஸ்(பி)லிமிடெட், அம்பத்தூர், சென்னை-1. முதற்பதிப்பு: 2004.

7. சோமசுந்தரனார்,பொ.வே. (உ.ஆ.) - ஐங்குறுநூறு, திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-18. 1961.

8. மேலது, - ஐங்குறுநூறு, திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-18. 1968.

9. துரைசாமிப்பிள்ளை.ஔவை.சு. (உ.ஆ.) - புறநானூறு மூலமும் உரையும், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-18. இரண்டாம் பதிப்பு: 2007.

10. மேலது - பதிற்றுப்பத்து மூலமும் உரையும், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-18. இரண்டாம் பதிப்பு: 2007.

11. நச்சினார்க்கினியர் (உ.ஆ.) - கலித்தொகை மூலமும் உரையும்,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை-18.
இரண்டாம் பதிப்பு: 2007.

12. நாராயணசாமி.அ (உ.ஆ.) - நற்றிணை நானூறு,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை-18.
இரண்டாம் பதிப்பு: 2007.

**துணைமைச் சான்றாதாரங்கள்**

1. அகத்தியலிங்கம், சு.பொ. - சாதியம்,
(வேர்கள், விளைவுகள், சவால்கள்),
பாரதி புத்தகாலயம்,
சென்னை.

2. அழகம்மை.கே.பி.., - சமூகநோக்கில் சங்க மகளிர்,
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு, பாரிமுனை,
சென்னை-600 108.
மு.ப.ஆகஸ்ட் 2001.

3. அருணன் - தமிழகத்தில் சமூகச் சீர்திருத்தம்,
வைகை வெளியீட்டகம்,
மதுரை.
மு.ப. 2001.

4. ஆறுமுகம்.அ. - சங்க இலக்கியத்தில் குடும்பம்,
உடைமை, அரசு,
பாவேந்தர் பதிப்பகம்,
திருமழபாடி,
அரியலூர்.
1994.

5. இளம்பூரணர் (உ.ஆ.) - தொல்காப்பியம்,
79, பிரகாசம் சாலை, (பிராட்வே)
சென்னை-108.
மு.ப.1953 (சூன்)

6. மேலது - தொல்காப்பியம் பொருளதிகாரம்,
அகத்திணையியல் உரைவளம்,
மதுரைக்காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை-625 021
1994.

7. இளங்குமரன்.இரா. - பாணர்,
மணிவாசகர் பதிப்பகம்,
சிதம்பரம்.

8. இராசமாணிக்கனார்.மா. - பத்துப்பாட்டு ஆராய்ச்சி,
அவ்வை அச்சுக்கூடம்,
96, பி.வி.கோயில் தெரு,
சென்னை-13.

9. மேலது. - தமிழர் திருமணத்தில் தாலி,
செல்வி பதிப்பகம்,
காரைக்குடி.
1955.

10. எட்கர் தர்ஸ்டன் (நூ.ஆ.) க.இரத்தினம் (மொ.பெ.ஆ.) - தென்னிந்தியக் குலங்களும் குடிகளும், தொகுதி-ஒன்று, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர். முதற்பதிப்பு: 1986.

11. ஐயனாரிதனார் - புறப்பொருள் வெண்பாமாலை, திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1. மு.ப.1969.

12. எங்கல்ஸ் பிரடெரிக் - இயற்கையின் இயக்க இயல், முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ.

13. கல்பகம் - சமூகவியல், மோகன் பதிப்பகம், சென்னை. மு.ப.1973.

14. கனகசபை.வி. (நூ.ஆ.) அப்பாத்துரை.கா. (மொ.பெ.ஆ.) - 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம், இராமையா பதிப்பகம், ஜி-4, சாந்தி அடுக்ககம், இராயப்பேட்டை, சென்னை-14. மு.ப. சூலை 2012.

15. காந்தி.க. - தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி,
சென்னை-600 113.
மு.ப.2008.

16. கைலாசபதி.க. - தமிழர் வீரநிலைக் கவிதை,
குமரன் புத்தக இல்லம்,
கொழும்பு-சென்னை.
மு.ப. சூலை 2006.

17. கோதில்மொழியன்.சின். - தொல்காப்பியத்தில் சாதிநெறி,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை.
மு.ப.1988.

18. சடகோபன் - இந்தியப் பொருளாதாரம்,
அமுதன் பதிப்பகம்,
சாமிநாதன் நகர், மேலக்காவேரி,
கும்பகோணம்-612 003
1987.

19. சசிவல்லி.வி.சி., - பண்டைத் தமிழர் தொழில்கள்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை-600 113.
மு.ப.1989.

20. மேலது - தமிழர் திருமணம்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை-600 113.
மு.ப.1985.

21. சண்முகம்.செ.வை. (உ.ஆ.) - சுவாமிநாதம் பதிப்பும் உரையும்,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
அண்ணாமலை நகர்.
1975.

22. சாமிசிதம்பரம் - பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும்,
மணிவாசகர் பதிப்பகம்,
மெய்யப்பன் தமிழாய்வகம்,
53, புதுத்தெரு,
சிதம்பரம்-608 001.

23. சாமிநாதையர்.உ.வே. (ப.ஆ.) - தமிழ்நெறி விளக்கம் பொருளியல்,
சென்னை வாஜர்னல் அச்சுக்கூடம்,
மயிலாப்பூர்.
1939.

24. சிவசுப்பிரமணியன்.ஆ. - தமிழகத்தில் அடிமைமுறை,
காலச்சுவடு பதிப்பகம்,
669, கே.பி.சாலை,
நாகர்கோவில்-629 001.
மு.ப. ஏப்ரல் 2005.

25. சிவத்தம்பி.கா. - இலக்கியத்தில் முற்போக்கு வாதம்,
பாட்டாளிகள் வெளியீடு,
சென்னை.
மு.ப. 1978.

26. சியாமா சரண்துபே (தமிழாக்கம் ஸ்ரீதரன்) - இந்தியச் சமுதாயம்,
நேஷனல் புக் டிரஸ்ட்,
டெல்லி.
முதற்பதிப்பு: 1996.

27. சின்னச்சாமி.தே.ப., - கொங்குவேளாளர் சடங்குகளில் பண்பாடு,
ருக்மணி ஆப்செட் பிரஸ்,
கோவை.

28. சுப்பிரமணியன்.ச.வே. - தொன்னூல் விளக்கம்,
தமிழ்ப் பதிப்பகம்,
2, கால்வாய்க்கரைச்சாலை,
கஸ்தூரி நகர்,
அடையாறு, சென்னை-600 002.

29. சுப்பிரமணியன்.கா. - சங்க கால சமுதாயம்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
சென்னை.
1982.

30. சுப்பிரமணியன்.ந. - சங்க கால வாழ்வியல்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
சென்னை-600 098.

31. சுப்புரெட்டியா.ந. - தொல்காப்பியர் காட்டும் வாழ்க்கை,
பழனியப்பா பிரதர்ஸ்,
சென்னை.
1974.

32. சேயொளி (உ.ஆ.) - இலக்கண விளக்கம் (பொருள்),
திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
லிமிடெட்,
1/140, பிரகாசம் சாலை, சென்னை.
மு.ப. ஆகஸ்டு 1976.

33. .சேனாவரையர் (உ.ஆ.) - தொல்காப்பியம்,
சொல்லதிகாரம்,
சாரதா பதிப்பகம்,
சென்னை-600 014.
மு.ப. சனவரி 2012.

34. தட்சிணாமூர்த்தி.அ. - சங்க இலக்கியங்கள் உணர்த்தும்
மனித உறவுகள்,
மங்கையர்க்கரசி பதிப்பகம்,
அருளானந்த நகர்,
பத்தாம் குறுக்குத்தெரு,
தஞ்சாவூர்-613 007.
1980.

35. திலகவதி.சு. - சங்க கால மகளிர் வாழ்வியல்,
இறையருள் பதிப்பகம்,
4/371, முதல் தெரு,
சக்தி நகர்,
காட்டூர்,
திருச்சி-620 019.

36. திருநாவுக்கரசு.க.த. - Journal of Tamil Studies,
வள்ளுவர் கண்ட மனிதன்,
International Institute of Tamil Studies,
Chennai.

37. நக்கீரர் (உ.ஆ.) - களவியல் என்ற இறையனார் அகப்பொருள்,
சாரதா பதிப்பகம்,
ஜி4, சாந்தி அடுக்ககம்,
இராயப்பேட்டை,
சென்னை-14.
மு.ப. சூன் 2010.

38. நச்சினார்க்கினியர் (உ.ஆ.) - தொல்காப்பியம் பொருளதிகாரம் அகத்திணையியல் உரைவளம்,
மதுரைக்காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை-625 021.
மு.ப.1994.

39. நீலகண்டசாஸ்திரி.கே.ஏ. - சோழர்கள்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ்,
மதுரை.

40. திருஞானசம்பந்தம்.ச. (உ.ஆ.) - நம்பியகப்பொருள்,
கதிர் பதிப்பகம்,
தெற்குவீதி, திருவையாறு-613 204.
மு.ப. நவம்பர் 2010.

41. பக்தவச்சலபாரதி.சீ. - பண்பாட்டு மானிடவியல்,
மெய்யப்பன் பதிப்பகம்,
53, புதுத்தெரு, சிதம்பரம்-608 001.
மு.ப. நவம்பர் 1990.

42. மேலது - மானிடவியல் கோட்பாடுகள்,
அடையாளம் பதிப்பகம்,
1205/1, கருப்பூர் சாலை,
திருச்சி.
இரண்டாம் பதிப்பு-2012.

43. மேலது - தமிழர் மானிடவியல்,
மெய்யப்பன் தமிழாய்வகம்,
சிதம்பரம்.
2002.

44. பாலசுப்பிரமணியன்.கு.வெ. - சங்க இலக்கியத்தில்
சமூக அமைப்புகள்,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.
மு.ப.1994.

45. பாலசுந்தரம்.ச. - தொல்காப்பியம் பொருளதிகாரம்,
ஆராய்ச்சிக் காண்டிகையுரை,
தாமரை வெளியீட்டகம்,
367, மேலவீதி,
தஞ்சாவூர்-9.
மு.ப. அக்டோபர் 1989.

46. பாஸ்கரன்.க. - சமுதாயத் தத்துவம்,
தத்துவ மையம்,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.
1994.

47. பாஸ்கல் கில்பர்ட்.எஸ்.ஜே. - சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள்,
தமிழ் வெளியீட்டுக்கழகம்,
சென்னை.
1964.

48. பெருந்தேவனார் (உ.ஆ.) - வீரசோழியம்,
திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
சென்னை-1.
1970.

49. மணி.பெ.சு. - சங்ககால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்,
சென்னை.
1986.

50. மறைமலை சி.இ. - இலக்கியமும் சமூகவியலும்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை.
மு.ப.1991.

51. மாதையன்.பெ. - சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்,
41-பி, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை-600 098.
மு.ப. மார்ச் 2010.

52. முத்துவீர உபாத்தியாயர் - முத்துவீரியம்,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
லிமிடெட்,
சென்னை-1

53. வெள்ளைவாரணர்.க. - தொல்காப்பியம் மெய்ப்பாட்டியல்
உரைவளம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை-625 021.
மு.ப.1975.

54. ஸ்ரீதரன்.என். - இந்தியச் சமுதாயம்,
நேஷனல் புக் ஹவுஸ்,
இந்தியா.
1996.

55. ……. (ஆசிரியர் குழு) - பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ்
பிரைவேட் லிமிடெட்,
சென்னை-18.
மு.ப.1981.

**ஆய்வேடுகள்**


1. இராசாராம்.சு. - சங்க இலக்கியங்களில் அறியலாகும் நடைமுறை வாழ்க்கை, முனைவர் பட்ட ஆய்வேடு. தமிழ்த்துறை, அழகப்பா பல்கலைக்கழகம், 1998.

2. பஞ்சவர்ணம்.க. - பண்டைத் தமிழரின் புழங்கு பொருட்கள், முனைவர் பட்ட ஆய்வேடு. தமிழ்த்துறை, அழகப்பா பல்கலைக்கழகம், ஆகஸ்ட்-2005.

3. பத்மாவள்ளி.கோ. - சங்ககாலப் பெண்பாற் புலவர், ஒரு புதிய பார்வை எம்.ஃ.பில்,ஆய்வேடு, தமிழ்த்துறை, அன்னை தெரசா மகளிர் பல்கலைக்கழகம், கொடைக்கானல். 1986.

**அகராதிகள்**


1. கௌமாரீஸ்வரி.எஸ். (ப.ஆ.) - கௌரா தமிழ் அகராதி, சாரதா பதிப்பகம், சென்னை. முதற்பதிப்பு: 2003.

2. சிங்காரவேலு முதலியார்.ஆ. - அபிதான சிந்தாமணி, ஏஷியன் எஜிகேஷனல் சர்வீஸ், புதுதில்லி. முதற்பதிப்பு: 1984.

3. வீரமாமுனிவர் - சதுரகராதி, உலகத் தமிழ் இயக்கம், 7, அதியமான் தெரு, பெருங்குடி, சென்னை-600 096.

4. பவாநந்தம் பிள்ளை - தற்காலத் தமிழ்ச் சொல்லகராதி, அமுத நிலையம், இராயப்பேட்டை, சென்னை-14.

5. ….. - கழகத் தமிழகராதி, கழகப் புலவர் குழுவினர், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வேலி-6.

6. …..                                                  - க்ரியாவின் தற்காலத் தமிழகராதி,
தமிழ்-தமிழ்-ஆங்கிலம்,
க்ரியா,
268, இராயப்பேட்டை ரோடு,
சென்னை-600 014.
முதற்பதிப்பு: 1992.

7. …..                                                  - தமிழ் லெக்சிகன் தொகுதி-3,
சென்னைப் பல்கலைக்கழகம்,
முதற்பதிப்பு: 1928.

**களஞ்சியங்கள்**

1. சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம்,
(தொகுதி-இரண்டு),
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.

2. வாழ்வியற் களஞ்சியம்,
(தொகுதி-எட்டு),
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.

3. கலைக்களஞ்சியம்,
(தொகுதி-ஏழு),
தமிழ் வளர்ச்சிக்கழகம்,
சென்னை.
முதற்பதிப்பு: 1961.

**ஆங்கில நூல்கள்**


1. Chruye.G.S. - Caste and Class in India,
   The Popular Book Department,
   Bombay.
   1972.

2. Hutton.T.H. - Caste of India,
   Oxford University Press,
   Bombay.
   1983.
3. Majumdar.D.N. - Rules and Cultures of India,
   Asia Publishing House,
   Bombay.
   1958.
4. Suryanarayana Sastriar. V.G. - G.A.Natesan & Co.,
   Printers,
   Esplannade.
   1903.
5. Social Excludution - Wikipidia
6. http://sandhan.com
7. http://vankalai mannar.com

**அட்டவணை-1**

**இலக்கணங்களில் விளிம்புநிலை மக்கள்**

| வ. எண் | ஆசிரியர் பெயர் | நூல் | விளிம்புநிலை மக்கள் |
|---|---|---|---|
| 1. | தொல்காப்பியர் | தொல்காப்பியம் | ஆயர், வேட்டுவர் (தொல்.967) பாணன், கூத்தன், விறலி (தொல்.பொருள்.191) |
| 2. | இறையனார் | இறையனார் அகப்பொருள் | சிலம்பன் (இறை.153) வெற்பன் (இறை.154) |
| 3. | புத்தமித்திரனார் | வீரசோழியம் | வெற்பன், குன்றுவர் (வீ.சோ.90) இடையர் கிழத்தி (வீ.சோ.92) கடைச்சியர் (வீ.சோ.93) கொண்கன்,நுளையர் (வீ.சோ.94) விடலை, குறும்பர் (வீ.சோ.91) |
| 4. | நாற்கவிராசநம்பி | நம்பியகப்பொருள் | பொருப்பன், வெற்பன், சிலம்பன், கொடிச்சி, குறவர், கானவர், குறத்தியர் (நம்பியகப்.20) குறும்பொறைநாடன், இடையர், இடைச்சியர், ஆயர், ஆய்ச்சியர் (நம்பியகப்.22) உழவர், உழத்தியர், கடையர், கடைச்சியர் (நம்பியகப்.23) சேர்ப்பன், புலம்பன், பரத்தி, |

| | | | |
|---|---|---|---|
| | | | நுளைச்சி, நுளையர், பரதவர், அளவர், அளத்தியர் (நம்பியகப்.24)<br>விடலை, காளை, மீளி, எயினர், எயிற்றியர், மறவர், மறத்தியர் (நம்பியகப்.25) |
| 5. | ஆசிரியர் பெயர் (அறியமுடியவில்லை) | தமிழ்நெறி விளக்கம் | வெற்பன், குறவர், விடலை, எயினர், குறும்பொறைநாடன், குடவர், மகுணன், உழவர், சேர்ப்பன், பரதவர் (தமிழ்நெறி.வி.8) |
| 6. | வீரமாமுனிவர் | தொன்னூல் விளக்கம் | பொருப்பன், வெற்பன், சிலம்பன், குறத்தி, கொடிச்சி, குறவர், கானவர், குறத்தியர் (தொ.வி.176)<br>இடையர், இடைச்சியர், ஆயர், ஆய்ச்சியர் (தொ.வி.178)<br>உழவர், உழத்தியர், கடையர், கடைச்சியர் (தொ.வி.179)<br>பரத்தி, நுளைச்சி, பரவர், பரத்தியர், நுளையர், அளவன், அளத்தியர் (தொ.வி.180)<br>காளை, விடலை, மீளி, எயினர், எயிற்றியர், மறவர், மறத்தியர் (தொ.வி.177) |
| 7. | முத்துவீர உபாத்தியாயர் | முத்துவீரியம் | வெற்பன், சிலம்பன், குறத்தி, கொடிச்சி, குறவர், கானவர், குறத்தியர் (மு.வீ.802)<br>இடையர், இடைச்சியர், ஆயர், ஆய்ச்சியர் (மு.வீ.804) |

| | | | உழவர், உழத்தியர், கடையர், கடைச்சியர் (மு.வீ.805) பரத்தியர், நுளையர், நுளைச்சியர், அளவன், அளத்தியர் (மு.வீ.806) காளை, விடலை, மீளி, எயினர், எயிற்றியர், மறவர், மறத்தியர் (மு.வீ.803) |
|---|---|---|---|
| 8. | சுவாமிக்கவிராயர் | சுவாமிநாதம் | கொடிச்சி, குறவன், குறத்தியர் (சு.நா.74) இடையர், இடைச்சியர் (சு.நா.76) கடையர், கடைச்சியர், வேசையர்கள் (சு.நா.77) சேர்ப்பன், பரத்தியர்கள், பரதவர் (சு.நா.79) எயிற்றி, மறவர், மறத்தியர் (சு.நா.75) |

## அட்டவணை-2

## சங்க அக இலக்கியங்களில் விளிம்புநிலை மக்களின் வாழ்வியல்

| வ. எண். | புலவர் | நூல் | விளிம்புநிலை மக்கள் |
|---|---|---|---|
| 1. | அகம்பன் மாலாதனார் | நற்.81:3-5 | தேர்ப்பாகன் |
| 2. | அஞ்சிலஞ்சியார் | நற்.90:3-4 | புலைத்தி |
| 3. | அஞ்சியத்தை மகள் நாகையார் | அகநா.352:1-6 | ஆடல் மகளிர் |
| 4. | அம்மூவனார் | நற்.275:1-5 | அரிநர் |
| | ” | ஐங்.195:1 | பரதவர் |
| | ” | நற்.4:7-10 | உமணர் |
| | ” | நற்.138:1-4 | உமணர் |
| | ” | அகநா.140:5-8 | உமணர் |
| | ” | ஐங்.136:1 | பாணர் |
| | ” | ஐங்.138:1 | பாணர் |
| | ” | அகநா.10 | கொண்டி மகளிர் |
| | ” | நற்.315:1-12 | பரத்தையர் |
| 5. | அதியன் விண்ணத்தனார் | அகநா.301 | கூத்தர் |
| 6. | அஞ்சியத்தை மகள் நாகையார் | அகநா.352:1-6 | ஆடல் மகளிர் |
| 7. | ஆலங்குடி வங்கனார் | நற்.400:2-4 | அரிநர் |
| 8. | ஆவூர் மூலங்கிழார் மகனார் பெருந்தலைச் சாத்தனார் | அகநா.224:2-3 | கொல்லன் |
| 9. | இடைக்காடனார் | அகநா.194:6-9 | களைஞர் |
| | ” | அகநா.284:7-9 | மறவர் |

| 10. | உக்கிரப்பெருவழுதி | நற்.98:8-10 | தேர்ப்பாகன் |
|---|---|---|---|
| 11. | உலோச்சனார் | நற்.64:4-5 | குறவன் |
| | ” | அகநா.400:11-12 | தேர்ப்பாகன் |
| | ” | அகநா.20:12-16 | தேர்ப்பாகன் |
| | ” | அகநா.210:1-5 | பாடினி |
| | ” | அகநா.200:2 | பரதவர் |
| | ” | அகநா.210:1 | பரதவர் |
| | ” | நற்.354:8-9 | உமணர் |
| | ” | நற்.183:1-5 | உமணர் |
| | ” | நற்.254:6-7 | உமணர் |
| 12. | உறையூர் முதுகூத்தனார் | அகநா.329:5-8 | உமணர் |
| 13. | எருமை வெளியனார் மகனார் கடலனார் | அகநா.72:1-6 | கொல்லன் |
| 14. | ஐயூர்முடவனார் | அகநா.216:1-5 | பாடினி |
| 15. | ஒரோடொகத்துக் கந்தரத்தனார் | அகநா.191:1-9 | உமணர் |
| | ” | குறுந்.155:1-7 | உழவர் |
| 16. | ஓரம்போகியார் | நற்.360:1-2 | ஆடல் மகளிர் |
| | ” | ஐங்.246:1-6 | புனவன் |
| | ” | ஐங்.253:1-2 | குறவன் |
| | ” | ஐங்.49:1-2 | பாடினி |
| | ” | குறுந்.127:4-6 | பாணர் |
| 17. | ஓதலாந்தையார் | ஐங்.365:1-3 | எயிற்றியர் |

| 18. | ஔவையார் | குறுந்.23:1-5 | அகவன் மகளிர் |
|---|---|---|---|
| 19. | கடியலூர் உருத்திரங்கண்ணனார் | பட்டினப்.194-197 | வலைஞர் |
| 20. | கணக்காயன் தத்தன் | குறுந்.304:1 | கொல்லன் |
| 21. | கபிலர் | அகநா.182:1-8 | குறவன் |
| | ” | குறிஞ்சிப்.153-161 | குறவன் |
| | ” | அகநா.292:8-15 | குறவன் |
| | ” | ஐங்.208:1-3 | குறவன் |
| | ” | ஐங்.256:1-4 | குறவன் |
| | ” | ஐங்.260:2-3 | குறவன் |
| | ” | ஐங்.268:2-4 | குறவன் |
| | ” | ஐங்.270:1-3 | குறவன் |
| | ” | ஐங்.203:4 | கிணறு தோண்டுபவர் |
| | ” | அகநா.2:12-13 | தேர்ப்பாகன் |
| | ” | அகநா.82:1-10 | ஆடல் மகளிர் |
| | ” | நற்.320:1-10 | பரத்தையர் |
| 22. | கடுவன் இளமள்ளனார் | நற்.150:1-11 | பரத்தையர் |
| 23. | கயமனார் | அகநா.321-8 | கிணறு தோண்டுபவர் |
| 24. | கருவூர்க் கண்ணம்பாளனார் | அகநா.180:13-10 | களைஞர் |

| 25. | கல்லாடனார் | அகநா.9:11-13 | எயிற்றியர் |
|---|---|---|---|
| 26. | கழார்க்கீரடினயிற்றியனார் | குறுந்.330:1-3 | புலைத்தி |
| 27. | காவன் முல்லைப்பூதனார் | அகநா.21:24-27 | குறவன் |
| | ” | குறுந்.269:4-5 | பரதவர் |
| | ” | அகநா.151:8-10 | ஆடல் மகளிர் |
| | ” | அகநா.21:22-23 | கிணறு தோண்டுபவர் |
| 28. | காவட்டனார் | அகநா.378:8-10 | வயிரியர் |
| 29. | காவிரிப்பூம்பட்டினத்துப் பொன் வணிகனார் மகனார் நம்பூதனார் | முல்லைப்.30-36 | யானைப்பாகர் |
| | ” | முல்லைப்.55-58 | காலங்கணிப்போர் |
| | ” | முல்லைப்.7-11 | கட்டுவிச்சி |
| | ” | முல்லைப்.59-66 | பள்ளியறைக் காவலர் |
| 30. | குடவாயிற் கீரத்தனார் | அகநா.366:2-5 | களமர் |
| | ” | அகநா.35:6-9 | மறவர் |
| | ” | அகநா.60:2-6 | பரதவர் |
| | ” | நற்.212:3-4 | கோடியர் |
| | ” | அகநா.79:1-4 | கிணறு தோண்டுபவர் |
| 31. | குளம்பனார் | நற்.288:6-7 | அகவன் மகளிர் |
| 32. | கூடலூர்ப் பல்கண்ணனார் | நற்.200:8-11 | பாணர் |
| 33. | கொட்டம்பலவனார் | நற்.95:1-10 | கழைக்கூத்து ஆடுபவர் |

| 34. | கோடிமங்கலத்து வாதுளி நற்சேந்தனார் | அகநா.232:9-15 | குறவன் |
|---|---|---|---|
| 35. | சாகலாசனார் | அகநா.270:2-3 | பரதவர் |
| 36. | சோழன் நல்லுருத்திரன் | கலி.117:7-8 | புலைத்தி |
| 37. | தங்கால்பொற்கொல்லன் வெண்நாகனார் | நற்.313:1-2 | கொல்லன் |
| 38. | தும்பிசேர்கீரன் | குறுந்.61:1-3 | தச்சன் |
| 39. | தூங்கலோரியார் | நற்.60:1-7 | உழவர் |
| | ” | நற்.60:3-8 | உழத்தியர் |
| 40. | தொண்டியாமூர்ச் சாத்தனார் | அகநா.169:5-7 | உமணர் |
| 41. | நக்கீரர் | நற்.86:1-2 | மறவர் |
| | ” | நெடுநல்.67-70 | ஆடல்மகளிர் |
| | ” | அகநா.290:2-3 | பரதவர் |
| | ” | அகநா.340:14 | பரதவர் |
| | ” | அகநா.310:14-17 | உமணர் |
| | ” | அகநா.126:8-12 | பாடினி |
| 42. | நப்பாலத்தனார் | நற்.240:7 | கிணறு தோண்டுபவர் |
| 43. | நல்லந்துவனார் | கலி.138:1-7 | யானைப்பாகன் |
| 44. | நற்றமனார் | நற்.133:9-11 | கொல்லன் |
| 45. | நன்னாகையார் | குறுந்.118:3-4 | ஊர்க்காப்பாளர் |
| 46. | நாமலார் மகன் இளங்கண்ணன் | குறுந்.250:4 | தேர்ப்பாகன் |
| 47. | நெய்தல் தத்தனார் | நற்.49:4 | பரதவர் |

| | | | |
|---|---|---|---|
| 48. | நெடுஞ்சேரலாதன் | அகநா.30:5 | உமணர் |
| 49. | பரணர் | அகநா.322:12 | குறவன் |
| | ” | நற்.247:4 | பருத்திப்பெண்டிர் |
| | ” | அகநா.122:5-6 | ஊர்க்காப்பாளர் |
| | ” | அகநா.162:7-8 | ஊர்க்காப்பாளர் |
| | ” | அகநா.76:5 | பொருநர் |
| | ” | அகநா.76:7-9 | பொருநர் |
| 50. | பாரதம் பாடிய பெருந்தேவனார் | ஐங்.1:4-6 | உழவர் |
| 51. | பெருங்கடுங்கோ | ஐங்.47:1-3 | பாடினி |
| | ” | கலி.23:1-2 | புனவன் |
| | ” | நற்.118:8-11 | உழத்தியர் |
| | ” | கலி.6:1-6 | ஆறலைக்கள்வர் |
| | ” | கலி.10:5-6 | ஆறலைக்கள்வர் |
| 52. | பெருங்குன்றூர்கிழார் | நற்.119:1-3 | புனவன் |
| 53. | பெருங்கௌசிகனார் | நற்.44:5-8 | குறவன் |
| 54. | பேயனார் | ஐங்.481:1-4 | தேர்ப்பாகன் |
| | ” | ஐங்.422:1-2 | தேர்ப்பாகன் |
| | ” | ஐங்.477:1-4 | பாணர் |
| | ” | ஐங்.480:1-5 | பாணர் |
| | ” | ஐங்.475:1-5 | பாணர் |
| | ” | ஐங்.484:1-2 | தேர்ப்பாகன் |

| | | | |
|---|---|---|---|
| | ” | ஐங்.486:1-5 | தேர்ப்பாகன் |
| | ” | ஐங்.487:1-3 | தேர்ப்பாகன் |
| | ” | குறுந்.400:3-5 | தேர்ப்பாகன் |
| | ” | குறுந்.250:4 | தேர்ப்பாகன் |
| 55. | பொதும்பிற்புல்லாளங்கண்ணியார் | அகநா.154:10-12 | தேர்ப்பாகன் |
| 56. | மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார் | அகநா.56:9-10 | பாணர் |
| 57. | மதுரை இளம்பாசிரியன் சேந்தன் கூத்தனார் | அகநா.348:2-8 | குறவன் |
| 58. | மதுரைக் கண்ணத்தனார் | நற்.353:1-2 | பருத்திப்பெண்டிர் |
| 59. | மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் | நெடுநல்.67-70 | ஆடல் மகளிர் |
| | ” | நெடுநல்.80-86 | தச்சன் |
| | ” | அகநா.78:7 | குறவன் |
| 60. | மதுரை எழுத்தாளன் சேந்தம் பூதனார் | அகநா.207:1-4 | உமணர் |
| 61. | மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் | அகநா.320:1-4 | பரதவர் |
| 62. | மதுரைச் சுள்ளம் போதனார் | நற்.215:3-5 | பரதவர் |
| 63. | மதுரை மருதனிளநாகனார் | அகநா.34:3-4 | குறவன் |
| | ” | அகநா.368:1-2 | புனவன் |
| | ” | கலி.66:16-18 | துணங்கையர் |
| | ” | கலி.70:11-14 | துணங்கையர் |
| | ” | கலி.81:25-26 | ஊர்க்காப்பாளர் |
| | ” | கலி.72:13-14 | புலைத்தி |

| | | | |
|---|---|---|---|
| | ” | அகநா.34:11-12 | புலைத்தி |
| | ” | அகநா.245:7-12 | எயிற்றியர் |
| 64. | மருங்கூர்கிழார் பெருங்கண்ணனார் | அகநா.80:4-6 | பரதவர் |
| 65. | மாறன்வழுதி | நற்.97:6-9 | உழத்தியர் |
| 66. | மாமூலனார் | அகநா.187:21-23 | பரதவர் |
| | ” | அகநா.65:11 | பரதவர் |
| | ” | அகநா.295:8-12 | உமணர் |
| | ” | அகநா.331:5-7 | எயிற்றியர் |
| | ” | அகநா.359:7-10 | வயிரியர் |
| | ” | அகநா.55:7-9 | கொல்லன் |
| | ” | அகநா.295:10-11 | கிணறு தோண்டுபவர் |
| | ” | அகநா.1:5 | காரோடன் |
| | ” | அகநா.295:8-12 | உமணர் |
| | ” | அகநா.331:5-7 | எயிற்றியர் |
| | ” | அகநா.359:7-9 | கூத்தர் |
| 67. | மாறோக்கத்து நப்பசலையார் | நற்.304:3 | வயிரியர் |
| 68. | மிளைக்கிழான் நல்வேட்டனார் | நற்.210:1-4 | உழவர் |
| 69. | முடங்கிக்கிடந்த நெடுஞ்சேரலாதன் | அகநா.30:10 | பரதவர் |
| | ” | அகநா.320:1-4 | பரதவர் |
| | ” | அகநா.30:5 | உமணர் |

| 70. | மீனெறி தூண்டிலார் | குறுந்.54:2-3 | புனவன் |
|---|---|---|---|
| 71. | மோசிக்கரையனார் | அகநா.260:5-10 | பரதவர் |
| 72. | வடமவண்ணக்கன் பேரிசாத்தனார் | நற்.299:7 | பருத்திப்பெண்டிர் |
| | ” | நற்.67:8-9 | பரதவர் |
| 73. | விற்றூற்று மூதெயினனார் | அகநா.37:7-11 | உழத்தியர் |
| | ” | அகநா.37:12-13 | உழத்தியர் |
| 74. | வேம்பற்றூர்க்குமரனார் | அகநா.157:1-4 | கள்அடு மகளிர் |
| 75. | ஆசிரியர் பெயர் தெரியவில்லை | நற்.125:10-12 | குறவன் |
| 76. | ” | நற்.168:3-4 | புனவன் |
| 77. | ” | நற்108:1-5 | புனவன் |
| 78. | ” | நற்.170:1-4 | ஆடல் மகளிர் |
| 79. | ” | நற்.175:3-4 | பரதவர் |
| 80. | ” | நற்.45:6-7 | பரதவர் |
| 81. | ” | நற்.183:1-5 | உமணர் |
| 82. | ” | நற்.125:3-4 | கொல்லன் |

## அட்டவணை-3

## சங்கப் புற இலக்கியங்களில் விளிம்புநிலை மக்களின் வாழ்வியல்

| வ. எண் | புலவர் | நூல் | விளிம்புநிலை மக்கள் |
|---|---|---|---|
| 1. | அள்ளூர் நன்முல்லையார் | புறநா.306:2 | கிணறு தோண்டுபவர் |
| 2. | ஆலங்குடி வங்கனார் | புறநா.319:14-15 | விறலியர் |
| 3. | ஆலந்தூர்கிழார் | புறநா.125:1-4 | நெசவாளர் |
| | ” | புறநா.34:8-11 | பாணர் |
| | ” | புறநா.69:2-4 | பாணர் |
| 4. | இடைக்காடனார் | புறநா.42:12-13 | உழவர் |
| | ” | புறநா.42:12 | அரிநர் |
| | ” | புறநா.42:14-15 | அறைநர் |
| 5. | இடைக்குன்றூர் கிழார் | புறநா.209:1-6 | தொழுவர் |
| | ” | புறநா.78 | கொண்டி மகளிர் |
| 6. | இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் | பதிற்.2:15-17 | வயிரியர் |
| 7. | உறையூர் முதுகூத்தனார் | புறநா.331:1 | கிணறு தோண்டுபவர் |
| 8. | ஐயூர் முடவனார் | புறநா.51 | கொண்டி மகளிர் |
| | ” | புறநா.399:4-8 | உழவர் |
| 9. | ஐயூர் மூலங்கிழார் | புறநா.21:7-9 | கொல்லர் |
| 10. | ஔவையார் | புறநா.206:6-10 | கண்ணுளர் |

| | ” | புறநா.311:1-4 | புலைத்தி |
|---|---|---|---|
| | ” | புறநா.87:2-4 | தச்சன் |
| 11. | கபிலர் | புறநா.114:2-3 | புலைத்தி |
| | ” | புறநா.109:15-18 | விறலியர் |
| | ” | பதிற்.79:1-2 | யானைப் பாகர் |
| | ” | பதிற்.7:116-118 | விறலியர் |
| | ” | பதிற்.71:4-5 | உழவர் |
| 12. | கருங்குழலாதனார் | புறநா.224:3 | பாணர் |
| 13. | காக்கைப்பாடினியார் நச்செள்ளையார் | பதிற்.66:7-8 | உழவர் |
| 14. | குமட்டூர் கண்ணனார் | பதிற்.2:15-17 | வயிரியர் |
| | ” | பதிற்.12:19-20 | பாணர் |
| | ” | பதிற்.12:21 | பாணர் |
| | ” | பதிற்.21:15 | பாணர் |
| | ” | பதிற்.23:5-6 | பாணர் |
| | ” | பதிற்.12:16-17 | பாணர் |
| 15. | கோவூர்க்கிழார் | புறநா.382:1-18 | பொருநர் |
| | ” | புறநா.386:1-27 | பொருநர் |
| 16. | கோனாட்டு எறிச்சளூர் மாடலன் மதுரைக் குமரனார் | புறநா.61:8 | உழவர் |
| | ” | புறநா.61:1 | கடைச்சியர் |

| 17. | தங்கால் பொற்கொல்லன் வெண்ணாகனார் | புறநா.326:4-5 | பருத்திப் பெண்டிர் |
|---|---|---|---|
| 18. | தும்பி சொகினனார் | புறநா.249:1-4 | வலைஞர் |
| 19. | நெடும்பல்லியத்தனார் | புறநா.64:1-2 | விறலியர் |
| 20. | நொச்சி நியமங்கிழார் | புறநா.293:2-6 | பூவிலைப் பெண்டிர் |
| 11. | பரணர் | பதிற்.5:15-22 | விறலியர் |
| | ” | பதிற்.5:21-22 | விறலியர் |
| | ” | பதிற்.5:21-24 | வயிரியர் |
| 22. | பிசிராந்தையார் | புறநா.212:2-5 | களமர் |
| 23. | பெருங்குன்றூர்கிழார் | பதிற்.9:21-23 | அரிநர் |
| 24. | பெருந்தலைச்சாத்தனார் | புறநா.164 | வயிரியர் |
| 25. | பொத்தியார் | புறநா.220:1-7 | யானைப்பாகர் |
| 26. | பொன்முடியார் | புறநா.312:3 | கொல்லர் |
| 27. | மருத்துவன் தாமோதரனார் | புறநா.60:4-5 | விறலியர் |
| 28. | மாங்குடி மருதனார் | புறநா.24:10-16 | பரத்தியர் |
| | ” | மதுரைக்.643-653 | ஊர்க்காப்பாளர் |
| | ” | மதுரைக்.216-219 | விறலியர் |
| | ” | மதுரைக்.513 | கலிங்கம் பகர்நர் |
| | ” | மதுரைக்.671 | நாழிகைக் கணக்கர் |
| | ” | மதுரைக்.262-263 | உழவர் |
| | ” | மதுரைக்.259-260 | களமர் |

| | | | |
|---|---|---|---|
| | ” | மதுரைக்.523-525 | கூத்தர் |
| | ” | மதுரைக்.254-256 | வலைஞர் |
| | ” | மதுரைக்.570-583 | கொண்டி மகளிர் |
| | ” | மதுரைக்.416-423 | பரத்தையர் |
| | ” | மதுரைக்.164-166 | பரத்தையர் |
| 29. | ஆசிரியர் பெயர் தெரியவில்லை | புறநா.115:1-4 | பாணர் |

## அட்டவணை-4

## ஆற்றுப்படை நூல்களில் விளிம்புநிலை மக்களின் வாழ்வியல்

| வ. எண் | புலவர் | நூல் | விளிம்புநிலை மக்கள் |
|---|---|---|---|
| 1. | பெருங்கௌசிகனார் | கூத்தராற்.153-155 | குறவன் |
| | ” | கூத்தராற்.319-324 | குறவன் |
| | ” | கூத்தராற்.330-334 | குறவன் |
| | ” | கூத்தராற்.339 | குறவன் |
| | ” | கூத்தராற்.271-274 | குறவன் |
| | ” | கூத்தராற்.151-152 | குறவன் |
| | ” | கூத்தராற்.325-328 | யானைப்பாகர் |
| | ” | கூத்தராற்.358-359 | விறலியர் |
| | ” | கூத்தராற்.534-357 | விறலியர் |
| | ” | கூத்தராற்.114-115 | உழவர் |
| | ” | கூத்தராற்.463-464 | உழவர் |
| | ” | கூத்தராற்.455-459 | உழவர் |
| | ” | கூத்தராற்.463-464 | உழவர் |
| | ” | கூத்தராற்.469-470 | உழவர் |
| | ” | கூத்தராற்.471-472 | அரிநர் |
| | ” | கூத்தராற்.50 | வயிரியர் |
| | ” | கூத்தராற்.523-525 | கோடியர் |

| | ” | கூத்தராற்.49-50 | கண்ணுளர் |
|---|---|---|---|
| | ” | கூத்தராற்.13 | கண்ணுளர் |
| | ” | கூத்தராற்.385 | கண்ணுளர் |
| | ” | கூத்தராற்.488-491 | மறவர்கள் |
| | ” | கூத்தராற்.38-40 | பாணர் |
| 2. | கடியலூர் உருத்திரங்கண்ணனார் | பெரும்பாண்.134-147 | குறவன் |
| | ” | பெரும்பாண்.485-486 | விறலியர் |
| | ” | பெரும்பாண்.248-252 | தச்சன் |
| | ” | பெரும்பாண்.207-208 | கொல்லன் |
| | ” | பெரும்பாண்.224-226 | கொல்லன் |
| | ” | பெரும்பாண்.215-224 | உழவர் |
| | ” | பெரும்பாண்.197-206 | உழவர் |
| | ” | பெரும்பாண்.212-214 | களைஞர் |
| | ” | பெரும்பாண்.275-281 | பரதவமகளிர் |
| | ” | பெரும்பாண்.27 | வலைஞர் |
| | ” | பெரும்பாண்.275-282 | வலைஞர் |
| | ” | பெரும்பாண்.263-274 | வலைஞர் |
| | ” | பெரும்பாண்.336-340 | கள்அடு மகளிர் |
| | ” | பெரும்பாண்.339-346 | கள்அடு மகளிர் |
| | ” | பெரும்பாண்.87-89 | எயிற்றியர் |

| | ” | பெரும்பாண்.97-100 | எயிற்றியர் |
|---|---|---|---|
| | ” | பெரும்பாண்.20-21 | பாணர் |
| | ” | பெரும்பாண்.462-463 | பாணர் |
| 3 | இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் | சிறுபாண்.13-34 | தச்சன் |
| | ” | சிறுபாண்.193-194 | உழவர் |
| | ” | சிறுபாண்.195 | உழவர் |
| | ” | சிறுபாண்.203-206 | பொருநர் |
| | ” | சிறுபாண்.125 | கோடியர் |
| | ” | சிறுபாண்.154-159 | நுளைத்தியர் |
| | ” | சிறுபாண்.55-61 | உமணர் |
| | ” | சிறுபாண்.175-177 | எயிற்றியர் |
| | ” | சிறுபாண்.34-37 | பாணர் |
| 4. | முடத்தாமக்கண்ணியார் பாடியது | பொருந.109-110 | விறலியர் |
| | ” | பொருந.80-89 | பொருநர் |
| | ” | பொருந.53-57 | பொருநர் |
| | ” | பொருந.46-65 | உமணர் |
| | ” | பொருந.180-182 | பாணர் |